தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்

# குலசேகரர்



சர்வோதய இலக்கியப் பண்ணை
மதுரை - 625001
1978

சர்வோதய இலக்கியப் பண்ணை

**குலசேகரர்**

தமிழறிஞர்களில் மூத்த மேதையான
பேராசிரியர் டாக்டர் தெ. பொ. மீனாட்சிசுந்தரனார்
1901 ஆம் ஆண்டில் பிறந்தார்.
வரலாறு, அரசியல், பொருளாதாரம், சட்டம்
முதலிய துறைகளில் பட்டம் பெற்ற இவர்
இந்திய விடுதலைப் போராட்டத்தில் ஈடுபட்டுச் சிறை சென்றார்.
மகாத்மா காந்தியடிகளின் சீடர்.
ராஜாஜி, ஈ. வெ. ரா. பெரியார், கே. காமராஜ்,
எஸ். சத்தியமூர்த்தி, எஸ். சீனிவாச ஐயங்கார்,
சி. பி. ராமசாமி ஐயர், எஸ். ராதாகிருஷ்ணன்,
உ. வே. சாமிநாதையர், மறைமலையடிகள், திரு. வி. க.,
கோ. வடிவேல் செட்டியார், சுநித்குமார் சாட்டர்ஜி,
எமனோ, பர்ரோ, காத்ரே, பிலியோசாத் முதலிய
மேதைகளுடன் நெருங்கிய தொடர்புடையவர்.
தென்னகத்தில் ஒப்பிலக்கியத் துறைக்கு
தெ. பொ. மீ. வித்திட்டார்.
தமிழ் இலக்கியத் திறனாய்வை
அனைத்துலகத் தரத்திற்கு உயர்த்தினார்.
தமிழ், வடமொழி, ஆங்கிலம், பிரெஞ்சு உள்ளிட்ட
பல மொழிகளில் அறிஞரான இவர்
'பன் மொழிப் புலவர்'
எனப் பாராட்டப்படுகிறார்.
மொழியியல், சமயம், தத்துவம் உள்ளிட்ட
பல துறைகளில் மேதையான இவர்
'பல்கலைச் செல்வர்'
எனப் பட்டம் பெற்றார்.
தென்னக மொழியியல் துறையின் தந்தையான பேராசிரியர்
அனைத்துலக ஒருமைப்பாட்டுக்காக
அன்புள்ளமும் தொண்டுள்ளமும் கொண்டு
ஓய்வின்றிப் பாடுபட்டு வருகிறார்.
சீரிய கல்வி நிபுணரான இவர்
மகரிஷி மகேஷ் யோகியின் ஆழ்நிலை தியான முறை மூலம்
குற்றவாளிகளைத் திருத்தவும் புதிய யுகத்தைச் சிருஷ்டிக்கவும்
முயன்று வருகிறார்.

முதற் பதிப்பு : கலைக்கதிர் வெளியீடு, பிப்ரவரி, 1961
இரண்டாம் பதிப்பு : சித்தார்த்தா வெளியீடு, பிப்ரவரி, 1978

மலிவுப் பதிப்பு : ரூ. 6-00

இந்திய அரசு சலுகை விலையில் வழங்கிய
மலிவுத் தாளில் இந்நூல் அச்சிடப்பட்டுள்ளது.

அச்சிட்டோர் :

மீரா பிரிண்டர்ஸ்
276-வடக்கு மாசி வீதி
மதுரை-625001

விற்பனை உரிமை :

சர்வோதய இலக்கியப் பண்ணை
32/1, மேல வெளி வீதி
மதுரை-625001
தொலைபேசி—31746

வெளியிட்டோர் :

சித்தார்த்தா பப்ளிஷிங் ஹவுஸ்
276, வடக்கு மாசி வீதி
மதுரை-625001

## உள்ளுறை

— ஃ —

## பதிப்புரை

பேராசிரியர் டாக்டர் தெ. பொ. மீ. அவர்களின் எண்பதாவது பிறந்த ஆண்டான 1980 ஆம் ஆண்டிற்குள் அவருடை அரிய படைப்புக்களை எண்பது தொகுதிகளாக வெளியிடவேண்டும் என்னும் மாபெரும் திட்டத்துடன் செயல்பட்டுவருகிறோம். இருபதாம் நூற்றாண்டில் தமிழகத்தில் மிக அதிகமாகப் படித்த, சிந்தித்த, எழுதிய, செயல்பட்ட தமிழ்மேதை அவரே என்பதில் ஐயமில்லை. ''சர்வோதய இலக்கியப் பண்ணை தெ. பொ. மீ. நூல்கள் வரிசையில்'' ஐந்தாவது தொகுதியாக வெளிவரும் 'குலசேகரர்' என்னும் இந்நூலை வெளியிடுவதில் பெரிதும் மகிழ்கிறோம். வாய்ப்பளித்த பேராசிரியருக்கு நன்றி. புதிதாகத் தோன்றியுள்ள சித்தார்த்தா பதிப்பகத்தாரின் முதல் நூலாக இந்நூல் அமைகிறது. அறிவுத் தீபத்தை உயர ஏந்த மீண்டுமொரு முறை சித்தார்த்தன் தோன்றிவிட்டான் என்றுதான் கூறவேண்டும்.

23-2-1978

சித்தார்த்தா பதிப்பகத்தார்

## ஆசிரியரின் புதிய முன்னுரை

என் அறுபதாண்டு நினைவின்போது இந்நூலை பு. சா. கோ. கல்விக் குழுத் தலைவர் திரு. G. R. தாமோதரனுர் கலைக்கதிர் வெளியீடாக உலகிற்குத் தந்தார். ஏறக் குறைய 17 ஆண்டுகள் உருண்டோடி விட்டன. பல ஆண்டுகளாக இந்த நூலினை வேண்டுவோர் பெறமுடியாமலே போய் விட்டது. இப்போது நண்பர் திரு. ஜெயப் பிரகாசனுர் வற்புறுத்தலினுலும் முயற்சியாலும் இரண்டாம் பதிப்பாக வெளிவருகிறது. இந்நூலை வெளியிடும் சித்தார்த்தா பதிப்பகத்தாருக்கும் விற்பனை உரிமையை ஏற்கும் சர்வோதய இலக்கியப் பண்ணையின் அறங்காவலர் குழுத்தலைவர் பேராசிரியர் திரு. க. அருணசலனுர் அவர்களுக்கும் செயலர் திரு. சு. லோகனுதனுர் அவர்களுக்கும், பிற ஊழியர்களுக்கும் நூலை அழகுற அச்சிட்ட மீரா அச்சகத்தாருக்கும் அச்சுப் பிரதிகளைத் திருத்தி உதவிய திரு. R. சீனிவாசன், திரு. K. கிருஷ்ண பிள்ளை, திரு. வெ. பூமிநாதன் அவர்களுக்கும் எனது நன்றி.

வாழ்க !

அன்பன்

தெ. பொ. மீனுட்சிசுந்தரன்

கலைக்கதிர் பதிப்பின்

# பதிப்புரை

திரு. தெ. பொ. மீனாட்சிசுந்தரனார் அவர்களின் பெரும் புலமையும் அவர் ஆற்றிவரும் அரும் பணியும் தமிழகம் நன்கு அறியும். பல்கலைச் செல்வராய், பன்மொழிப் புலவராய் அவர் பல்லாண்டுகளாகத் தமிழுக்கு ஆக்கந் தந்து வருகிறார். இருபத்தைந்து ஆண்டுகளுக்கு முன்பிருந்தே பல இளைஞர்களுக்குத் தமிழறிவித்து அவர்கள் சிறந்த புலவர்களாய் ஒளிரும் வண்ணம் செய்துள்ளார். தமிழில் எம். ஏ. பட்டம் பெற விரும்பியோர்க்குத் தனி வகுப்பு நடத்தித் தேர்ச்சிபெற உதவியுள்ளார்.

பத்துப்பாட்டு மாநாடு, தொல்காப்பிய மாநாடு போன்ற பல இலக்கிய மாநாடுகளை நடத்தித் தமிழ் மக்களிடையே தமிழுணர்வைப் பெருக்கி யுள்ளார். ஓர் இம்மியும் கைம்மாறு கருதாது அவர் இத்துணையும் செய்தார் எனின் அவர்தம் தன்னலங் கருதாத் தனிப் பெருந்தகவு விளங்குகிற தன்றோ? இன்னும், அவர் சென்னை அரசினர் மாநிலக் கல்லூரியில் தமிழ்ப் பேராசிரியராய் இருந்து பல மாணவர்களுக்குத் தமிழறிவு வழங்கியதோடு அவர்களைத் தமிழ் இலக்கிய இலக்கண ஆராய்ச்சிகளில் ஈடுபடுத்தி ஆராய்ச்சிப் பட்டங்கள் பெறச் செய்துள்ளனர். அச் சீரிய பணியைத் தொடர்ந்து அவர் தற்போது அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் ஆற்றி வருகிறார். அங்குப் பல மாணவர்கள் அவர்தம் கண்காணிப்பில் மொழியியல் துறையிலும், தமிழ் இலக்கண இலக்கியத் துறைகளிலும் ஆராய்ச்சி பலநிகழ்த்தி வருகின்றனர். அவ்வாராய்ச்சிகளால் நம் தமிழ்மொழி பெரும் பயன் எய்தும் என்று கூறவேண்டுவ தில்லை. அவர் மொழியியல் (Linguistics) துறையிலும் வல்லுநராய் அண்ணாமலைப் பல்கலைக் கழகத்தில் அத் துறைக்குத் தலைமை தாங்கி அதனையும் சிறப்புற வளர்த்து வருகிறார்.

கல்லூரியில் எல்லாப் பாடங்களையும் நம் தாய்மொழி வாயிலாகப் பயில்வதே கல்வி வளர்ச்சிக்குரிய சிறந்த வழி என்பதை நன்குணர்ந்து, அவர் கல்லூரித் தமிழ்க் குழுவில் உறுப்பினர் பொறுப்பேற்றுப் பி. ஏ. பட்ட வகுப்புப் பாடங்களைத் தற்போது தமிழில் கற்பிக்க வழி வகுத்துள்ளார்.

அவர் தமிழ்மொழிக்கே யன்றித் தமிழ் நாட்டுக்கும் பணி பல புரிந்துள்ளார். நம் நாட்டின் விடுதலைப் போராட்டத்தில் அவர் ஈடு பட்டுச் செய்த தியாகங்களை நம் நாடு அறியும்.

இப் பெருந்தகையார்க்கு 1961-ஆம் ஆண்டு சனவரி மாதத்தோடு அறுபது ஆண்டு நிறைவெய்துகிறது. அவர்தம் மணிவிழா நினைவாற்றலாக அவர் இயற்றிய நூல்கள் சிலவற்றை வெளியிடும் பணியைக் கலைக்கதிர் ஏற்றுள்ளது. அவற்றுள் ஒன்றே இந்நூல். குலசேகரரின் பத்துத் திருமொழிகளில் முதல் ஐந்தின்கண் அடங்கியுள்ள தெய்வீகத் தத்துவங்களையும், நுட்பங்களையும், நயங்களையும் மிகச் சுவைபட இந்நூல் விளக்குகிறது. இதன்கண் பக்தி வெள்ளம் பெருக்கெடுத்தோடுகிறது. இந்நூலினைப் பயில்வார் திரு. தெ. பொ. மீ. அவர்கள் குலசேகரர் பாடல்களில் இரண்டறக் கலந்து நிற்கும் தன்மையை உணர்வர். திரு. தெ. பொ. மீ. அவர்கள் நீடு வாழ்ந்து இன்னும் தமிழுக்குப் பல்லாற்றானும் ஆக்கமளிக்க வேண்டுமென இறைவனை இறைஞ்சுகின்றேன்.

**ஜி. ஆர். தாமோதரன்**

## முதற் பதிப்பின்

# முன்னுரை

தமிழைக் கலையாக வளர்க்கவேண்டு மென்று மாலைதோறும் பல இடங்களில் இரவுக் கல்லூரி நடத்தினர், என்னுடைய நண்பர் திரு. டி. என். சேஷாசலம் அவர்கள். அதையொட்டிச் சிறந்த இலக்கியக் கிழமைத்தாளும் வெளியிட்டார். 'கலா நிலையம்' என்ற பெயருக்கேற்ப அது சிறந்து விளங்கியது. ஆனல், கால் நூற்ருண்டுக்கு முன் அத்தகைய முயற்சி நிலைக்க இடம் ஏது? அதனுல் கலாநிலையமும் மறைந்தது. பின்னர் என் நண்பரும் மறைந்தார். கலாநிலையத்தில் எழுத என்னை வற்புறுத்தியவர் அந் நண்பரே யாவர். அதன் பயனுக எழுதிய கட்டுரைகளில் குலசேகரரைப் பற்றியன இப்போது இந்த நூல்வடிவமாக வெளிவருகின்றன. குலசேகரரது பாட்டில் ஈடுபட்டு, அப்பாடல்களுக்கு வைணவப் பெருமக்கள் எழுதிய மணிப்பிரவாள உரையிலும் என்னை நான் மறந்த காலம் அது. வைணவ நூல்களின் ஆழத்தை ஒரு சிறிது காணச் செய்த பெரியோர்கள் திரு. பிரதிவாத பயங்கர அண்ணங்கராசாரிய அடிகளும், திருப்புறம்பயம் இராமசாமிநாயுடு அவர்களும், ஸ்ரீரங்கம் சடகோபாச்சாரியாருமே யாம். அவர்களுடைய திருவடிகளுக்கு என் வணக்கம். ஆனல், குலசேகரர் பாடல்களை வைணவப் பெருமக்களிடம் அரைகுறையாகக் கற்ற முறையைப் பின்பற்றி உலக முழுவதற்கும் பொதுவாகும் ஓர் உரையே நான் எழுதியுள்ளேன். இது மரபுக்கு முரணுனது என்ற குற்றத்தின்பாற் படும் என்பதனை அறிந்தே எழுதினேன். கண் திறந்துகொண்டு பகலிலேயே கிணற்றில் விழுவாரைத் தடுப்பார் யார்? என்ருலும் குலசேகரரிடத்திலுள்ள அன்பே இதனைச் செய்யத் தூண்டியது.

அந்தக் குலசேகரர் பாடிய பத்துத் திருமொழிகளில் முதல் ஐந்துக்கே உரை எழுதினேன். உண்மையில் எஞ்சி நிற்பனவே குலசே

கராது பாவின் சிறப்பினை உலகினுக்குக் காட்டுவன. அவற்றிற்கு உரை யெழுத வேண்டும் என்ற எண்ணம் உண்டு. இன்றைய தமிழ் மக்கள் எண்ணம் எப்படியோ? ஆண்டவன் அருள் எப்படியோ?

என்னுடைய நண்பர்கள் என்மேல் இருக்கும் அன்பினால் இதனையும் வெளியிடவேண்டுமென்று வற்புறுத்தினார்கள். எழுதவேண்டு மென்றார் திரு. சேஷாசலம், பதிப்பிக்கவேண்டு மென்கிறார் திரு ஜி. ஆர். தாமோதரன். எடுப்பார் கைப்பிள்ளையாக இருப்பதன்றி யானெனத் தடுத்து நிற்பது இப்போது என்னால் ஆவதில்லை. அன்பிற்கு ஆண்டவனும் அடிமையானார்; அடியேன் நிலைமை என்ன?

பூ. சா. கோ. குடும்பம் இந்து மதத்தில் அசையாத நம்பிக்கை கொண்டது. இன்றும் அக்குடும்பத்தின் பெரியார் திரு. பி.எஸ்.ஜி. வேங்கடசாமிநாயுடு அவர்கள் யாருக்கும் அஞ்சாது பரந்த நாமமணிந்து தம்முள்ளத்து உவகைப் பரப்பினைக் காட்டி வருகின்றார். அவருடைய திருவடிகட்குக் காணிக்கையாக இந்த நூல் விளங்குவதாக.

**தெ. பொ. மீனாட்சிசுந்தரன்**

# 1

## ஊசியின் காதில் ஒட்டை நுழைந்தது

எனது நூல் :

எல்லா நூல்களிலும் கடவுள் நூலே சிறந்த தென்பர். கடவுள் நூல் எனத் தமிழ்நாட்டிலே கருதப்படுவன திருமுறைகளும், நாலாயிர மும், திருக்குறளுமே யாகும். இவையே தமிழரது திருமறை. இவற்றில் திருக்குறளோ எல்லோருக்கும் பொதுவாகிப் பொலிகின்றது. இதனைச் சிறுநூல் என இகழ்வார் இல்லை. ஆதலின், பெருநூல் எனப் புகழ் வாரும் இல்லை; திருநூல் என்றே சிறந்து திகழ்கின்றது. ஒப்பமுடிந்த இடத்தில் ஊக்கமேன்? உள்ளக் கிளர்ச்சி ஏன்? மாருட்ட மில்லாதபோது போராட்டமேது? செத்த பாம்பு அடிப்பார் சிலரே யன்றிப் பலரில்லையே! 'ஆம்' 'ஆம்' என்று அனைவரும் ஒன்ருகி உடன்பட்டுச் செல்லும்போது, நமது உள்ளம் தூக்கங்கொண்டு வீழ்ந்து கிடக்கின்றது; கூடையில் பாம்பென ஆடா தடங்கி நிற்கின்றது. யாரேனும் "இல்லை" என்று எதிர் மறுத்தால், "உண்டு" என்று ஊக்கங்கொண்டு விழித்தெழுகின்றது; சினங் கொண்ட பாம்புபோலச் சீறிவிழுகின்றது. இவ்வூக்கப் பெருக்கம் திருக்குற ளிடத்தேது? "சிவன் பெரியவன்" என்ருல், "திருமால் பெரியவன்" என்று மன்ருட ஆள் உண்டு. ஆதலின் அந்த விழிப்பு நிலையைத் திருமுறையிலும் நாலாயிரத்திலும் காண்கின்ருேம். திருக் குறளோ கடல்போலவும் காற்றுப்போலவும் கருவானம்போலவும் எல்லோர்க்கும் பொதுவாகி நிற்கின்றது. காற்றில்லையானுல் கண்ணி மைக்கவும் இயலாது. எனினும், அதுபற்றிக் கைகலந்து போராடுவார் காற்ருேட்டமான காட்டிலும் இல்லை; காற்ருேட்டமில்லா நாட்டினும் இல்லை. ஆனுல், துரும்பாகிய இரும்பாணியைப்பற்றி என்ன போரிடு கின்ருேம்! களவாடியவன் கையையும் காலையும் கழுத்தையும் வெட் டுவோம். கையிருப்பெல்லாம் இழந்தும் மன்ருடிக் கடுஞ் சிறையிற் காவல் வைப்போம். ஏன்? அது பொதுவுடைமை யாகாது, நமது உடைமையாதலினுல் அன்ருே? திருமுறையினையும் நாலாயிரத்தை

யும் நம்முடைய கைப்பொருள் எனக் கருதிக் களிக்கின்றோம், கடிகின்றோம், கதறுகின்றோம். கடல் போலப் பரந்த கங்கை வெள்ளத்தைக் கட்டியாள நம்மவர் கனவிலும் கருதுவ தில்லை. அதனையே செப்புக் குடத்திலும் பித்தளைக் குடத்திலும் முகந்து அடைத்த போது, அதில் ஒவ்வொரு துளிக்கும் ஒவ்வொர் ஊழி கடுந் தவம் கிடந்து போராடுவோம். குடமுருளத் தலையுருளக் குருதி வெள்ளம் கூடிப் பெருகும். கடலுக்கு மேலும் பரந்து, கண்ட இடத்தும் காணு இடத்தும் கலந்தருளிக் கரந்து நின்ற கடவுளைப்பற்றிக் கடும் போர் புரிவாரில்லை; கோழிச் சண்டையும் போடுவாரில்லை. ஆனால், அக் கடவுளைக் கல்லிலும் செம்பிலும் முகந்து வைத்தும் கோயிலில் பூட்டித் தாளிட்டுவைத்தும் வழிபடத் தொடங்குகையில் 'என் கடவுள்' ''உன் கடவுள்'' என்ற பெருவழக்கும் தொடங்குகிறது. குடத்தின் வடிவே குடத்தில் நீருக்கும் அமைவது போல, எண்ணியவன் எண்ணத்தின் வடிவே இறைவனுக்கும் அமைவதால், எண்ணிறந்த கடவுள்களாக விரிந்த அவ்விடத்தில் எதுதான் இறைவனது இயற்கை வடிவம் என எல்லோரும் தேடப் புகுகின்றனர். தாம், தாம் கண்டதே கடவுள் எனக் கொண்டு வாய் வழக்கோடு நில்லாது போர் முழக்கமும் புரிகின்றனர். சினம் அவிந்த சிவநிலையில் சினம் பொங்கி எழுகின்றது. அங்குதான் மக்கள் துடிதுடிக்கின்றனர், பதைபதைக்கின்றனர். உயிரும் உடலும் உருகி வழியத் தம்மை மறந்து தனியே நிற்கின்றனர். எனவே, மக்களுக்கு இவ்வகையில் திருமுறை யினிடத்தும் நாலாயி-ரத்தினிடத்தும் பற்று மிகுதியும் உண்டு என்பதாயிற்று.

வடமொழி மறை :

வடமொழி மறையும் கடவுள் நூலே. ஆனால், ஒரு வகையில் வடமொழியினும் தமிழ்மறை தமிழ் நாட்டிலே சிறந்து விளங்குகின்-றது. தமிழோ இங்குள்ளாரது தாய்மொழி. வடமொழியோ பலர்க்கு ஓசையினளவாய் நிற்பதொரு மொழி. அதன் பொருளறிந் தோர் சிலரே. அதனை ஓதி உணர்ந்து உள்ளமுருகி உவகைக்கடலில் திளைப்பார் ஒரு சிலரே. கடவுளைப்பற்றிய நூல்கள் வடமொழியில் இருந்த வரையில் கடவுளைப் பற்றியறிந்தவர் சிலரே. பௌத்தர்களும் சமணர்களும் இவ்வுள வறிந்து தம் நூல்களைத் தமிழில் எழுதத் தொடங்கினர். அவர்கள் கொள்கைகள் எங்கும் பரவுவன ஆயின. இரும்பை இரும்பாலேயே வெட்டுவது போலத் தமிழ் மொழி கொண்டே அந்தக் கொள்கைகளை நம் நாட்டு அடியார்கள் வென்

றனர். செவிக்கினிய திருப்பாடல்களைத் தேனும் கைக்கப் பாடித் தெவிட்டாத சிலர் பேரின்பம் தேக்கெறிய நின்றனர். பாட்டேயுரு வான பெருமானைப் பாட்டால் பாடித் தாமும் பார்த்தனர்; பிறரையும் பார்க்கச் செய்தனர். இந்த வகையில் வடமொழி மறைக்கும் தமிழ் மறைக்கும் உள்ள வேற்றுமையினைச் சுவை ததும்பப் பாட்டாகப் பாடினார் பாடவல்ல சிவப்பிரகாசனர்.

''விளங்(கு) இழை பகிர்ந்த மெய்யுடை முக்கண்
காரணன் உரைஎனும் ஆரண மொழியோ
ஆதிசீர் பரவும் வாதவூர் அண்ணல்
மலர்வாய்ப் பிறந்த வாசகத் தேனோ
யாதோ சிறந்தது'' என்குவீர் ஆயின்
வேதம் ஓதின் விழிநீர் பெருக்கி
நெஞ்ச(ம்) நெக்(கு) உருகி நிற்பவர்க் காண்கிலேம்
திருவாசகம் இங்(கு) ஒருகால் ஓதில்
கருங்கல் மனமும் கரைந்(து) உகக் கண்கள்
தொடுமணற் கேணியில் சுரந்துநீர் பாய
மெய்ம்மயிர் பொடிப்ப விதிர்விதிர்ப்(பு) எய்தி
அன்பர் ஆகுநர் அன்றி
மன்பதை உலகில் மற்றையர் இலரே.''

''விளங்கும் நகைகளை அணிந்த மலைமகள் பங்கிட்டுக் கொண்ட உடலினை உடையவன்; முக்கண்ணன்; அனைத்திற்கும் அடியாகிய காரணன்; அத்தகைய சிவபெருமானே கூறியதாகிய திருமறை உயர்ந்ததா? அந்த ஆதி முதல்வனுடைய சீர்களைப் பாடி வணங்கும் - மாணிக்கவாசகர் - வாதவூரரது மலர்வாயிற் பிறந்த திருவாசகம் என்னும் தேன் உயர்ந்ததா?-என்று கேட்பீர்களேயானால் நீங்களே கண்ணால் கண்டறியுங்கள். வடமொழி மறையை ஓதினால் கண்களில் நீர் கலங்கி வழிய நெஞ்சம் நெக்கு உருகி நிற்பவரை நாம் காண்கின்றோமா? இல்லையே! ஆனால், திருவாசகத்தை ஒருமுறை ஓதினவுடனே முன்பின் அறியாதவனும் தன்மனம் கருங்கல் மனமாக இருந்தாலும் மன நெகிழ்ந்துருகித் தனது கண்களினின்று நீரானது மஃ.ாற்கிணற்றிலிருந்து சுரக்கும் நீர் போலப் பொங்கி வழிய மயிர்க்கூச்செறிய விதிர்விதிர்த்து அன்பே உருவாகி விடுகின்றான். பலவகையான மக்களும் உள்ள இவ்வுலகில் இவ்வாறு ஆகாதவர் யாரேனும் உளரோ? இல்லையே! கண்கூடாகவே திருவாசகத்தின் உயர்வினை நாம் காணவில்லையா?'' என்கிறார். திருவாசகத்தைப்

புகழ்ந்தது திருமுறையையும் நாலாயிரத்தையும் புகழ்ந்ததேயாம். அன்றியும் வடமொழி மறையினை நாற்பாற் குடியில் மேற்பாற் குடியினரே ஓதிவந்தனர். பொழுது இல்லாமையால் மற்றையோர் ஓத இயலாமற் போயிற்று. சிலநாள் செல்ல அதுவே வழக்கமும் ஆயிற்று. ஆனதும், சிலரே ஓதலாம், பலரும் ஓதலாகா தென ஓர் கட்டுக்கதைகட்டி விட்டனர். அஃதும் தமிழ் மறைக்கு நல்லதாயிற்று. பொருளறியாது சில சொல்வதை விட்டுத் தமிழில் பொருளறிந் தோதிப் புத்துயிர் பெற்றுப் புது நூல் பலவும் எழுதிப் பலரும் உதவினர். வடமொழி நான்மறையைக் கீழ்ப்பாற் குடியினர் கேட்கலாகாது, கற்றலாகாது; தமிழ் மறையினையோ எல்லோரும் எளிதில் கருத்தாரக் கற்கலாம், காதாரக் கேட்கலாம், வாயார ஓதலாம். இது தமிழ்க்கோர் உயர் வென்றூர் அவ்வுயர்வையும் உணர்ந்த சிவப்பிரகாசனூர். ''மட் கலத்தைக் கீழானோர் தொட்டால் அஃது இழிவடைகின்றது. பொற்கலத்தைக் கீழானோர் தொட்டாலும் இழிவடையாது உயர்ந்தே விளங்குகின்றது. மட்கலம் போன்றது வடமொழி நான்மறை, பொற்கலம் போன்றது தமிழ் மறை. அம்மட்டோ? நான்மறை ஓதினால் அறத்தால் வரும் பயன் பெறலாம். தமிழ்மறை ஓதினால் வீடே பெறலாம்.'

திருவார் பெருந்துறைச் செழுமலர்க் குருந்தின்
நீழல்வாய் உண்ட நிகரில் ஆனந்தத்
தேன்தேக்கு எறியும் செய்ய மாணிக்க
வாசகன் புகன்ற மதுர வாசகம்

யாவரும் ஓதும் இயற்கைத்(து) ஆதலின்
பொற்கலம் நிகர்க்கும். மதுர வாசகம்
ஓதின் முத்தி உறுபயன்.
வேதம் ஓதின் மெய்ப்பயன் அறமே.

இறைவனுக்கும் தமிழினிடத்தேதான் இணையிலாத பேரன்புண்டு என்றனர் தமிழ்ப் பாவாணர்கள். 'வானல்ல, மண்ணல்ல, நீரல்ல, தீயல்ல, வளியல்ல, ஒளியல்ல, இருளல்ல, உருவல்ல, ஏதும் அல்ல' என்று இறைவனைத் தேடிப்போய்க் காணாது நான்மறையும் அயர்வெய்தினவாம். ஆனால், அவ்விறைவனே அன்பெனும் பிடியுள் அகப்படு மலையாகி அன்பர் பாடிய பாடலைத் தேடி அத் திருப்பாடலைப் பாடுவார்பின்னே ஓடுவானும். திருமால் உலாப் போம்போது தமிழ் மறையை முன்னேதுவதும், நான்மறையைப் பின்னேதுவதும் இதனையே வற்புறுத்துகின்றனவாம்.

வேதத்தின் முன்செல்லும் மெய்யுணர்ந்
 தோர்விரிஞ் சன்முதலோர்
கோதற்ற ஞானக் கொழுந்தின்முன்
 செல்லும்; குணம்கடந்த
போதக் கடல் எங்கள் தென்குரு
 கூர்ப்புனி தன்கவியோர்
பாதத்தின் பின்செல்லு மேதொல்லை
 மூலப் பரஞ்சுடரே.

'தொன்றுதொட்டு எல்லாவற்றிற்கும் அடிப்படையான உயர்ந்ததோர் அறிவு விளக்கானது, நான்மறைக்கும் அகப்படாது முன் செல்லும். உண்மையுணர்ந்த மறையவன் முதலான குற்ற-மிலாத பேரறிஞரது அறிவுக்கும் எட்டாது அதனையும் கடந்து முன் செல்லும், உலகக் கலப்பு இல்லாத அறிவே கடலாய் குருகூரில் பிறந்த நம்மாழ்வாரது பாட்டின் ஓரடிக்குள் ஆழ்ந்து குளிக்கவேண்டி அதனைத் தேடி அதன்பின்னே செல்லும்' என்று கல்வியிற் பெரிய கம்பரே கூறுதல் காண்க. திருவாய் மொழிக்குச் சொல்லிய இச்சிறப்புத் தமிழ்த் திருமறை அனைத்திற்கும் பொருந்தும்.

**எறும்பு மொய்ப்பதேன் :**

தமிழ் மக்களது உள்ளத்தினை ஒருங்கே கவர்வன இவை என அறிந்தோம். இவ்வாறு மக்கள் மனத்தைக் கவர்வதற்கு அப்பாடல் களில் ஏதேனும் மறைபொருள் இருத்தல் வேண்டும்; தனிச்சுவை ததும்புதல் வேண்டும். அந்த நயத்தை நாம் நாடிச்செல்ல வேண் டாவா? சிவத்தைப் பேணும் சீரிய தவமும் திருமாலுக் கடிமை செய்யும் திறனும் தென்னாட்டில் வழங்கி வருவது திருமுறையும் நாலா யிரமும் சிறப்புற்றிருப்பதால் எனச் சொல்லவும் வேண்டுமா? கட வுளைப்பற்றிப் பற்றெழுந்தாலும், கடவுள் கரும்பல்லாது கல்லாய் இருப்பின் பல்லொடியக் கடிப்பார் இல்லையே! அதனை விரும்பி யுண் ணப்புகுவார் உலகில் இல்லையே! இனிப்புள்ள இடத்தையே எறும்பு மொய்க்கின்றது. நாலாயிரத்தில் நயம் இருப்பதால்தான் நாலு பேரும் பாடி யாடுகின்றனர். கடவுளைப்பற்றி நாலாயிரத்தில் பற்றுப் பிறந்தது என்கிறோம். வேறு ஆயிரம் நூல்கள் இருப்பவும், நாலா யிரத்தில் மக்களது உள்ளம் பள்ள மடையாகப் பாய்ந்தது தமிழ்த் திரு மறையில் உள்ள நூனயத்தால் என்பது தெளிவாகின்றது. அந் நூல்களை ஓதும்போது ஆண்டவனை அறிந்தவர்போல் ஆகின்றோம்.

கடவுளைக் காணலாகும் வகையில் இப் பெரியார்கள் கண்டறிந்தார்கள் என்பதையும், கண்டறிந்தபடி பாடி நம்மையும் காணச்செய்கின்றார்கள் என்பதையும் இவர்கள் பாடிய ஒவ்வோர் அடியும் விளக்குகின்றது.

மாசில் வீணையும் மாலை மதியமும்
வீசு தென்றலும் வீங்கிள வேனிலும்
மூசு வண்டறைப் பொய்கையும் போன்றதே
ஈசன் எந்தை இணையடி நீழலே.

கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ
மருப்பொசித்த மாதவன்றன் வாய்ச்சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல்லாழி வெண்சங்கே

முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டுண்ணும்
முகிழி ளஞ்சிறு தாமரைக் கையும்
எழில்கொள் தாம்புகொண்டு அடிப்பதற்கு எள்கு
நிலையும் வெண்டயிர் தோய்ந்தசெவ் வாயும்
அழுகையும் அஞ்சி நோக்கும்அந் நோக்கும்
அணிகொள் செஞ்சிறு வாய்நெளிப் பதுவும்
தொழுகையும் இவை கண்ட அசோதை
தொல்லை இன்பத்(து) இறுதிகண் டாளே

என்று பாடிய பெரியோர்கள் கடவுளைக் கண்டு அன்பு வெறி கொண்டவர்கள்; கல்லையும் செம்பையும் கண்டவர் அல்லர்; கட்டுக் கதையைக் கனவாகக் கண்டவரும் அல்லர்; கல்லிலும் செம்பிலும் கண்டதிலும் காணாததிலும் கட்டுக் கதையிலும் கனவிலும் எங்கும் நிறைந்த இறைவனைக் கண்டு இன்பவெள்ளத் தழுந்தியவர் ஆவர். அவர்கள் பாடலைப் படிக்கப் படிக்க அந்தப் பித்தும் வெறியும் நம் தலைக்கேறி விடுகின்றன.

காட்டிலோர் கைகாட்டி :

திருமுறையைவிட நாலாயிரத்திற்கோர் ஏற்றமுண்டு. அது பின்னவர் தந்ததொன்றே யன்றி நூலில் இல்லை. திருமாலின் திருவடியார்கள் தம் கொள்கைகள் அனைத்தும் நாலாயிரத்தினின்றும் வடித்தெடுத்துத் திரட்டியன என்று புகழ்ந்து, நாலாயிரத்திற்கு விரிவுரை எழுதப்புகுந்தார்கள். இராமாநுஜர் தமது கொள்கையை விளக்கக் கீதைக்கும் வேதாந்த சூத்திரத்திற்கும் விரிவுரை எழுதியதோடமையாது, திருவாய்மொழிக்கும் விரிவுரை எழுத வேண்டினார்.

தம்மை வழிபட்டுவந்த எம்பார் என்பாரை எழுதவும் கட்டளையிட்டார். பின்வந்த பெரியோர்களும் அவரைப் பின்பற்றி நாலாயிரத்திற்கும் நல்லதோர் உரை எழுதி உதவினர். சிவனடியாரோ, திருமுறைகளை உணர்ந்து பாடியாடினர். தம்மை வந்தடைந்தோருக்கு உரையகலம் கூறினர். விரிவுரையாக எழுதிவைத்திலர். இவ்வகையில் தான் நாலாயிரத்திற்கு ஓர் ஏற்றம் உண்டு என்றேமே யன்றி, வேறு வகையால் அன்று. உரை பயின்ற நூலினை உணர்ந்து ஓதுவது ஒரு சிறிது எளிதே யாகும். ஐயந்திரிபு அறத் திருமுறைகளை உரையின்றியே அறிந்தோதுவார் இல்லாமல் இல்லை. ஆனால், அத்தகையோர் ஒருசிலரே. தமிழ் அறிவில் நொண்டிகளாய்க் கிடக்கும் நாம், உரை என்னும் ஓர் ஊன்றுகோல் ஊன்றிச் சென்றால்தான் நாலாயிரத்திற்குள் நன்கு நடந்து செல்லமுடியும். இதுவே காட்டிலுள்ளதொரு கைகாட்டி மரம். அப்போதுதான் அது கண்தெரிந்த வழியாகின்றது. நாலாயிரத்தை ஓதியுணர்ந்த பின்னர்த் திருமுறைகளைப் பாடியறிதல் எளிதாகலாம். எறக் குறைய ஒரே காலத் தெழுந்தவையாதலின் சொன்னேக்கும் பொருளுக்கும் ஒருபடித்தாகவே இருக்கின்றன. ஒன்றையறிந்தால் மற்றொன்றை அறிதல் ஒன்றும் அரிதன்று. நாலாயிரத்தில் நடந்து சென்றவன் திருமுறையில் ஓடித் திரியலாம்.

## பலநாள் திருடன் ஒருநாள் அகப்பட்டானா?

இவ்வாறு இந்த நாலாயிரம் போற்றிப் புகழப்படுவது இன்றல்ல, நேற்றல்ல. இப்போதைக்கு ஒன்பது நூற்றாண்டிற்கு முன்னிருந்த இராமானுசர் காலத்திலேயே தொகுக்கப்பட்டுத் திருமாலின் திருமறையாயது இந்நூல். அவருக்குச் சில நூற்றாண்டு-கள் முன்னிருந்த நாதமுனிகளது காலத்திலேயே இவ்வுயர் நிலை-யடைந்த தெனலாம். ஆழ்வார்களை மறைமொழி ஓதிய நிறைமொழி மாந்தரோடு ஒக்கவைத் தெண்ணி அவர்களது பாடலையும் ஆரிடம் (ரிஷிகளது வாக்கு) என்று புகழ்வர் உரையாசிரியர்கள் அனைவரும். ஆதலால், இஃதோர் ஆயிரங்காலத்துப் பயிர். எத்துணையோ புயற்காற்று, எவ்வளவோ பெருவெள்ளம், எத்தனையோ பேரிடி, எத்த-னையோ அரசர், எத்தனையோ கொள்கை-இவற்றிற் கெல்லாம் அசையாதும் அழியாதும் மாறாத இளமையோடு இன்றெழுந்த காலைச் செவ்வானம்போலக் கண்கவர் வனப்போடு புத்தம்புதிதாகப் பொலிந்து தோன்றி உலகினரை எழுப்பிக் கடவுளாம் கதிரவனைக் காட்டிவிடுகின்றது. ''ஒரு சிலரை எந்நாளும் ஏய்க்கலாம், எல்-லோரையும் ஒரு சில நாள் ஏய்க்கலாம், எல்லோரையும் எந்நாளும்

ஏய்த்தல் இயலாது'' என்று அமெரிக்கா தேசத்து லிங்கன் என்ற பெரியார் எடுத்துரைத்தார். ''பலநாள் திருடன் ஒருநாள் அகப்படுவான்'' என்று நமது பாட்டி பாடுகின்றாள். இஃது எல்லோருக்கும் ஒப்ப முடிந்த உண்மை. ஆகவே, எல்லாராலும் எந்நாளும் போற்றிப் புகழப்படும் நாலாயிரத்தில் ஏமாற்றம் ஒன்றுமில்லை. உண்மையிலேயே உயர்ந்ததொரு நூலாதலின் உலகத்தோர் உயர்வாக எண்ணுகின்றனர். கடவுளைக் கண்டதைக் கறந்த பால் கறந்தபடி கூறும் நூல் இதுவாகும்.

## ஆயிரம் காலத்துப் பயிர்

முதலாழ்வார்களது காலத்தைப்பற்றிக் கருத்து வேற்றுமை இருந்தாலும், குலசேகரர் அவர்களுக்குப்பின் வந்தவர் என்பதில் ஐயம் இல்லை. ஆதலின், இவர் பல்லவர் காலத்தவர் எனலாம். ஒன்பதாம் நூற்றுண்டில் எழுதப்பெற்ற ஒரு கல்வெட்டு ''தேட்டருந்திறல் தேனினை'' என வரும் இவரது திருமொழியைத் திருக்கோயிலில் பாடுவதற்காகக் கட்டளை ஏற்படுத்துகின்றது. இவை நடப்பதற்குச் சிலகாலம் முன்னதாக இவர் வாழ்ந்திருத்தல் வேண்டும். எவ்வாருயினும், எட்டாம் நூற்றுண்டின் ஈற்றில் வந்தவர் என்று கூறுவதோடு இந்த ஆராய்ச்சியை முடித்துக்கொள்ளலாம்.

## பெருமாள் கதை

கேரளோத்பத்தி என்பது சேரநாட்டைப்பற்றி வழங்கிவரும் கதையைக் கூறுமொரு நூல். சேர நாடு முதன்முதலில் நான்கு பிரிவாகப் பிரிந்து நான்கு கழகத்தினரின் ஆட்சியில் இருந்துவந்த தென்றும், அந்த நான்கு கழகத்தினரும் ஒன்றுசேர்ந்து தம்மை ஆள ஒரு நம்பியைத் தேர்ந்தெடுத்தனர் என்றும், இவ்வாறு தேர்ந்தெடுத்த நம்பிகள் கொடுங்கோன் மன்னராய்க் கொடுமை செய்துவந்தமையால் கழகத்தார் அனைவரும் ஒருங்கு கூடி வேறுநாட்டில் மேன்மைபெற்று விளங்கிய அரசரை வரவழைத்துத் தமக்கு அரசராக ஆக்கிக்கொண்டனர் என்றும் அந்நூல் கூறும். இவ்வாறு அரசர்களாக வந்தவர்கள் பன்னிரண்டாண்டிற்குமேல் அரசராக ஆளுதல் கூடாது என்று ஒரு கட்டுப்பாடு ஏற்படுத்திக் கொண்டனராம். அத்தகைய கட்டுப்பாடு ஒன்று இருந்தால்தான் அரசர்கள் குடிகளது நன்மையைக் கருதி ஆள முடியும் என்று அந்நாட்டினர்கள் கருதினர்களாம். இவ்வாறு பன்னிரண்டாண்டிற்கொருமுறை தேர்ந்தெடுத்த அரசர்களுக்குப் பெருமாள்கள் என்ற சிறப்புப் பெயர் வழங்கியது. அத்தகையோர் இருபத்தைந்து

பெருமாள்கள் சேரநாட்டை ஆண்டனராம். அவர்களில் குலசேகரர் என்ற பெயர் உடையவர்கள் இருவர் உள்ளனர். அவ்விருவரில் ஒருவர் நம் குலசேகரர்.

பெரிய பெருமாளா? சேரர் பெருமாளா?

இந்தப் பெருமாள் கதையால் ''பெருமாள் திருமொழி'' என்பதன் பொருளும் நன்கு விளங்குகின்றது. குலசேகரர் 'பெரிய பெருமாளாகிய இராமரிடத்தில் ஈடுபட்டு இராமரைப்பற்றிய பாடல்கள் பாடியிருப்பதால் இவருடைய திருமொழிக்குப் பெருமாள் திருமொழி எனப் பெயர் வழங்கலாயிற்று' என ஒரு சாரார் கூறுவர். அஃது அத்துணைப் பொருத்தமின்மை எவருக்கும் புலனாகும். பெருமாள் திருமொழியில் பெரிய பெருமாளும் வருகிறார், கண்ணனும் வருகிறார், அடியாரும் வருகிறார்கள். அரங்கனும் வித்துவக்கோட் டம்மானும் திகழ்கின்றார்கள். குலசேகரர்க்கு, மேலே எடுத்துக்காட்டியபடி பெருமாள் என்ற சிறப்புப் பெயர் உண்மையால் அவர் பாடிய திரு மொழிக்கும் பெருமாள் திருமொழி என்பது பெயர் ஆயிற்று. பெருமாள் திருமொழிக்கு உரை எழுதிய பெரியவாச்சான் பிள்ளை இதை உணர்ந் தவர்; ஆதலின், குலசேகரரைப் 'பெருமாள்' என்றும், 'ஸ்ரீ குல சேகரப் பெருமாள்' என்றும் எவ்விடத்தும் எடுத்துக் கூறிப் பொருள் எழுதிப் போகின்றார். எனவே, பெரியவாச்சான் பிள்ளை உரையும் ஒருவாறு கேரளோத்பத்தி கூறும் பெருமாள் கதையை வற்புறுத்து கின்றதெனலாம்.

ஊசியின் காதில் ஒட்டை புகுதல்

பெருமாள் திருமொழி ஆயிரம் காலத்துப் பயிர் என்ப தொன்று லேயே சிறப்பினை அடையவில்லை. ஆழ்வார்களில் இருவரும் திருமங்கை மன்னருமே அரசர் ஆவர். திருமங்கை மன்னரோ குறும் பொறை நாடர். இவரோ தமிழ்நாட்டில் தனிக் கோலோச்சிய அரசர்க் கரசர். ''ஊசியின் காதில் ஒட்டைபுகுந்தாலும் புகுமேயொழியச் செல் வன் துறக்கம் புகுவதில்லை'' என்றார் ஏசுநாதர். பொருளுள்ளார்க்கு அவ்வுலகமில்லை என்பது அவர் துணிவு. அப்பொய்யாமொழியினைத் தம்மளவில் பொய்ம்மொழியாக்கியவர் நமது ஆழ்வாரே ஆவார். ஒன்றுமில்லாது வருந்துபவன் உலகை மறந்து கடவுளை வேண்டுவது இயல்பே. வேறு வழியின்றி அவ்வழியில் இன்பம் பெறுகிறான். எல்லாம் பெற்றுப் பெருவாழ்வு வாழ்கின்ற அரசர்க்கரசன் அவற்றைத் துறந்து அடியாருக்கடியனாய் ஆண்டவனை வேண்டுதல் அருமையினும்

அருமை. அவ்வருமை இவருக்கு எளியதாயிற்று. கடவுளைத் தொழுதல் ஒரு பெரிதல்ல; அடியவரிடத்தும் அன்புகொண்டொழுக வேண்டும் என்று முதன்முதல் வற்புறுத்தியவர் இவரே யாவர். அனைவர்க்கும் அரசரானவர் அடியவர் அனைவர்க்கும் அடியவர் ஆதல் என்றால், வேறொரு பிறப்புப் பிறந்ததே போலும் எனலாம். பிளேட்டோ என்ற மேலைநாட்டறிஞர் மெய்யுணர்ந்த துறவி ஆளுகின்ற நாடே திருநாடு என்று கனாக் கண்டார். அக்கனவிற் கண்ட கட்டுக் கதையை நனவில் மெய்யாக்கியவர்களில் நம் ஆழ்வாரும் ஒருவர். எனவே, ஆண்டிப் பாட்டிலும் அரசன் பாட்டிற்கு ஏற்றமுண்டு. ஆதலின் அதனை ஆராய்வோம்.

2

## பாட்டியின் கதையே பாவலன் பாட்டு

பாவலனைப் போன்றிருக்கும் பாட்டு. பெருமாளைப் போலிருக்கும் பெருமாள் திருமொழி. பெருமாள் இத்தகையார் என்றறிந்தாலன்றோ இப்பேச்சால் பயனுண்டு? குருபரம்பரை என்னும் நூல் குலசேகரரை நெருங்கிப் பழகியதுபோல அவர்கதையை முதலிலிருந்து முடிவுவரை கூறிப்போகின்றது. இதனைக் கட்டுக்கதை என இழித்துக்கூறுவர் ஒரு சாரார். உண்மைக் கதையானால் அக்கதைக்கும் பெருமாள் திருமொழிக்கும் உள்ள ஒற்றுமையை ஒரு சிறிது உணரலாம். கட்டுக் கதையானால் நமக்கு அது உண்மைக் கதையிலும் உயர்ந்த தாகும். கட்டுக் கதையைக் கட்டிவிடுவதாக இருந்தாலும், ஏதேனுமொன்றை அடிப்படையாக வைத்துத் தானே கதைகட்டி விட்டிருத்தல்வேண்டும்? ''சிங்கமே நின்னடிக்கே போதுகின்றேன்'' என்று திருநாவுக்கரசு பாடினால் அது கொண்டு அவரை ஆண்டவன் கோளரியாக ஆண்டனர் என்று கதை கட்டத் தொடங்கினர். கோளரியாக ஆண்டனர் என்றார்களே யன்றிக் குதிரையாக ஆண்டனர் என்று கூறவரவில்லையே! ஆகவே, குலசேகரரைப் பற்றிக் கதைகட்டியவர்களும் அவரைக் குறித்துத் தாம் அறிந்த ஒன்றைச் சுவராக வைத்துத்தான் மேலே ஓவியம் எழுதத் தொடங்கியிருப்பர். இனிப் பெருமாளைப் பற்றியறியப் பெருமாள் திருமொழியொன்று தவிர வேறொன்றும் இருந்ததில்லையே! அப்பெருமாள் திருமொழியைப் படித்த அறிஞர் ஒருவர், அப்பாடல்களைப் பாடியவர் எத்தகையராகி இருந்திருக்கலாம் என்று கனாக் கண்டு இக் கதையை எழுதியிருத்தல் வேண்டும். அக் கட்டுக் கதை அவ்வறிஞரது ஆராய்ச்சியின் முடிவுரையாதலின் அஃதே யாம் வேண்டுவது.

ஆராய்ச்சியின் முடிவைக் கதையாகவோ பாடவேண்டும் என்று ஓர் ஐயம் இங்கெழுதல் இயல்பே. அவ்வாறு கதையாகப் பாடினால்தான் மக்களது உள்ளத்தில் பசுமரத்தாணிபோல் பதியும். ஐயுணர்விற்கு அப்பாற்பட்ட அறிவுப் பொருளையும் ஐயுணர்விற்கு அகப்படும் பொருள்

களாக உவமை வாயிலாக உணர்த்துவது நம் பெரியோரது வழக்க மாயிற்று. அனைத்து உயிர்களுக்கும் ஆண்டவனுக்கும் உள்ள அன்பு ஒற்றுமையை அறிஞர் எவ்வாறு விளக்கினர்? கண்ணனைப் பெண்கள் கட்டித் தழுவி ஒரு நொடியில் அனைவரும் களித்துநின்ற கதையாகப் பாடியே விளக்கினர். இன்னிசையினைக் காதால் கேட்பதன்றிக் கண்ணால் காண முடியாது. ஆனால், அவ்வின்னிசையைக் கேட்டறிந்த ஓவியப் புலவர்கள் இன்னிசைகளை வடிவமும் சாயலும் தகைமையும் நாணமும் நகையும் உடைய பெண்களாக ஓவியம் எழுதிக் காட்டு கின்றனர். நாடி ஓட்டத்தினைக் கையால் தொட்டுப் பார்த்துத்தான் அறிதல் வேண்டும். ஆனால், அதன் வேற்றுமைகளைப் பிறரறியுமாறு கூற வந்த மருத்துவ நூல்கள் அந்நாடி ஓட்டத்தினை முயலோட்டம் மயிலோட்டம் முதலியவற்றிற்கு உவமை கூறுகின்றன. அஃதே போலப் பாட்டைப் படித்துத் தாம் ஆராய்ச்சியின் முடிவை பாவலனோடு இணைத்துவிட்டு, அதனை அவன் கதையாகப் பாடுவது பெரும் புலவருக்கே ஆவதொன்றும். பாட்டி கதையானது பாவலன் பாட்டாகிப் பயன்பெறுகின்றது.

உண்மைக் கதையினும் இக் கதைக்கு ஓர் ஏற்றமுண்டு. ஒருவனைப் புகைப்படம் பிடிக்கிறோம். அதில் படிந்த வடிவம் ஒருவகையாக விளங்கும். அவனது வடிவினையே ஒரு கைசிறந்த ஓடாவியை எழுதச் சொன்னால் வேறு வகையில் எழுதுகின்றான். ஓடாவி இருந்ததை இருந்தபடி எழுதாது, எந்த நிலையில் பல உறுப்புக்களையும் பயன்படுத்தி வைத்தால் எழுதப்படுவோன் உள்ள நிலை முழுதும் ஒருங்கே வெளியாகுமோ அந்த நிலையில் வைத்து எழுதுகின்றான். பச்சையப்ப முதலியாரது ஓவியத்தைப் பலர் பார்த்திருப்பார். இயற்கையழகினிடையே ஒரு கோவிலுக்கெதிரே பச்சையப்ப முதலியார் நிற்கின்றார். செல்வப் பெருக்கை அவரது உடையும் உயர்ந்த அணிகளும் விளக்குகின்றன. அவர் நின்ற நிலையிலேயே இவரது ஒழுக்கத்தழகு ஒளிர்கின்றது. பள்ளியில் பயிலும் சிறுவ னொருவனை அருளொடும் அன்பொடும் மனமிரங்கிப் பாராட்டுகின்றார். பள்ளிச் சிறுவர்களுக்காகத் தமது பொருள் முழுவதினையும் எழுதி வைத்துப்போன அவரது மனநிலையை இவ் வோவியம் எளிதில் விளக்குகின்றது. ஆனால், இளஞ் சிறுவனிடம் அன்பு பாராட்டும் நிலைமை அவரது வாழ்நாளில் ஒரு நாளேனும் அப்பெரியாருக்கு ஏற்படாமல் இருந்திருக்கலாம். இருந்தாலும் அவரது புகைப்படம் உண்மைநிலையை அவ்வோவியம் விளக்குவது போல அவரது புகைப்படம் ஒன்று இருக்குமாயின் அஃது விளக்காதன்றோ? இருந்ததை இருந்தபடி எழுதியது புகைப்படமே யாகும்.

உண்மை நிலையை உணர்ந்தெழுதியதே ஓவியமாகும். புகைப்படம் போன்றது வரலாறு; ஓவியம் போன்றது உணர்வினிற் சிறந்ததோர் கருக் கண்டெழுதிய கட்டுக்கதை. ஆதலின், குலசேகரரைப் பற்றின கதை அவரது உண்மை நிலையை விளக்குவதுபோல அவரது உண்மை வரலாறு ஒன்றிருக்குமாயின் அஃது விளக்காது எனலாம். கட்டுக் கதை இவ்வகையால் ஏற்புடைத்தாகின்றது.

அரிஸ்டாடல் என்ற யவன நாட்டுப் பேரறிஞர், கதைக்கும் வரலாற்றுக்கும் வேற்றுமை காட்டுவர். வரலாறு நடந்ததைக் கூறுவதாம். கதையோ உண்மையைக் கூறுவதாம். ஒருவனது வரலாற்றிலே அவனது வாழ்க்கையின் உண்மைகள் நன்கு புலனாவது இல்லை. எங்கிருந்தோ மின்னல்போல வந்து பிறக்கின்றான். மறுபடியும் எங்கேயோ பறந்து மறைகின்றான். அவனோடு உலகத்திற்குள்ள தொடர்பு, இவன் முடிக்கவந்த வேலை, அவன் வாழ்க்கையின் மறைபொருள், நெளிவுசுளிவுகள் - இவை எல்லாவற்றையும் கடவுள் தவிர வேறொருவரும் தெரிந்துகொள்ள முடியாது. அவரவர்கள் வாழ்ந்த காலத்து மக்கள் தமது விருப்பிற்கும் அறிவிற்கும் ஏற்ப எதை எதை நினைவில் வைத்துக் கொள்கின்றார்களோ அஃதஃதே அவர்களது வரலாறாகி முடிகின்றது. பாவலனோ தனது தெய்வத் திருவருளால் இவ்வுண்மையினையறிந்து ஒரு கதை எழுதுகின்றான். தலைவனது முன்னைய நிலை, பின்னைய நிலை, நடுவுநிலை, அவனது வாழ்க்கை, வாழ்க்கையின் பொருள் முதலியவற்றைத் திருவருள் திறத்தால் படைத்துப் பாடுகிறான். ''கடவுளுக்குத் தான் தெரியும்'' என்று கண் குருடாகிக் கதறவேண்டுவதில்லை. ''அவன் கூறுவன உள்ளபடி நடந்தன அல்ல'' என்று கூறலாம். ஆனால், அவன் கூறவந்தவை பொருள்களின் உண்மைநிலையை நமக்கு அறிவூட்டுகின்றன. அது தானே நமக்கு வேண்டுவது! ஊரும் பேரும் நமக்கேன்? கடவுளின் கருத்தையே அறிவிக்கின்றது கதை.

அரும்பெரும் புலவர் ஒருவர் தமது ஆராய்ச்சியின் முடிவைக் கதையாகப் பாடியதன் ஏற்றம் கண்டோம். இனி, அவர் காட்டிய முடிவு அமைவுடையதோ என்று காணல் வேண்டும்.

குருபரம்பரை, குலசேகரர் பிறந்த ஆண்டு, திங்கள், நாள் எல்லாம் கூறுகின்றது. கலி பிறந்த இருபத்தெட்டாவ தாண்டாகிய பராபவ ஆண்டில், மாசித்திங்களில், திங்கள் வளர்ந்து நிறையத் தொடங்கிய பன்னிரண்டாம் நாளில் சோழபட்டிணத்தில் கௌஸ்துப மணியின் உறுப்பாக உலகில் பிறந்தாராம்.

''கும்பே புநர்வஸௌ ஜாதம் கேரளே சோளபட்டணே
கௌஸ்துபாம்சம் தராதீசம் குலசேகர மாச்ரயே''

என்றவோர் வடமொழிப் பாட்டுண்டு. திருமாலின் மார்பில் விளங்கும் மணிக்குக் கௌஸ்துபம் என்று பெயர். திருமாலின் திருமறு மார்பில் திகழும் மணியாகப் பெருமாள் திருமொழியும் சிறந்து விளங்குவதால் இவ்வாறு கூறினர்கள் போலும். திருவருள் நிறைந்த தெய்வப் புலவர் என்பதை இவ்வாறு கதையாகக் கட்டி விட்டார்கள். திருநாட்டில் இருந்து இந்தச் செய்தித் திருவோலை அனுப்பியவர் யார் என எம்மைக் கேட்கவேண்டா.

குலசேகரர் தாம் சேரர் பெருமாள் என்பதனையும், பாண்டிநாடு, சோழநாடு, கொங்குநாடு என்ற நாடுகளை எல்லாம் வென்று தமிழ் நாட்டில் தனிக்கோலாச்சியதனையும் தாமே தமது பெருமாள் திருமொழியில் பாடியிருக்கின்றார். இனி, த்விஜந்மவரர், பத்மசரர் என்றவர் அருமறையின் அரும்பொருளுணர்ந்து, பாவலர்களில் சிறந்தோராய்த் திகழ்ந்து, குலசேகரரின் (?) நண்பர்களாய் வாழ்ந்தனர். இதனையும் தாமே தமது முகுந்தமாலையின் முடிவில் ஆழ்வார் அருளிச் செய்கின்றார்.

யஸ்ய ப்ரியௌ ச்ருதி தரௌ கவிலோக வீரௌ
மித்ரே த்விஜந்மவர பத்மசராவ பூதாம்
தேநாம்பு ஜாக்ஷ சரணம்புஜ ஷட்பதேந
ராஜ்ஞா க்ருத க்ருதிரியம் குலசேகரேண

(எவருக்கு மறைபொருளுணர்ந்து பாவலரிற் சிறந்த த்விஜந்மவரரும் பத்மசரரும் நண்பர்களோ, அவரால், தாமரைக் கண்ணரின் திருவடித் தாமரை சேர்ந்த வண்டு போன்ற குலசேகரர் என்ற அரசரால் இந்த நூல் செய்யப்பட்டது.) இதனையும் பின்னே ஒருவர் எழுதிச் சேர்த்தார் என்றால் பேசவெமக்கு வாயில்லை. இவ்விரண்டு குறிப்புக்களை விட்டால் குலசேகரரைப்பற்றிச் சான்று பகர வேறொன்றுமில்லை.

இவற்றிற்கு மேலும் சான்று பகரும் குருபரம்பரை தான் என்ன கூறுகின்றது? ஆழ்வார் அரசராய் வீற்றிருந்தபோது ஆண்டவன் அணுக்கத் தொண்டரின் கூட்டுறவு ஏற்படுகையால் அவரும் அடியவர் ஆயினர். அன்பு மேலீட்டினல், அரங்கநகர் அடைந்து, அரவணையிற் பள்ளியானைக் கண்ணாரக் கண்டு உகக்க

வேண்டுமென்ற பித்தே பிடித்துத் திரிந்தனர். திருவரங்கத்தே தித்திகும் தேனினை யுண்டவர் முன்னைநிலைக்குத் திரும்புவதில்லை யாதலின், அரசரும் அரங்கநகர் அடைவாராஞல் தம்மூருக்கு இல்லாது போவர் என்று அமைச்சர்கள் அறிந்துகொண்டனர். அரசன் அரங்க நகருக்குப் புறப்படுவதைத் தடுப்பதற்குத் தம்மாலான சூழ்ச்சியனைத்தும் செய்தனர். அரசஞரின் அடிமைத்திறத்தைப் பயன்படுத்திக்கொண்டு அவரைத் தடுத்தனர். அரங்கனைக் காண் பதினும் அடியவரைக் காணல் அரும்பேரும். அதனை உணர்ந்த அமைச்சர்கள் ஆழ்வார் அரங்கநகர் புறப்படும்போ தெல்லாம் அவரெதிரே அடியவர் குழாத்தைக் கொண்டுவந்து விட்டனர். ஆழ்வாரும் ஒவ்வொருமுறையும் அரங்கநகருக்குப் போதலை ஒத்தி வைத்து அடியவரை வழிபடத் தொடங்கினர். ஒவ்வொரு முறையும் திருவரங்கச் செலவு இவ்வாறு தடைபட்டது. ஆனல், அடியவர் குழாமோ நாளுக்குநாள் மிகுதியாய்க்கொண்டே வந்தது. இந்த முன்னைய நிலையில்தான் ஆழ்வார் முகுந்த மாலை பாடிஞராம்.

ஆழ்வார், அடியவரோடும் கூடி இராமர் கதையை அன்-போடும் ஆர்வத்தோடும் கேட்டுவந்தவர். இராமர் கதையை எடுத்துரைத்துவந்த பெரியார் ஒருநாள், கரன் முதலியோரோடு இராமர் தனியே போருக்குச் சென்ற கதையை வால்மீகி எழுதிய படியே படித்தார் :

சதுர்தச ஸஹஸ்ராணி ராக்ஷஸால் பீமகர்மணும்
ஏகச்ச ராமோ தர்மாத்மா கதம்யுத்தம் பலிஷ்யதி?

'கொடுந்தொழில் புரியும் அரக்கரோ பதினலாயிரவர். தர்மாத் வான இராமனே ஒருவன். போர் எவ்வாருமோ?' என்று வால்மீகியே வயிறு பிடிப்பதைக் கேட்ட அரசர் பெருமான் தம்மையும் உலகையும் மறந்து, கதையொடு ஒன்றுபட்ட கருத்துடைய-ராய்த் தம்மெதிரே போர் நடப்பதாக எண்ணித் தம்முடைய படை-யைத் திரட்டிக்கொண்டு இராமருக்குத் துணையாகி உதவ விரைந்-தெழுந்தார். உடனே அமைச்சர்கள், வேறு சிலரை அரசர் எதிரே வரவிட்டு, வால்மீகி பின் பாடிய பாடலை அரசர் முன் பாடச் செய்தனர். அவ்வாறு எதிர் வந்தவர்களும்,

தம் த்ருஷ்ட்வா சத்ருஹந்தாரம்
மஹர்ஷிணும் ஸுகாவஹம்
பபூவ ஹ்ருஷ்டா வைதேஹி
பர்தாரம் பரிஷஸ்வஜே

'பகைவரைக் கொன்று, முனிவருக்கு இன்பமருளி வந்த தன் அகமுடையாரைக் கண்டு அன்புமேலீட்டால் அவரை அணைத்துக் கொண்டனள் சீதை' என்ற பாடலை விளக்கிப் போர் முடிந்ததை அறிவித்தனர். இராமர் கதையைப் படித்துவந்தவர் அந்நாள் முதல் அரசர் எதிரே, இராமருக்குத் துன்பம் வரும் இடத்தைச் சுருக்கியும் அவர் வெற்றிபெற்று விளங்கிய இடங்களை விரித்தும் கூறிவந்தார். அவர் ஒரு நாள் வர முடியாது போகவே அவருடைய பிள்ளையார் வந்து கதைசொல்லத் தொடங்கினர். முன்னிகழ்ந்த தொன்றும் அறியாதவர் ஆதலின் எதைச் சுருக்க வேண்டும், எதை விரிக்க வேண்டும் என்பதையும் அறியாதவ ராயினர். இராவணன் சீதையைத் தூக்கிச் சென்றது கேட்டுத் தமது படையுடன் இலங்கையை நோக்கிச் சென்று இடைநின்ற கடலிலே அரசர் பெருமான் நடக்கத் தொடங்கினர். ''சீதையக் கொண்டல்லது திரும்பேன்'' என்று சீறி எழுந்தவரைத் திருப்புவதெப்படி என்று எண்ணினர் அமைச்சர். ஒன்றுமறியாது கைவிட்டனர். ''திக்கற்றவர்க்குத் தெய்வமே கதி'' என்பதல்லவா பழமொழி! இராமரே சீதையுடன் அரசர் எதிர் தோன்றித் தமது வெற்றியை விளக்கி, ஆழ்வாரின் அன்பை வியந்து அவரைத் தழுவிக்கொண்டனர். இஃது உரு வெளித்தோற்றமா உண்மைத் தோற்றமா என்பதனை உணர்ந்தார் வாய்க் கேட்டறிக.

ஆழ்வார் தமது அரசியலை விட்டு ஆண்டவன் பித்தே பிடித்து அவ்வாறெல்லாம் செய்துபோவதைக் கண்ட அமைச்சர்கள் மனம் மிக நொந்து, ''என் செய்வது'' என எண்ணலாயினர். அடியவர்களது கூட்டுறவாலேயே அரசர் கெடுகின்றார் என முடிவு கட்டினர். அக்கூட்டுறவை ஒழிக்க வழி தேடினர். அரசர் தமது கோவிலகத்தில் வைத்து வழிபடும் ஆண்டவனுக்கு அணியும் அழகியதொரு பன்மணி மாலையை எடுத்து இவ்வமைச்சர்கள் மறைத்து வைத்தனர். அரசர் அதைத் தேடியபொழுது, அடியவ ரல்லது ஒருவரும் உட்புகுவ தில்லையாதலின் அவர்களில் ஒருவரே திருடிச் சென்றிருத்தல் வேண்டும் என எடுத்துக்காட்டினர். அடியவர் அனைவோரும் அறவோர் என அறிந்த ஆழ்வார் மனம் புழுங்கினர். குடத்திலே கொடிய பாம்பினை அடைத்து அதற்குள் அனைவரெதிரிலும் தமது கையினை விட்டு ''அடியவர் அகனைத் திருடியிருப்பரேல் இப்பாம்பு என்னைத் தீண்டுக'' என்று சூளுரைத்தபோது பாம்பு அவரைத் தொடாது நின்றதால் அடியவர் பெருமையை விளக்கினர். அமைச்சர்கள் அது கண்டு அஞ்சிநின்று

அவரடியில் வீழ்ந்து உண்மையை உரைத்தனர். இனி, இத்தகையா ரோடு வாழ்வது இயலாதென்று உணர்ந்த ஆழ்வார் உடனே தம் பிள்ளையாரை அரசராக்கித் தாம் அரசு துறந்து வெளியேறித் திருமால் கோயில்கொண்ட இடந்தோறும் எழுந்தருளிப் பெருமாள் திருமொழி யினை உலகுய்யப் பாடிப் பின்னர்த் திருநாடடைந்து திருமாலின் திரு மறு மார்பில் திருமணியோடொன்றுயினர். இளை என்ற பெண்ணையும் இறைவனுக்கே மணஞ்செய்து கொடுத்தாராம். கன்னிகழியாதே காலமாய்விட்டது கண்டு இவ்வாறு கட்டிவிட்டனரோ என்பதை உயர்ந்தோரையே கேட்டறிதல் வேண்டும். பாம்புக் குடத்தில் கை விட்டகதையை எம்பெருமானுர் புகழ்ந்து பாடுகின்றார்.

ஆரங்கெட்டபர னன்பர்கொள்
ளாரென் றவர்களுக்கே
வாரங் கொடுகுடப் பாம்பிற்கை
யிட்டவன் மாற்றலரை
வீரங் கெடுத்தசெங் கோற்கொல்லி
காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசே கரன்முடி
வேந்தர் சிகாமணியே.

(அமைச்சர் செய்த சூழ்ச்சியால் பன்மணிமாலை காணுது போகவே, அமைச்சரால் குற்றஞ் சாட்டப்பட்ட அடியார் ஓரமாய் நின்று, அம்மாலையைத் திருமாலின் செவ்விய அடியார் திருடார் என்று பாம்புக் குடத்தில் கையிட்டவர், குலசேகரர், மாற்றலரது வெற்றியெல்லாம் கெடச் செங்கோலோச்சியவர், கொல்லி காவலர், வில்லவர்கோன், சேரர், முடிவேந்தருக்கு முடிமணியே போன்றவர்.)

3

# திருநாளைப் போவார்

குருபரம்பரை கூறும் கதையின் திரண்ட கருத்துத்தான் என்ன? முடிந்த முடிவுதான் என்ன? திருவரங்கம் சென்று பெரிய பெருமாளைக் கண்டு உகக்கும் காதல் பெரிதும் உடையார் குலசேகரர் என்பது ஒன்று. பெருமாளை வழிபடுவதிலும் பெருமாளை வழிபடும் பெரியாரை வழிபடுவதே பெறற்கரிய பெரும் பேருகும் என்று ஆழ்வார் அறிந்து, அதன் வழியே ஒழுகினுர் என்பது இரண்டு. அவ்வடியார்கள் களவாடல் முதலிய கரவாடல்களைக் கனவிலும் கருதாத கடவுட்டன்மை பெற்ற அறவோர் என்ற உறுதிப்பா டுடையார் ஆழ்வார் என்பது மூன்று. முகுந்தமாலையை முன்னிலையிலும், பெருமாள் திருமொழியைப் பின்னிலையிலும் அருள்வழி நின்று ஆழ்வார் அருளிச் செய்தார் என்பது நான்கு. இராமாயணத்திற் சிறந்த பெரியாரோடு கூடியிருந்து அதனை ஆராய்ந்து அறிந்தவர் என்பது ஐந்து. கதையினைப் படிக்கக் கேட்டபோதே கதையோடு ஒன்றுபட்டு நின்று அக்கதையானது தம் கண்ணெதிரே அப்போதுதான் நேரே நடப்பது போல விளக்கமாகக் காணும் உள்ளுணர்வு வாய்ந்தவர் குலசேகரர் என்பது ஆறு. அரசர்க்குரிய பெருஞ்செல்வத்தினையும் அருமை பாராட்டாது, அனைத்தையும் துறந்து, உண்பதே உடுப்பதே உறங்குவதே உலகம் என எண்ணித் திரியும் உலகினரோடு ஒன்ருக வாழ ஒருப்படாது, அவர்களை விட்டோடிப் பெருமாள்மேலேயே பித்தாகிக் கோயில்தோறும் கும்பிடச் சென்று இறைவனைக் கண்டு பாடியாடி இன்புருவாகினுர் என்பது ஏழு. குருபரம்பரையின் முடிவுரையானவை இவையே ஆகும். பார்வலன் கட்டிய இந்த எழுநிலை மாடத்தைப் பழுதுபார்ப்பதே நமது வேலை. பழுதேனும் பார்ப்போம்; பழுதில்லையானல், எழுநிலைமாடத் திருந்து அரசாளுவோம்.

கோயில்: சிவனை வழிபடுவோர் தில்லையைக் கோயில் என்று சிறப்பித்துப் பேசுவர். திருமாலை வழிபடுவோரோ, திருவரங்கத்தினை அவ்வாறே கோயில் என்று வேறோர் அடையும் இன்றி வழங்குவர். சிவனை வழிபடுவோர் தில்லைக்குச் சென்று கோயிலில் ஆடும் கூத்தரசைக் கண்டு உகக்கும் காதல் கொண்டுள்ளார்கள். அங்ஙனமே, திருமாலை வழிபடுவோரும் கோயில்களுக்கெல்லாம் கோயிலாகிய திருவரங்கத்தை உயிருள்ள நாளில் ஒருமுறையேனும் சென்று கண்ணாரக் காணவேண்டும் என்று அதே கருத்தாய் இருக்கின்றார்கள். இவ்வெண்ணம் எல்லோருக்கும் பொதுவாக எழுந்தாலும், ஒரு சிலர்க்கே சிறப்பாகி விளங்குகின்றது. அவ்வொரு சிலர்க்கு இவ்வெண்ணம் பெரும்பித்தாகி முடிகின்றது. பித்தந் தெளியும் மருந்து பெரிய கோயிலில்தான் பெருகி வழிகின்றது. நாயன்மார்களில் அத்தகைய பித்துடையார் நந்தனார் ஆவர்.

''தில்லைக்கு நாளைக்குப் போக வேண்டும்''
''தில்லைக்கு நாளைக்குப் போக வேண்டும்''

என்று நனவிலும் கனவிலும் நாளும் கருதிவந்தார் ஆதலின், அவருக்குத் ''திருநாளைப் போவார்'' என்ற திருப்பெயர் வந்தது. அப்பெரியாரைப்போல ஆழ்வார்களிலே பெரியகோயில் பெரும்பித்துப் பிடித்தவர் குலசேகரரே ஆவர். ஒவ்வொரு நாளும் திருவரங்கம் போகவேண்டும் என்று புறப்படுவாராம். ஆகவே, இவரும் ஒரு திருநாளைப் போவாரே யாவர்.

முதல் திருமொழி: பெருமாள் திருமொழியில் முதல் திருமொழியாக விளங்குவது ''இருளரிய'' என்று தொடங்குவதேயாகும். அத்திருமொழியில் ஒவ்வொரு பாடலிலும் முதல் மூன்றடிகளில் திருவரங்கத்தே பள்ளி கொண்டருளிய திருமாலின் நிலையை இப்போதே நம் கண்ணெதிரில் தோன்றுமாறு புனைந்துரைக்கின்றார், புலவரிற் பெரிய புலவராகிய நம்மாழ்வார். நாலாம் அடியிலே அத்தகைய பெருமானை ''என்று காண்பது,'' ''என்று வழிபடுவது'' என்று இரங்கி ஏங்குகின்றார். இவரது உள்ளுணர்வைப்பற்றி ஆராயும்போது முதல மூன்றடிகளை முழுவதும் ஆராய்வோம். இங்கு நமக்கு வேண்டுவது நாலாம் அடியேயாகும். ஆனால், பொருளினைத் தொடர்ச்சியாக அறிய வேண்டி முழுப் பாட்டினையும் எழுதுகின்றோம். ஒருவரும் அறியாதபடி ஒருவன் ஒருத்தியைக் காதலித்து வருவானானால், அவளைக் காண எவ்வளவு ஆவலோடும் விரைந்து செல்ல எண்ணுவானோ, அவ்வளவு ஆவலோடும் விரைவோடும் பதைபதைக்கின்றார் இவ்வாழ்வார். அக்காதலன்,

அக்காதலியைப்பற்றியும், அக்காதலிக்கு அன்பினராய் உள்ளாரைப் பற்றியும், எண்ணியெண்ணி ஏங்கி நின்று 'எந்நாள் அவரைக் காண்பேண், எந்நாள் அவரைப் புகழ்வேன், எந்நாள் அவர்களுக்கு வேண்டிய மணியும் மலரும் புனைந்து சூட்டுவேன்? கன்மனக் கொடியேனுதலின் காதலியைப் பிரிந்தும், மனம் கலங்காது கண்ணில் நீர் கலங்காது நிற்கின்றேன்! புரண்டுருளாது பொய்யனுய்ப் பொலிகின்றேன். காதலியோடு ஒன்ருகி வாழும் நாள் எந்நாளோ?'' என்று புலம்புவதுபோல ஆழ்வாரும் புலம்பி நிற்கின்ருர்.

இருள் இரியச் சுடர்மணிகள் இமைக்கும் நெற்றி
இனத்துத்தி அணிபணம் ஆயிரங்கள் ஆர்ந்த
அரவரசப் பெருஞ்சோதி அநந்தன் என்னும்
அணிவிளங்கும் உயர்வெள்ளை அணையை மேவித்
திருவரங்கப் பெருநகருள் தெண்ணீர்ப் பொன்னி
திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும்
கருமணியைக் கோமளத்தைக் கண்டு கொண்டுஎன்
கண்ணிணைகள் என்றுகொலோ களிக்கும் நாளே.

(இரிய - சிதறிநீங்க; இமைக்கும் - விட்டுவிட்டு விளங்கும்; துத்தி-நல்லபாம்பு படம் எடுத்தாடும்போது அதில் திருமண்போல் தோன்றும் குறி; பணம் - படம்; அரவு அரசு - பாம்புக்கெல்லாம் அரசு: அணை - படுக்கை; மேவி - பொருந்தி; தெள்நீர் - தெளிவான நீர்; பொன்னி - காவிரி; கோமளம் - அழகு).

''அடியேனுடைய கண்கள் இரண்டும் எந்த நாளில் இன்பத்தையடையப் போகின்றன? இன்பத்தைத் தரும் காட்சியை யான் என்று காணப்போகின்றேன்? அழகினைக் கண்டன்ருே கண்கள் களிக்கின்றன? அழகுக் கெல்லாம் அழகாகி அழகினுக்கே அழகு செய்யும் ஆரழகை என்று காண்பேன்? கதிரவனொளிபோன்று கண்ணைக் குருடாக்கும், அழகோ அவ்வழகு? அன்றன்று, அரவின் மணியினும் (மாணிக்கம்) உயர்ந்து ஒளிர்வது; ஆனல், கண்டாரது கண்ணும் கருத்தும் குளிர்ந்து இன்பம் பெறுமாறு கருநிறத்தோடே நம் கண்ணுக் ககப்படுவதோர் அழகன்ருே அவ்வழகு! அழகிய உருவமும் அழகிய வடிவமும் சினந்து நின்று போராடும்போது அழகிலாதவாய் அழிந்தொழிகின்றன. அங்ஙனமே சோம்பிநின்று தூங்கும் நிலையில் அவ்விடத்தில் திருமகளின் திருவுருவாகிய

அழகினைக் காண்கின்றிலோம். திருமகளின் தமக்கையா ராகிய பெரியம்மாளே பேரோலமிடக் காண்கின்றோம். ஆனால், எனது கருமணியாகிய கோமளம் எந்த நிலையில் உள்ளது? போரிடு நிலையிலும் (ராஜசம்) இல்லை. தூங்கிடு நிலையிலும் (தாமஸம்) இல்லை. நடுநிலையிலே (ஸத்வம்) அப்பால் சென்று, அறிதுயில் அமர்ந்து அன்பொடு (கருமை) பயின்ற அறிவுருவாக (மணி) ஒளிர்கின்றது. அவ்வாறு அறிதுயிலமர்ந்த இடமே இயற்கை அன்னை இன்பக் கூத்தாடும் இடமாகும். பொன்னியாருனது பனி நீர்போல் தெளிந்தோடுகின்றது. அதனிடையே அழகிய திருவரங்கப் பெருநகருள் பள்ளி கொண்டுள்ளார் பெருமானார். இப்பொன்னி-யானது சிறிய அலைக ளாகிய கையினாலே அவரது திருவடியிலே மோதி, அவரது காலைப்பிடித்து மெல்ல வருடுகின்றது. அடிவருடும் அருமை அவ்வாருனல் அவர் பள்ளிகொள்ளும் படுக்கைதான் என்ன? கருமணி நன்கு விளங்குவதற்காக வெண்மணியி னிடையே பதித்ததுபோலக் கரியபெருமாள் வெள்ளை யணைமேல் விளங்குகின்-ருர். எத்தகைய அணையினும் காற்றடைத்த பையே சிறந்ததாகும். அத்தகையதே பாம்பு. அப்பாம்புகளிற் சிறந்ததாய், அவற்றிற்-கெல்லாம் அரசாய் விளங்கும் அநந்தனல்லனே அழகிய ஆண்ட-வனுக்கு அணையாய் அமைந்தான்! கருமணிக் கேற்றவாறு அவர் பள்ளிகொண்ட அணையும் பேரொளிப்பிளம்பாக நிற்கின்றது. அழகிய படங்களை விரித்து நிற்கின்றது. நின்று ஆண்டவனுக்கு இன்பமூட்டுகின்றது. அப்படங்கள் ஒவ்வொன்றிலும் இனம் இன மாய் இணைந்து நிற்கும் திருமண்காப்பு, அவை யெல்லாம் ஆண்டவனின் பொருளே என்பதை விளக்கிநிற்கின்றன. அப் படங்களின் அவ்வாயிர நெற்றியிலும் தீப்போல் சுடர்விடும் அரவு மணிகள் விளங்கி, அங்கிருக்கும் இருட்டையெல்லாம் ஓட்டி, இறைவன் திருவுருவை எல்லோருக்குமினிதே காட்ட விளக்குப் பிடித்து நிற்கின்றன. இவ்வழகினை என்று போய்க் கண்டு என்னு-டைய கண்கள் களிக்கப் போகின்றனவோ?'' என்கின்ருர் ஆழ்வார்

கண்ணாரக் கண்ட பின்னர்க் களிப்பிற்குப் போக்கு வீடாக வாயார வாழ்த்தவேண்டாவா? அதனை என்று செய்வேன் என்கிருர் ஆழ்வார்.

வாய் ஓர் ஈரைஞ்ஞூறு துதங்கள் ஆர்ந்த
வளை உடம்பில் அழல்நாகம் உமிழ்ந்த செந்தீ
வியாத மலர்ச்சென்னி விதான மேபோல்

மேன்மேலும் மிகஎங்கும் பரந்ததன்கீழ்க்
காயாம்பூ மலர்ப்பிறங்கல் அன்ன மாலேக்
கடியரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
மாயோனை மணத்தூணே பற்றி நின்றுஎன்
வாயார என்றுகொலோ வாழ்த்து நாளே.

(துதம்— ஸ்துதி போற்றுதல், அல்லது துத்தி ; வியாத— கெடாத ; சென்னி— திருமுடி ; விதானம்— மேற்பரப்பு ; பிறங்கல்— மாலே ; மாலே - திருமாலே ; கடி—காவல் அமைந்த ; வளே - வளேந்த அல்லது வளே [ சங்கு] போல் வெளுத்த).

பூவினைத் தொடினும் ஊற்றின்பம் பெற்று மயிர்க் கூச்செறிந்து மகிழ்கின்றேம். மெல்லியவற்றில் எல்லாம் மெல்லியவனை பெரு-மாளேத் தாங்கும் பெரும்பேறுடைய அரவரசன் அடைந்த இன்பப் பெருக்கினை எவ்வாறு எடுத்துரைப்பது ! அவ்வின்பத்தை உள்ளத்துள் ளேயே அடக்கிவைக்க மாட்டாதவனுய் அவ்வரசன் தன் ஓராயிரம் வாயையும் கொண்டு ஆண்டவனை ஏத்தி வழிபடுகின்ருன். அன்பினது மேலீட்டினுல் பகையில்லாத இடத்தும் பகை வருமோ என அழன்று சீறி நிற்கிருன். அவன் கக்கும் நஞ்சும் செந்தீயாய்த் திகழ்கின்றது. இடைவிடாதே அவன் உமிழ்கின்ற இத்தீச் சுடர் இவரது படுக்கையின் மேல் இட்ட மேற்கட்டி போல, மேலெங்கும் சுற்றிலும் பரந்து பேரொளிப் படாமாக மேலே அகன்று விளங்குகின்றது. இவ்வாறு பெருமானது திருமுடிமேல் விளங்கினுலும், இவரது திருமுடியில் அணிந்துள்ள மலர் ஒன்றேனும் இத்தீயால் கருகிய தில்லே. அழியா இடத்தை அடைந்தவர் அழிவதும் உண்டோ ? இத்தகைய அரவரசன் காவல் காக்கும் திருவரங்கத்தினும் காவல் மிக்க ஊர் வேறென்று உண்டோ? காயாம் பூவால் கட்டப்பட்ட மாலேபோல, அழகோடும் மென்மையோடும் விளங்கிப் பொலிந்து வெள்ளிய அரவின்மேலே பள்ளிகொள்ளும் திருமாலோ கண் மயக்கம் செய்து களிப்பூட்டும் கள்வ ஞதலின் அவனழகைக் கண்டு தம்மை மறவாதிருப்பார் உலகில் ஒருவரும் இல்லே. அவனது கடவுள் திருவுருவின் திருமணமே உருப் பெற்று நம் மெதிரே நம் கைக்கோர் ஊன்று கோலாய் இரண்டு தூண்கள் என வடிவங் கொண்டு விளங்குகின்றன. அவனது வடிவழ கில் ஆழ்ந்தவர்கள் இதனையே புணையாகப் பற்றி அவனைக் கண்டு களித்தல் வேண்டும். அவன் அழகு இருந்தபடி அவ்வாறன்றே? ஊற் றின்பம் பெற்று அரவரசன் வாயார வாழ்த்துவது போலக் கண்ணின்-பம் பெற்ற நான், அழகிலே அகப்பட்ட ஆர்வத்தாலே தள்ளுண்ணுமே

இரண்டு தூண்களையும் பற்றி நின்று, கண்ட களிப்பினுக்குப் போக்கு வீடாக வாயார வாழ்த்தாமல் இருத்தலும் இயலுமோ? அவ்வாறு யான் வாழ்த்தும் நாள் எனக்கு எப்போது வாய்க்குமோ? '' என்கின்றார் இப்பாட்டில்.

'இவ்வாறு செய்யாதவரையில் நமது கண்ணும் கண்ணோ? வாயும் வாயோ? ' என்பது இதனால் போதருகின்றது.

பெரியவனை மாயவனைப் பேர்உலகம் எல்லாம்
விரிகமல உந்தியுடை விண்ணவனைக் கண்ணும்
திருவடியும் கையும் கனிவாயும் செய்ய
கரியவனைக் காணாத கண்ணென்ன கண்ணே
கண்ணிமைத்துக் காண்பார்தம் கண்என்ன கண்ணே

என்றும்,

மடந்தாழும் நெஞ்சத்துக் கஞ்சனார் வஞ்சம்
கடந்தானை நூற்றுவர்பால் நாற்றிசையும் போற்றத்
தொடர்ந்தா ரணமுழங்கப் பஞ்சவர்க்குத் தூது
நடந்தானை ஏத்தாத நாவென்ன நாவே
நாராயணா என்னா நாவென்ன நாவே

என்றும் குலசேகரர் பிறந்த சேர நாட்டிலே சேரர் குடியிலே பிறந்த இளங்கோவடிகள் தமது சிலப்பதிகாரத்தில் பாடியுள்ளதனை நம் ஆழ்வார் படியாதிருந்திரார். இவ்விரண்டு பாடல்களின் எதிரொலியை முன்னெடுத்து விளக்கிய பெருமாள் திருமொழியில் கேட்கின்றோம். ஆனால், அவர் பாட்டுக்கும் இவர் பாட்டுக்கும் என்ன வேற்றுமை, என்ன வேற்றுமை!

எம்மாண்பில் அயன்நான்கு நாவி னாலும்
எடுத்தேத்தி ஈரிரண்டு முகமும் கொண்டு
எம்மாடும் எழிற்கண்கள் எட்டி னோடும்
தொழுதேத்தி இனிதிறைஞ்ச நின்ற செம்பொன்
அம்மான்தன் மலர்க்கமலக் கொப்பூழ் தோன்ற
அணியரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
அம்மான் தன் அடியிணைக்கீழ் அலர்கள் இட்டுஅங்கு
அடியவரோ டென்று கொலோ அணுகு நாளே.

(அயன்—பிரம்மாவாம் படைப்புக் கடவுள்; எம்மாடும்—எல்லாப் பக்கங்களிலும்; எழில்—அழகு; இறைஞ்ச—வணங்க. அடியிணை—இரண்டு திருவடி; அலர்—பூ)

''உலகினை ஒரு வயிற்றடக்கிய உயர்ந்தோன் ஒரு தனியே அறிதுயிலமர்ந்த அறிவு நிலையின் அழகினைக் கண்டு அகநெகிழ்வ தெந்நாளோ? அஃதொன்றினைத் தானே நானிழந்து நிற்கின்றேன்! அவ்வறிவு நிலை அருள் நிலையுமாதலின் அந்நிலையில் குவிந்தடங்கிய உலகம் மலர்ந்து விரிகின்றமையும் காண்கின்றிலேனே. எம்பெருமானது கொப்பூழில் மலர்ந்த தாமரைத் தண்மலர் மேலெழுந்து பல விதழையும் பரப்பி நின்று தோன்றும் போது, உலகம் விரிந்த நிலை நன்கு பொலியுமன்றோ? அவ்வருள் நிலையும் அழகியதன்றோ? உலகம் விரிந்த நிலையில் அவ்வுலகம், தனது ஒப்பற்ற தனிமுதலை எவ்வாறு வணங்கவேண்டும் என்பதனை மலரும்போதே மாலின்மேல் மால்கண்டு வணங்கி வாழ்த்தும் நான்முகன் நானிலமறிய நன்கு காட்டுவதனை நான் காண்பது எந்நாளோ? பெம்மான்! என் அம்மான்! என் அம்மான் இன்னருள் இருந்தவாறு என்னே! பொன்னிற் சிறந்த செம்பொன்னேபோல் என்னுல் என்றும் விரும்புதற்குரியன்; எய்ப்பினில் வைப்பு. அவனைக் காணும் பேறுன்றில்லேன். அப்பேற்றினைப் பெற்றாரில் அம்மலரவனே முதல்வன் அல்லனே? பிறவாது பிறந்த மலரவன் மாண்பினை என்னென்பது! எம்மான் புகழினை ஒவ்வொன்றாக எடுத்தேத்த ஒரு நாவு போதியதோ? நான்முகனுக்கு நான்கு நாவுண்மையும் அவன் மாண்பே; அவனது பெரும் பேறே. ஆண்டவன் எதிரே ஒருபால், ஒரு முகத்தோடு நில்லாது நாற்பாலும் அரங்கனது அழகினை நன்கு கண்டு நாவாற் பாட அவனுக்கு நான்கு நாவோடு நான்முகமும் அமைந்த மாண்பே மாண்பு! பிறந்ததும் பெருமானைக் காணும் பேறு பெற்ற அப்பெரியானது பெருங்கண்களே பேரழகுடைய கண்கள்; அல்லும் பகலும் அழகனது நிழலாடும் கண்கள்; இரு கண்ணால் கண்டு முடியாத கருமணியின் கட்டழகினைக் கண்ணாரக் கண்டுகளிக்கக் கண்களோரெட்டும் வேண்டாவோ? இறைவனது கொப்பூழ் மலரிலேயே குந்திக் கிடக்கும் பேறும் பெரும் பேறே! ஏன்? மலர்ந்ததும் அம்மானை வணங்கலாம் அன்றோ? யானோ அரசிலே இடர்பட்டுச் சிறைப்பட்டேன். நம் போன்றோர்க்கு வரும் இத்தகைய இடர்ப்பாடுகள் ஏதுமின்றி எந்நாளும் இறைவனை இனிதே இறைஞ்சுகின்றான். கொப்பூழ் மலரின் குளிர்ச்சியினையும், ஊற்றின்பத்தினையும் உணர்ந்து துய்த்து வாய்விட்டு வாழ்த்துவான் மலரவன். நாற்பாலும் ஆண்டவனழகைக் காண்பான். கண்கவர் வனப்பு அவன் மனத்தையும் அடிமை கொள்ளக் கைகூப்பித் தொழுது தன்னை மறக்கின்றான்; பாடுகின்றான்; கண்ணிமைத்து உள்ளத்தே ஒளிர்கின்ற ஒப்பில்லா அறிவழகினை அகக் கண்ணால் காண்கின்றான். புறக்

காட்சியிலும் அகக்காட்சி அழகுடமையின் கைகூப்பி நின்றவன் தலை வணங்கிப் பேச்சற்று நிற்பான். வழிபாட்டை மறிப்பாரின்றி மால் கொண்டு மாலினைக் காண்பான். மக்களில் முதல்வனுய மலரவனும் இவ்வாறு மால்கொள நின்ற வடிவழகினன், நம் போன்ருர்க்கு அருள் செய்ய வேண்டியே நமக்கு அணிந்தாய அரங்கப் தரவணையிற் பள்ளி கொள்கின்ருன். அவ்வாறு அணுகிவந்த அம்மானை நான் அணுகி அடையும் நசள் எந்நாளோ? ஒன்றியாய் நின்று உகந்து காணும் அழகல்லவே அவனழகு! கண்டவுடன் மலரவனும் வாய் வெருவி வாழ்த்தும் அழகன்ருே அவ்வரங்கத்துளான் கட்டழகு? வாழ்த்தினல் கேட்பார் வேண்டாவா? ஆகவே, அடியவரோடு உடன் கூடிச்சென்று அவனழகினைக் கண்டு அக்காட்சி இன்பத்திற்குப் போக்கு வீடாக மலரினும் மெல்லிய அவனதடியினை மிக மெல்லிய மலர்களைத் தூவி அணுகுநாள் எந்நாளோ?

மாவினைவாய் பிளந்துகந்த மாலை வேலை
வண்ணனைஎன் கண்ணனைவன் குன்றம் ஏந்தி
ஆவினை அன்று உய்யக்கொண்ட ஆயர் ஏற்றை
அமரர்கள்தந் தலைவனைஅந் தமிழின் இன்பப்
பாவினைஅவ் வடமொழியைப் பற்றற் ருர்கள்
பயிலரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
கோவினைநா வுறவழுத்தி என்றன் கைகள்
கொய்ம்மலர்தூய் என்றுகொலோ கூப்பு நாளே

(மா-குதிரை வடிவு கொண்டு கண்ணனைக் கொல்ல வந்த கேசி என்னும் அரக்கன்; மாலை-திருமாலினை; வேலை-கடல்; ஆயர்-இடையர்; ஏறு-சிங்கம் போன்றவன் அல்லது காளைமாடு போன்ற வன். அவ்வடமொழியை-அழகிய வடமொழிப் பாக்களைப்போல அழகியவனை, அல்லது தமிழ்ப்பாக்களுக்கு இருக்கும் அழகும் இனிமை யுமாகிய அத்தகைமைகளை யுடைய வடமொழிப் பாக்களைப்போன்று அழகியவனுய், இனியவனுய் இருப்பவனை; பயில்-பழகும், அதாவது என்றும் வாழும்.)

"அணுகுதலும் அவனழகில் ஈடுபட்டு நாத்தழும் பேற வாழ்த்தா திருத்தலும் இயலுமோ? அவனுயர்வினைக் கண்டு அன் போடும் ஆர்வத்தோடும் ஆய்ந்து பார்த்துக்கொய்துவந்த மலர்களைத் தூவிக் கைகூப்பி நில்லாமல் இருக்க இயலுமோ? அவனைக் காணும்

போதே பகைவரைப் பதைக்கக் கொல்லும் அவனுடைய பண்பும் அவனுருவில் ததும்பி வழிகின்ற தன்றே? குதிரையின் வடிவெடுத்து வந்த கொலைஞனின் குறிப்பறிந்து அவன் வாயினைக் கிழித்துக் கொன் றெறிந்தான். இவ்வாறு செய்த பின்னும் ''இந்தப் பூனையும் பால் குடிக்குமோ'' என நின்று ஒன்று மறியாதவன்போல எடுத்தார் கைப்பிள்ளையாய்த் தவழ்ந்துலவும் மாயன். அவனே மால். கொல்லற் கரியானைக் குழவியாய் நின்று கொன்ற போது வருந்தினனோ? அஃதும் ஒரு திருவிளையாட்டாதலின் உகந்தே உலவினன். தீமையைத் தேய்க்கும் திருமாலன்றிச் சிற்று யிர்க்கு உற்ற துணை ஏது? கொலைஞனைக் கொன்றானென்று நாம் வெருவி ஓடாதபடி அருளே உருவாகிக் கண்டோர் கண்குளிரக் காணும் கருங்கடல்போல ஒளிர்கின்றானல்லனோ? அவ்வருளினை உரு வளவில் காட்டிச் செயலளவில் காட்டாது விட்டானோ? இடையர்களது கைப்பிள்ளையாய் வளர்ந்து குன்றினைக் குடையாகக் கவிழ்த்து ஆவினைக் காத்துதவினன் அல்லனோ? அவனுடைய அன்பின் எளிமை இருந்தவா றென்னே! அறிவிற் சிறியார்க்கும் இவனே அன்பன். அறிவிலா விலங்குகளுக்கும் இவனே அன்பன். ஆவினைக் காத்தபோது எதிர்த்து நின்றார் வானவரே அல்லரோ? இவனுக்கவர்கள் தோற்று, இவ னையே தலைவனென் றுணர்ந்தனர். அரக்கன் மிடுக்கினை அடக்கியது போல வானவர் மிடுக்கையும் அடக்கியருளினன். அழகிய தமிழ்ப் பாக்களைக் கற்றறிந்துள்ளேன். வடமொழிப் பாவினையும் ஓதியுணர்ந் தேன். அவற்றிலே நான் துய்த்த இன்பத்தினை வேறெங்கும் துய்த் திலேன்; துய்க்கப் போவதும் இல்லை ஆனால், அரங்கனொருவனே அத்தகைய இன்பமாகி எமக்கு அருள் செய்பவன். அரங்கத் தரவ ணையிற் பள்ளி கொண்டவனிடத்தே தீமையைத் தேய்க்கும் வஞ்சகப் புன்சிரிப்பும் திருவிளையாடலிற் சென்ற மனநிலைக்கேற்ற வடிவ அமைப்பும் அருளொழுகும் திருமுகக் குறிப்பும் இன்பமே உருவான துயினிலையின் தோற்றமும் விளங்கிப் பொலிகின்றன. இப் பெரியா னது ஊரிலே மக்கள் பலர் வாழ்கின்றனர். அவர் எல்லாம் பற்றற் றவர்களே. யாதேனும் ஒன்றினை வேண்டியோ அவனைச் சுற்றி நிற் கின்றார்கள்? தினவெடுத்தவன் சொறிந்து கொள்வதைப்போல் அவ னைக் கண்டாலன்றி உயிர்வாழ முடியாதவராய் அங்கேயே அல்லும் பகலும் அமர்ந்திருந்து அவனை வாழ்த்தி வணங்கி வாழ்கின்றார்கள். அரவணையிற் பள்ளிகொள்ளும் அத்தகைய தலைவனைக் கண்டதும், கண்டபடி நாத்தழும்பேறப் பாடிப் புகழ்வதல்லால் வேறுவகையில் அக்காட்சி இன்பத்தைப் பொறுத்திருத்தல் முடியுமோ?''

இணையிலா இன்னிசையாழ் கெழுமி இன்பத்
 தும்புருவும் நாரதனும் இறைஞ்சி ஏத்தத்
துணையில்லாத் தொன்மறைநூல் தோத்தி ரத்தால்
 தொன்மலர்க்கண் அயன்வணங்கி ஓவா தேத்த
மணிமாட மாளிகைகள் மல்கு செல்வ
 மதிளரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
மணிவண்ணன் அம்மானைக் கண்டு கொண்டுஎன்
 மலர்ச்சென்னி என்றுகொலோ வணங்கு நாளே.

(இணை – ஒப்பு; யாழ் – வீணை போன்றதோர் தமிழிசைக்கருவி; இன்பம் - இசை இன்பம்; துணை—ஒப்பு; தொல் – பழைய; மறை — வேதம்; ஓவாது -- இடைவிடாது; சென்னி--தலை)

''அரங்கத்தே பயில்வார் அங்கு நான் சென்றக்கால் என் எதிரே தோன்றுவார் அல்லரோ? அவர்களையும் காணு திழந்தேனே! பாவின் இன்பத்தை அறிந்தேன் யான். அவ் வின்பத்தைக் இறைவனி-டம் காணக் கனுக் காண்பவன் யானொருவனே யல்லன். நாரதனும் தும்புருவும் இசையின்பத்தின் எல்லை கண்டு உணர்ந்தவர்கள். அவர்-களும் இசை இன்பத்தினை இறைவனிடம் கண்டனர். அவ்வின்பம்போல ஆண்டவன் அமைந்திருத்தலின் தேனில் மொய்க்கும் தேனீயைப் போல அங்குவந்து சேர்ந்திருப்பர். ஒப்பில்லாத இனிய இசையை எழுப்பும் யாழினைக் கையிலேந்தி அவ்விருவரும் இசை இன்பத்-தோடு இறைவன் இன்பத்தை ஒன்றுபடுத்தி ஒன்ருகத் துய்த்து, இசை இன்பத்திலும் இறைவன் அன்பிலும் ஆழ்ந்து தம்மையும் மறந்து அவனடியில் வீழ்ந்து பாடிப் போற்றுவர். இவ்விரு அறிஞர்தாமோ அங்குப் போற்றி நிற்பவர்! எம்மலர்க்கும் முன் மலர்ந்த கொப்பூழ் மலரில் குந்தியிருக்கும் மலரவனும் உலகினை யெல்லாம் கண்டறிந்து வைத்தும் இவனை யல்லாமல் வேறொரு பெரியானைக் கண்டறியான். ஆதலின், அவனும் அங்கே போற்றுகின்ருன். அவன் போற்றிப் புகழும் பொன்னுரைகள் அப்போதுதான் அவன் பாடிய புத்துரைகள் அல்ல. பழமைக் கெல்லாம் பழையவனுய்ப் பள்ளிகொண்டவன் பெருமை அப்பெரியானோடு ஒருங்கு தோன்றிய தன்றே? அதுவே போல அவன் புகழைப் பாடும் பாக்களும் அவன் தோன்றிய நாளி-லேயே தோன்றியிராவோ? ஆதலின், மறையவனும் புத்துரையால் போற்ருது ஒப்பிலாத அறிவுருவாய்ப் பண்டைநாள் தொட்டுவரும் மறைமொழிகளைக் கொண்டே இடைவிடாது போற்றிப் புகழ்ந்து

வணங்கி நிற்பான். அவ்வாண்டவன் புகழ் ஓரெல்லைக் கடங்கியிருந் தால் அன்றோ இடைவிட்டுப் போற்ற இடமுண்டு! நான்முகன் தன் வாணுள் எல்லாம் சொல்லிப் பாடினாலும் முடியாத தொன்மையாம் புகழன்றோ அப்பெரியானது புகழ்! இன்னிசைப் புலவரும் காலங் கண்ட பெரியாரும் ஆண்டவனும் ஒருங்கிருந்த இடத்திற் செல்வப் பெருக்கு எத்தகையதாகும்? மணிகளாற் சமைத்த மாடமாளிகைகள் வெளியே பேரொளியாகத் தோன்றுவதற் கிணங்க உள்ளேயும் பொங்கி வழியும் செல்வப் பெருக்கோடு பொலிவதனை அவ்வூரில் காணலாம் அன்றோ? அத்தகைய செல்வமுள்ள இடத்தே அதற்குக் காவலாக மதிலும் எழுந்தோங்கி நிற்கும். அத்தகைய இடத்தே அத்தகையாருக்கிடையே கருமணிபோலும் கட்டழகுடைய என்னு டைய அம்மானை அல்லும் பகலும் அறுபது நாழிகையும் என் கண் கொண்டு எந்நாள் கண்டுகொண்டே நிற்பேனோ? எல்லாரும் என்னடியில் வீழ்வது போகச் செருக்கற்ற தூய மனத்தினனாய் அவனுயர் வினை நோக்கி என்னையும் மறந்து பூச்சூடிய எனது தலையை அவ னடியில் தாழ்த்தி வணங்குவ தெந்நாளோ? அரசநிலையில் தலையில் பூச்சூடி நிற்பேன்; அரங்கனைத் தொழு நிலையில் அரச நிலையைத் துறந்தே நிற்றல் வேண்டும். எனினும், இறைவனடி மெல்லியன வற்றி லெல்லாம் மெல்லியவாதலின் என் வன் தலைகொண்டு வணங்குத லாகாது. பூச்சூடி மென்மை செய்து மெல்லடியில் வீழுநாள் எந்நாளோ? அஃதோர் அரசநிலைக் குறிப்பன்று. வேறனைத்தும் புறம் பொழிய நான் தனிநின்று ஆண்டவனை அணுகுநாள் எந்நாளோ?''

அளிமலர்மேல் அயன்அரன்இந் திரனோடு ஏனை
அமரர்கள்தம் குழுவும்அரம் பையரும் மற்றும்
தெளிமதிசேர் முனிவர்கள்தம் குழுவும் உந்தித்
திசைதிசையின் மலர்தூவிச் சென்று சேரும்
களிமலர்சேர் பொழிலரங்கத்(து) உரகம் ஏறிக்
கண்வளரும் கடல்வண்ணர் கமலக் கண்ணும்
ஒளிமதிசேர் திருமுகமும் கண்டு கொண்டுஎன்
உள்ளமிக என்றுகொலோ உருகும் நாளே.

(அளி-வண்டு; அரன்-அழிக்கும் கடவுள்; அமரர்-தேவர்; குழு-கூட்டம்; அரம்பையர்-தெய்வப் பெண்கள்; தெளிமதி-கலக்கமில்லாத அறிவு; உந்தி-ஒருவரை ஒருவர் நெருக்கித் தள்ளி; களி - தேன் அல்லது மகிழ்ச்சி; பொழில்-சோலை; உரகம்-பாம்பு, அரவணை; கண் வளரும்-தூங்கும்; ஒளிமதிசேர்-ஒளியையுடைய திங்களை ஒத்த.)

''தொன்மலராய் நின்றும் இறைவன் அருளாலே புதுத் தேன் ததும்புதலால் வண்டுகள் வந்து மொய்க்க அன்றலர்ந்தது போல் விளங்கும் பெருமலர்மேல் அமர்ந்த படைப்புக் கடவுளும் அழிப்புக் கடவுளும் வானவர்க்கரசனும் மற்றைய வானவர் கூட்டமும் வான் அரமங்கையரும் ஐயந்திரிவின்றி உண்மையுணர்ந்த பேரறிவாளரான முனிவர் கூட்டமும் நாற்பா லிருந்தும் புறப்பட்டுக் கண்டகண்ட இடந் தோறும் புறஞ்செலா மனத்தாராய், ஆண்டவனை நோக்கியபடியே அழகிய மலர்களைத் தூவிக்கொண்டே வருவாராய் 'எப்போதிறைவனைக் காண்போம்' என்ற பேராதரவாலும் கூட்ட மிகுதியாலும் ஒருவரை ஒருவர் நெருக்கித் தள்ளிக்கொண்டு அரங்க நகர் வந்து சேர்வர். அனைவர்க்கும் ஐயனே அல்லனோ ஆண்டவன்! முதற் கடவுளரும் தொழுவர்; மூதறிஞரும் தொழுவர்; இன்பமே நாட்டமாம் இமையவரும் தொழுவர். ஆணும் பெண்ணும் அனைவரும் தொழுவர்; பின் தொழாதார் யாரே? இவனல்லனோ பெரியான்; விருந்துக்கோடுவார் போல விரைந்தோடுவார் நாடுவதும் பெரு விருந்தேயன்றோ? இறைவன் கொலு வீற்றிருப்பதை என் என்பது! அவ்வழகுள்ளவன் அமர்ந்த இடமும் அழகுடையதாக வன்றோ அமையும்? கண்டவர்க்குத் தன்னழகால் களிப்பூட்டும் பூக்கள் பூத்துப் பொலியும் பொழில்கள் சூழ்ந்த திருவரங்கமன்றோ அவனூர்? அவ்வழகிய இடத்தே அனைத்துலகும் சுற்றிநின்று தொழுதேத்த நடுநிலையாய்ப் பாம்பணையின் மீதேறிப் பள்ளி கொள்வான் எத்துணை அழகாக இருப்பான்! அவனது அன்றலர்ந்த அழகிய செந்தாமரை மலர்போன்ற கண்களையும ஒளி நிறைந்த திங்கள்போன்ற முகத்தினையும் என்றும் கண்டு கொண்டே நின்று என் கல்லான மனமும் நீராய் உருகுவது எந்நாளோ? அவ் வடிவழகனை முழுவதும் கண்டு தெளிவது எளியோருக்கு எளிதோ? கண் கண்டார் கண்கண்டாரயும், முகங் கண்டார் முகங்கண்டாராயும் அன்றோ அவன் அழகின் முடிவுகாணாது நிற்பர்! கண்ணிற் பொலியும் அருணிலையும், அவனது உள்ளத்தே ஒளியுருவாய் ஒளிரும் அறிவுப் பெருக்கமும், முகத்தே ததும்பி வழியும் அறிவு நிலையும் கண்டால் கன்மனமும் உருகாதோ? அவ்வாறு உருகி நிற்குநாள் அடியேனுக்கு எந்நாள் வருமோ''

மறந்திகழும் மனமொழிந்து வஞ்சம் மாற்றி
வன்புலன்கள் அடக்கிஇடர்ப் பாரத் துன்பம்
துறந்திருமுப் பொழுதேத்தி எல்லை இல்லாத்
தொல்நெறிக்கண் நிலைநின்ற தொண்டரான

அறந்திகழும் மனத்தவர்தம் கதியைப் பொன்னி
அணியரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
நிறந்திகழும் மாயோனைக் கண்டுஎன் கண்கள்
நீர்மல்க என்றுகொலோ நிற்கும் நாளே.

(மறம்-பழிபாவம்; திகழும்-விளங்கும்; வஞ்சம் மாற்றி-வஞ்சனையை நீக்கி; வன்புலன்-நல்வழி வராத இந்திரியங்கள்; பரம்-சுமை; இருமுப்பொழுது-இரவு மூன்று யாமமும் காலையும் மாலையுமாகிய ஐந்து பொழுது; இடர்-வருத்தம். இடர்க்கும் துன்பத்திற்கும் வேற்றுமை காட்டுவர்; பின்னரும் துயரத்திற்கும் துன்பத்திற்கும் வேற்றுமை காட்டுவர். துன்பமோ இன்பமோ வாழ்நாள் முழுவதையும் உற்றுநோக்கிச் சொல்ல வேண்டியது; அது மனநிலையைக் குறிக்கும். இடர் நோய் கவலை முதலிய அவ்வப்போது எழுவனவற்றைக் குறிக்கின்றன. இவ்விடரும் இன்பமாகலாம்; ஒரு கொள்கைக்காக இடருற்றுச் சிறை புகுபவன் வாழ்க்கை இன்பமாகவே அமைகின்றது. பெரியவாச்சான் பிள்ளை துன்பம் என்பதற்குத் தீவினை எனப் பொருள் கூறுவர்.)

''மன முருகினால் கண்ணினின்றும் நீர் பெருகி வழியாதோ? அவனே அறவாழி யந்தணன். அவனை யடைந்தோரே அறவோர். அவனைக் காண்பதும் அறவழியைக் காண்பதாகும். அவர்கள் அறவோர் ஆகியபோது அவரிடத்தே மறமேது? இனி அவர்களது அற ஒழுக்கம் பொய்யொழுக்கம் அன்று. பிறரும் தாமும் எல்லாமும் இறைவனே என்று உணர்ந்தோர் எவரை ஏய்க்கப் புகுவர்? அவர்களைப் பற்றிப் பலபடப் பாரிப்பானேன்? அவர்கள் மனமே அறந்திகழும் மனமாகி விட்டது. அதற்கேற்ப அவர்கள் ஒழுக்கமும் அற ஒழுக்கமாகிவிட்டது. மனத்தை வென்றபின் ஐம்புலன்களும் அவர்வழிச் செல்லாது தான்தோன்றிகளாய்க் கண்ட கண்ட இடந்தோறும் அலைந்து திரியா அன்றோ? அன்னோர் இடர்ச்சுமையைக் கீழே இறக்கிவைத்தவர் அல்லரோ? தீவினை என்பது அவர்களுக்கேது? புது வழியே நடப்பவர் அல்லர்; தொன்று தொட்டுப் பெரியோர் வாழ்ந்து உண்மை எனக் கைகண்ட நெறியே இவர்களுக்குக் குறுகிய நெறியாகாது எல்லையில்லாத நெறியாயது. அந்நெறியில் இவர்கள் அப்புறமும் இப்புறமும் திரும்பாது நிலைநின்று நேரே செல்பவர்கள். இவர்களது போக்கு வீடும் இறைவனே யாவன். அவனிடம் போய்த் தான் இவர்களது நெறி முடிகின்றது. இறைவனை யன்றி வேறொன்றையும் காணாத இப்பெரியோர் அவனையே அல்லும் பகலும் புகழ்கின்

றனர். அவர்கள் வாய் அவனைப்பாடும்; அவர் செய்த தொழிலும அறமே; அவர் மனமும் புலனடக்கி மறமொழித்து வஞ்சமாற்றித் துன்பந்துறந்து அறந்திகழும் மனம். இவரினும் தூயோர் யாரே யுளர்? இவர்களே தொண்டர்கள். இறைவன் உள்ளே புகுதலின் மறமெலாம் ஒழிகின்றன. அவனுருவாகிய அறமே திகழ்கின்றது. தம்மை மறந்துநின்ற தகுதியுடையாருக்கு வஞ்சமேது? ஐம்புலன்கள் வேண்டும் 'கண்டு கேட்டுண்டுயிர்த் துற்றறியும் இன்பமெலாம்' இறைவனிடத் துண்மையின் அவை அவனைக் காண அவாவுமே யன்றிப் பிறிது நெறி செல்லா. இன்பமே யாயபோது துன்பமேது, துயர் ஏது? பொன்னியாறு பொன் கொழிக்கும் அழகினையுடைய அரங்கத்தில் அரவணையில் பள்ளிகொள்ளும் ஆண்டவன், அழகால் மிக்கு விளங்குபவன். மருட்கையை விளைக்கும் அவ்வழகினைக் கண்ணாரக் கண்டு இன்ப வெள்ளத்தில் அழுந்திக் கண்ணீர் பொழிந்து நிற்கும் நாள் எந்நாளோ?''

கோலார்ந்த நெடுஞ்சார்ங்கம் கூனற் சங்கம்
  கொலையாழி கொடுந்தண்டு கொற்ற ஒள்வாள்
காலார்ந்த கதிக்கருடன் என்னும் வென்றிக்
  கடும்பறவை இவையனைத்தும் புலஞ்சூழ் காப்பச்
சேலார்ந்த நெடுங்கழனி சோலை சூழ்ந்த
  திருவரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
மாலோனைக் கண்டின்பக் கலவி எய்தி
  வல்வினையேன் என்றுகொலோ வாழும் நாளே.

(கோல் - அம்பு; சார்ங்கம் - வில்; கூன் நல் - வளைந்த நல்ல; ஆழி - சக்கரம்; தண்டு-கதாயுதம்; கால் ஆர்ந்த கதி - காற்றைப் போலப் போகும் செலவு; புறஞ்சூல் காப்ப - சுற்றிலும் நின்று காவல் காக்க; சேல் - ஒருவகை மீன்; இன்பக் கலவி - பிரிவின்றி ஒன்று கலந்திருத்தல்.)

அன்பின் மிகுதியினாலே அச்சமில்லாத இடத்தும் காவல் வைக்கின்றார்கள் ஆழ்வார்கள்.

உறகல் உறகல் ஒண்சுட ராழியே சங்கே
அறவெறி நாந்தக வாளே அழகிய சார்ங்கமேதண்டே
இறவுபடாம லிருந்த எண்மர் உலோகபா லீர்காள்
பறவை யறையா உறகல் பள்ளியறை குறிக்கொண்மின்

என்று பெரியாழ்வார் பாடுவதும் காண்க.

''அழகுப் புதையல், அறக்கடல், இன்ப ஊற்று, குணக்குன்று, வெற்றி விளக்கு, அறிவுச் சாறுநிறைந்த அருட்கனி - இதற்கொரு காவல் வேண்டாவா? இதனைத் தீதணுகாதபடி காவலும் அமைந்தமை நமது நற்பேறேயன்றோ? அம்பொடு தொடுத்த நெடிய வில் ஒருபுறம் காவல்; வளைந்த நல்ல சங்கம் ஒரு புறம் காவல்; கொலைசெய்யும் ஆழி ஒருபுறம் காவல்; கொடுந்தொழில் வல்ல பெருந்தடி ஒரு புறம் காவல்; வெற்றியல்ல தறியாது மின்னிப் பொலியும் வாளொன்று ஒருபுறம் காவல்; காற்றினும் விரைந்தோடி வெற்றிபெறும் கருடன் ஒருபுறம் காவல். அவ்வூரில் அச்சம் என்பது எவருக்குத்தான் தோன்றும்? சேலுமன்றோ அஞ்சாது துள்ளித் திரி கின்றன! நீர்வளத்தால் சேல்கள் செருக்கித் திரியும் நீண்ட கழனி களும் சோலைகளும் சூழ்ந்த திருவரங்கத்தே அரவணையிற் பள்ளி கொள்ளும் திருமாலைக் கண்டு, கண்டதும் அவனொடு ஒன்றுபட்டு இன்ப உருவாய் எந்நாள் வாழ்வேன்? வல்வினையேனுக்கு அந்நாள் வருவதும் உண்டோ? ஒருநாள் கலந்து நின்று பிரிந்தால் துன்பம் பெரிதாகி வளரும். அத்தகைய துன்பக் கலவி இறைவனைக் கண் டார் பெறுவதில்லை. ஒளியைக் கண்டபின் இருளேது? இன்பமாம் இறைவனைக் கண்டபின் துன்பமேது? அவனைக் கண்டதும் இன்பக் கலவியே யாம் அடைவோம். நீரோடு நீர் கலந்தால் அதனைப் பிரிப்பார் யார்? அவ்வாறு எளிதான இன்பக் கலவியை அடையும் நாள் எந்நாளோ''

தூராத மனக்காதல் தொண்டர் தங்கள்
குழாம்குழுமித் திருப்புகழ்கள் பலவும் பாடி
ஆராத மனக்களிப்போ டழுத கண்ணீர்
மழைசோர நினைந்துருகி ஏத்தி நாளும்
சீரார்ந்த முழவோசை பரவை காட்டும்
திருவரங்கத் தரவணையில் பள்ளி கொள்ளும்
போழி யம்மானைக் கண்டு துள்ளிப்
பூதலத்தில் என்றுகொலோ புரளும் நாளே.

(தூராத - தூர்க்கமுடியாத; குழுமி - கூடி; மழை சோர - மழை போல் பெருகிவர; சீர் ஆர்ந்த - சிறந்த; முழவு - மத்தளம்.)

''அரங்கத் தரவணைப் பள்ளியானைச் சுற்றியுள்ளார் பெருந் தகை மிக்க அடியார். அவர்களைக் காணலும் அவனைக் கண்டது போலாம். அவ்வடியாரோடு அணுகினலே அவனை அடையலாம். அவரிடையே செல்லின் நாமும் ஆண்டவன் பித்தே பெரிதாகி ஆடிப் பாடிப் புரள்வோம். அந்நிலை பெறுவ தெந்நாளோ?

ஆண்டவன் அழிவில்லாதவன். முடிவிலாத இன்பமானவன். இவனிடத்தே எழுந்த காதலுக்கும் முடிவுண்டோ? அழியாப் பொருண் மேலெழுந்த காதலும் அழியாததே யன்றோ? ஆகவே, எம்பெருமானுக்கு மெய்த்தொண்டு பூண்டாரது உண்மையான மனக் காதலைத் தூர்க்கப் போமோ?

அத்தகைய தொண்டர் குழாத்தை அடியேனும் கூடுவது எந்நாளோ? அவர்களோடு திருமாலின் திருப்புகழ்களைப் பாடும் நாள் எந்நாளோ? பாடியும் ஆராத மன மகிழ்ச்சியினால் கண்ணினின்றும் மழை போல நீர் பெருக இறைவனை நினைந்துருகும் நாள் எந்நாளோ? அவனை எந்நாளும் இந்த உயர்நிலையில் நின்று ஏத்தும் நாள் என்று தொடங்குமோ? சிறந்த முழவு முதலிய இன்னிசைக் கருவிகள் கடல் போல் ஒலிக்கும் அத்தகைய திருவிழாப் பொலிவினை என்றும் உடைய திருவரங்கத்தே அரவணையில் பள்ளி கொள்வான் அவ் வாண்டவன். கொடியாரைக் கொன்றழித்தும், கூடிநின்ற அடியாரைக் காத்தளித்தும் உயர்வடைந்த ஆழியினைக் கையேந்தும் எம்மானைக் காணும் நாள் எந்நாளோ? காணற்கரிய காட்சி கண்டமையால் அடக்கற்கரிய ஆர்வத்தாலே என்னையும் மறந்து என்னுடலையும் மறந்து துள்ளிக் குதித்து மண்மேல் புரளும் நாள் எந்நாளோ?''

வன்பெருவா னகம்உய்ய அமரர் உய்ய
மண்ணுய்ய மண்ணுலகில் மனிதர் உய்யத்
துன்பமிகு துயரகல அயர்வொன் றில்லாச்
சுகம்வளர அகமகிழும் தொண்டர் வாழ
அன்பொடுதென் திசைநோக்கிப் பள்ளி கொள்ளும்
அணியரங்கன் திருமுற்றத் தடியார் தங்கள்
இன்பமிகு பெருங்குழுவு கண்டு யானும்
இசைந்துடனே என்றுகொலோ இருக்கும் நாளே.

(வன் - அழியாத; உய்ய - பிழைக்க; அகம் - மனம்; அயர்வு -வருத்தம்)

''காக்கும் கடவுளாகிய கடல்நிறப் பெரியோன் எவ்வுலகிலும் எல்லோரும் இனிதே வாழவன்றோ எண்ணங் கொள்வான்! கொடியோர் வாழ்ந்த தென்னிலங்கையும் செழித்தோங்கத் தென் முகங் கொண்டு அதன் மேல் தனது தண்ணருள் விழிநாட்டம் படப் பள்ளி கொண்டருளினன் என்றால், அவன் அருள் என்னே! என்னே! எவ்வுலகும் எவ்வெவரும் எவ்வெப்பொருளும் துன்பமிலாது பேரின்பம் பெற்று வாழவேண்டு மெனவன்றோ தாய்போல் உலகினை ஒரு வயிற்றடக்கிய

பெரியோன் எண்ணுவான்? வானகமும், வானவரும், மண்ணுலகும், மண்ணுலகினரும் வாழவன்றே திருவரங்கத்தே பள்ளி கொண்டான்! துன்பினைத் தரும் வினைகள் ஒழியவும், துன்பம் ஒரு துளியும் கலவாத இன்பமே பெருகவும், மன மகிழும் அவனடியார் வாழவும் அன்றே தென்பால் நோக்கிப் பள்ளிகொண்டான்! அவ் வடியாரோடு யான் கூடின் யானும் வாழ்வேன்; இன்பம் பெறுவேன். இன்பம் ஊட்டவந்த இறைவனை யானும் கண்டு அடியாரோடு கூடியாடிப் பாடுவ தெந்நாளோ? திருவரங்கத் திருமுற்றம் சென்றதும் இப்பேறு பெறுவேன். ஆனால், போகு நாள் எந்நாளோ? அவனுடைய அடியார் அவனது திருமுற்றத்தே நின்று அவனைக் கண்டு இன்பமே உருவாய் அனைவரும் ஒன்றுகூடிப் பாடியாடும் அப்பெருங் காட்சியைக் கண்டு அக்குழுவோடும் மனமியைந்து வாழும் நாள் எந்நாளோ? அரசனாய் உலக வாழ்க்கையில் சிறைப்பட்ட எனக்கும் இது கைகூடுவதோ?''

திடர்விளங்கு கரைப்பொன்னி நடுவு பாட்டுத்
திருவரங்கத் தரவணையிற் பள்ளி கொள்ளும்
கடல்விளங்கு கருமேனி யம்மான் தன்னைக்
கண்ணாரக் கண்டுகக்கும் காதல் தன்னால்
குடைவிளங்கு விறற்றானைக் கொற்ற ஒள்வாள்
கூடலர்கோன் கொடைக்குலசே கரன்சொற் செய்த
நடைவிளங்கு தமிழ்மாலை பத்தும் வல்லார்
நலந்திகழ்நா ரணனடிக்கீழ் நண்ணு வாரே

(திடர்—மேடு; நடுவுபாட்டு—நடுவிடத்தில்; குடை – வெண்கொற்றக் குடை; விறல்—வெற்றி; தானை - சேனை; கொற்றம்—வெற்றி பெறும்; ஒள் – ஒளி யுடைய; கூடலர் – பாண்டியர்; கொடை—தானம்.)

''வெண்கொற்றக் குடையினையும், வெற்றிபெறும் படையினையும், வெற்றிபெற்ற வாளினையும் உடையோராய்க் கொடையாளியாய்ப் பாண்டியர்க் கரசராய் விளங்கும் குலசேகர ரானவர், பொன்னியாற்றின் மேடான கரைநடுவே விளங்கும் திருவரங்கத்தே அரவணையிற் பள்ளிகொள்ளும் கடல்போலும் கருமேனிகொண்ட அம்மானைக் கண்ணாரக் கண்டு உகக்கும் காதலால் பாடியருளிய செந்நடையான பத்துத் தமிழ்ப் பாக்களையும் பாட வல்லவர்கள் இன்ப வடிவான இறைவனது இணையடியைச் சேர்ந்து இன்புறுவர்'' என்று தம்மையும் தம் எண்ணத்தையும் பாடி முடிக்கின்றார் ஆழ்வார்.

கண்டுகக்கும் காதலோடு பாடிய பாக்கள் ஆதலின், திருவரங்கனைக் காண்பதற்கு முன்னரே பாடிய பாடல்கள் ஆகும். ஆனால், திருவரங்கத்தே பள்ளிகொள்ளும் பெருமானை அங்கிருந்தபடியே புனைந்துரைத்துள்ளார் அல்லரோ? அங்கே போகாது அந்நிலையை எங்ஙனம் இவர் அறிந்தார்? உள்ளுணர்வில் மிக்க ஆழ்வார் அங்கு போய்த்தான் அறியவேண்டும் என்பதில்லையே. போக வேண்டும் என்ற எண்ணம் எழுந்ததும் எதனால்? பிறர் அந்நிலையைப் புகழக் கேட்டேயன்றோ! புகழக் கேட்டதையே புலவர் பெருமானாதலின் புனைந்து பாடுகின்றார். இனி, இரண்டாவது பாட்டிலே மணத்தூணைப் பற்றிப் பேசுகின்றாராதலின் ஆழ்வார் அரங்கநகர் அடைந்து ஆண்டவனது அடியினை வணங்கிய பின்னரே இத்திருமொழி பாடினாராதல் வேண்டும் என்பர் ஒருசாரார். திருவரங்கத்தே இறைவனுக்கு எதிரே அவரது கடவுட்டிருமணமே ஓருருக்கொண்டு நிற்றல்போல இரண்டு தூண்கள் நிற்கின்றன. அவனழகிலே ஈடுபட்டு எதிரே நிற்பார் தம்மை மறந்து கீழ் விழாதபடி பிடித்துக் கொள்ளவே அத்தூண்கள் அங்குள்ளன என்பது திருமாலடியார் மரபு. மணத்தூணைப்பற்றியும் அங்குச் சென்று வந்த அடியார் புகழக் கேட்டு ஆழ்வார் புனைந்து பாடியிருத்தல் ஆகாதோ?

மேற்கூறிய கதை உண்மையானால் இத் திருமொழியை ஆழ்வார் தமது கடவுள் வாழ்க்கையின் தொடக்கத்திலேயே பாடினார் ஆதல் வேண்டும். முகுந்த மாலை பாடியபின்னரே பெருமாள் திருமொழியைப் பாடினார் என்பது எவ்வாறு உண்மையாகும்? முகுந்த மாலை முன்னிலையில் பாடப்பட்டது என்ற கொள்கையை ஆராயும்போது இதனையும் உற்று நோக்கி ஒரு முடிவிற்கு வருதல் கூடுமாதலின் இதனைச் சிறிது போக்கி ஆராய்வோம். இதுபோது குருபரம்பரை கூறும் திருநாளைப் போவார் கதை உண்மையே என்பதனை அறிந்து இன்புறுவோம் ஆக.

# 4

## நடமாடும் கோவில்

திருவரங்கம் செல்லத் தொடங்கியபோதெல்லாம் திருமாலின் அடியார், எதிர்வந்தமையால், திருவரங்கச் செலவை நிறுத்திக் கொண்டனர் ஆழ்வார். ஏன்? திருமால் வழிபாட்டினும், திருமாலின் அடியார் வழிபாடு சிறந்ததென ஆழ்வார் எண்ணினராதலின் அன்றோ? தன் அடியார்களது அகத்தே ஒளிர்கின்றனாதலினால், அவனை அவ்வன்பர்களிடத்து நேரே காணலாம். எனவே, ஆண்டவனை வழிபடுவதினும் அடியாரை வழிபடுவது சிறந்ததாயிற்று. படமாடுங் கோயிலினும் நடமாடும் கோயிலே எவ்வகையிலும் தலைசிறந்ததாகும். உயிர்களுக்குப் பணிசெய்வதே ஒப்பற்ற ஆண்டவனது திருப்பணியாகும். இதனை இவ்வகையில் முதன் முதல் நிலைநாட்டினவர் குலசேகரரே யாவர். திருமாலை வழிபடுவார் இன்றளவும் இக்கொள்கையைப் பின்பற்றுகின்றனர். ஆனால், அவர்கள் வழிபாடு ''தேவர் திருமாளிகையி லிருந்து அடியேன் குடிலுக்கு எப்போது எழுந்தருளுவீரோ'' என்று கூறுவதோடு நின்றுவிடுகின்றது. 'வாயோ வாழைப் பழம், கையோ கருணைக் கிழங்கு' என்ற கதைதான் இவர்கள் கதை. உள்ளும் புறமும் ஒன்றுபட்டு, உயிர்களிடை ஆண்டவனைக் கண்டு, உவந்து, வழிபாடு செய்வதைத் திருமாலின் அடியவரிடைப் பரப்பியவர் குலசேகரரே ஆவர். அதுபற்றியே, ''தேட்டருந்திறல்'' என வரும் திருமொழியினைப் பெருமாள் திருமொழியிற் சிறந்ததென்று திருமாலை வழிபடுவோர் புகழ்வர்.

> தேட்ட ருந்திறல் தேனி னைத்தென்
> அரங்க னைத்திரு மாதுவாழ்
> வாட்ட மில்வன மாலை மார்வனை
> வாழ்த்தி மால்கொள்சிந் தையராய்

ஆட்ட மேவி அலர்ந்த ழைத்தயர்
வெய்தும் மெய்யடி யார்கள்தம்
ஈட்டம் கண்டிடக் கூடு மேலது
காணும் கண்பய னவதே.

(தேட்டரும்-தேடு-அரும்—தேடுவதற்கு அரிய; திறல்-திறமை யுடைய; வனமாலே - துளசிமாலே; மால்கொள் - பித்தேறின; அலர்ந்து -வாய்மலர்ந்து; ஈட்டம் - கூட்டம்)

தேட்டருந்திறல் தேனினே

அவனருளாலே அவன் தாள் வணங்குவ தல்லாது அவனேத் தேடியடைவதனே எங்கும் கேட்டறியோம். ஆனல், காட்டுவித்தால் யார் ஒருவர் காணுதாரே காண்பார் யார் கண்ணுதல் நீ காட்டாக்-காலே.'' நாடாது வந்து நலன் தருகின்ருனே, நாட்டவரில் எளிய வனே இவன்? இவன் தந்துதவும் பொருள்கள் இழிந்தனவோ? அன்று அன்று. பெருந்திறல் உடையான்; பேரின்ப வீடே தரவல்ல பெரியான். அத்துணேப் பெரியோன் நமக்கு எளிவந்து அருள்செய்தல், அவன் பேரருளினுல் அன்ருே? வாய் மணக்கும் அவன் பெயரை வழுத்துதொறும், அவனது திருப்பெயர், தேனினும் தித்திக்கும். தேனென இனிக்கும் திருமால், தேனென உடல் பற்றிய நோயொன் றினேயே போக்குவான் அல்லன். ஒப்பற்றவனே ஒருகால் ஓதவும் வாயூறும், நாவூறும், உடல் குளிரும், மயிர் சிலிர்க்கும். உடலம் இன்பத்தில் மூழ்கலும் உடல் எல்லாம் ஓடும் குருதி மாறிச் சிறந்து பாயும். உயிர்ப்பும் தூயதாய்த் தென்றலென இன்பமாய் உலவும். அறிவும் தேனெனத் தெளிவுற்று இன்பமாகின்றது. வா யூறிய மாலின் பெயர் மனத்தே கசிந்து போய்ப் பாய்கின்றது. காய்ந்த பயிராய்க் கருகிய உயிரும் தளிர்க்கின்றது. தீமை எனும் கோடை ஒழிய நன்மை எனும் தேன்மாறி அங்குப் பொழிகின்றது. இன்பவெள்ளம் உள்ளத்தையும் ஊடுருவிச் சென்று உயிரைத் தாக்கு கின்றது. தேன் மழை வெள்ளம், புரண்டோடி அறியாமையென்னும் அணேயை மோதி அழிக்கின்றது. சிற்றுயிரை ஈர்த்துச் சென்று திரு வடி நீழலில் சேர்க்கின்றது. திருவடிநீழலில் திருந்தி அமைந்தவருக் கும் பிறவி வெப்ப முண்டோ? திருவடி மலரில் தேனினே உண்டு சிற்றுயிரும் பேருயிராய்ச் சிற்றின்பம் மாறிப் பேரின்பத்தில் பிரிவின் றித் திளேக்கின்றது. வாயிலும், நாவிலும், உடலிலும், உயிர்ப் பிலும், அறிவிலும், அகத்திலும், உயிரிலும், உயிர்க்குள் ஒளியிலும்

பாய்கின்ற இத்தேனைப்போலத் திறல் விளங்கும் செம்பொருள் இவ வுலகிலேனும் எவ்வுலகிலேனும் வேறு உண்டோ?

தென்னரங்கனை

தேனும் மருந்தினை உண்டவர்க்குத் திருமாலின் செவ்வி சிறந்து திகழ்கின்றது. வாய்க்கு இனியான் ஆனவன் - கண்ணுக் கும் இனியானான நம் அரங்கன் (தென்-அழகு) -அவனைக் காண வானத்தைக் கீறி மாலுலகடைய வேண்டா. தேடிப்போனால் தேன் அகப்படாமலும் போகலாம். அத்தேனே நம்மை நாடி நம் தென் னாட்டிற்குள் புகுந்து காவிரி வழியே திருஅரங்கத்தை அடைந்து அங்கே தேங்கி நின்றது. கருப்பஞ்சாறு கன்னற்கட்டியானது போலத் தேனாய் உலகெங்கும் பரந்தவன் உருவும் வடிவும் கொண்டு திரண்டு இன்பக் கட்டியாய் எதிரே நின்றான். தமிழரிடத்தும் தமிழ் நாட்டிடத் தும் அவனுக்கிருந்த அருளே அருள்!

திருமாதுவாழ் வாட்டமில் வனமாலை மார்வனை

அவன் நமக்கு அருள்வானோ என்று அஞ்சுதல் ஒழிக. தண்ண-ருள் என்னும் தனிப்பெருந் தாயொடும் வந்துள்ளான் ஆதலின், அறிவெனும் தந்தை அடிப்பினும், அருளெனும் தாய் அணைப்பாள் அல்லளோ? இன்பமே யானவன் ஏழையும் அல்லன். உலகனைத்தும் அத் தண்ணருளின் அரிய செல்வமே யாகும். அருளுருவான திருமாதும், அன்பு கொண்டு இணைபிரியாது அவன் மார்பிலே அழுந்திக் கிடக்கின் றாள் என்றால், அவனது பேரன்பினையும் பேரின்பத்தையும் பேசுவர் யார்? மனைவியால் வந்த மாண்போடு தானும் செல்வத்தில் திளைப் பானாய் வனமாலை பூண்டு திகழ்கின்றான். இன்பக் கடலாய், அருள் வெளியாய், அறிவு மலையாய் அமைந்த அவ்வகன்ற மார்பின் ஊற்றின்பத்தினை உலகப் பெருந் தாய் ஒருத்தியே அறிந்தாள் அல்லள். எல்லோருக்கும் எளிதில் கைவரும் இவ்வூற்றின்பத்தினை ஓரறிவுயிராய்க் காட்டிற் பூத்த பச்சிலையுமன்றோ அறிந்து மகிழ்கின்றது! வனமாலை சிறிது வாடத் தொடங்குகின்றது. திருமேனி பட்டவுடனே தளிர்க்கின்றது. இவ்வாறு திருமேனியில் திளைப்பதால் எந்நாளும் வாட்டமில்லாது வாழ்கின்றது. அவன் எளிமை இருந்தவா றென்னே! அவன் ஊற்றின்பம் இருந்தவா றென்னே!

வாழ்த்தி

தேனினுமினிய திருப்பெயரால் வாய்க்குமினியானைத் தென்னரங்கனெனக் கண்ணுக்கும் இனியானை வனமாலையின் நறு நாற்றத்தோடு கடவுள் மணமும் கலந்து வீசுதலின் மூக்கிற்கு மினியானை, வனமாலையும் வாடாது தளிர்க்கும் வண்ணம் ஊற்றிற்கும் இனியானை நின்றவன், காதினுக்கும் இனியானென்பதை நேரே காட்ட அடியார் கூடிச் செவிக்கினிக்கும் திருமாலின் திருப்புகழைப் பாடுகின்றனர்.

வாயிலூறி மனத்திலூறி உயிரிலூறி உயிர்க்குள் அறிவிலூறி இன்பத் தேனை ஓரறிவுயிர்க்கும் வாடா நிலை தந்து பேரருட் பெருந் தாயோடு நம்மை நோக்கி நல்லருள்புரிய நம்மூர் தேடி வந்தவன் பால், திருமாது புல்லி நின்ற திறல் விளங்கும் மார்பகத்தே மரு உயிர்க்கும் வனமாலை பசுமணிபோல் வயங்குவதைக் கண்ணாரக் கண்டுகந்த காதலினால், மெய்யடியார் கண்ணெதிரே காண்பதுவும் கனவேயோ, நனவேயோ என்றே திகைத்து எதிரே நிற்பர். கனவாயினும் நனவாயினும் கண்ணெதிர் கண்ட கடவுளின் உருவம் காலமழியினும் அழியாது கடந்து நின்று எந்நாளும் இந்நாள்போல எழிலோடு இன்பத் தோடும் உலகமெல்லாம் இன்பமுற ஒளி சிறந்து விளங்குக என்று பலரும் ஒருங்கே பல்லாண்டு கூறுவர்.

**மால்கொள் சிந்தையராய்**

"வடிவாய் நின் வலமார்பினில் வாழ்கின்ற மங்கையும் பல்லாண்டே" என்று வாழ்த்தும்போது ஒவ்வொரு சொல்லும் பொருளும் மனத்தகத்தே வேரூன்றி நிற்றலினால் "ஓவற இமைக்கும் சேண் விளங்கவிரொளி" ஓவற இமைக்கும் உள்ளத்தொளியு மாகின்றது. சிறந்தடியார் உள்ளத்தே தேனூறி நிற்பான் ஆதலின் அந்நிலையில் அவர்கள் உள்ளம் திருமால் கொண்ட உள்ளமுமாகின்றது; பெருமால் கொண்ட உள்ளமும் ஆகின்றது. (மால் கொள்—பித்தம் கொண்ட) துன்பத்தில் நின்ற முன்னிலை மாறுகின்றனர், இன்பப் பித்தேறி நிற்கின்றனர்.

**ஆட்டம் மேவி**

உலகர், பித்தர் என்றேச ஏழுலகுண்ட இறைவனை உவப்புடன் உள்ளத்தே கண்டு ஒடுங்கிய இப்பெரியோர்கள் இன்ப உருவாயினர். ஆதலின், தம்மை மறந்து தம்மையும் அறியாது இன்பக் கூத்தாடுகின்றனர். ஆட்டம் இவர்களை மேவிற்றே யன்றி அடியார்கள் தாமே

ஆட முன் வருகின்றனர் அல்லர். ஆண்டவனை அல்லாது அறியாது அவன்வழி நின்றவர்கள் முனைப்போடு ''இத் தொழில் செய்ய வேண்டும்'' ''அத் தொழில் செய்ய வேண்டும்'' எனத் தாமே எண்ணுவதும் உண்டோ? இறைவனே இவர்களது உயிருக்குள்ளே புகுந்தானாதலின் அவன் இயக்கவே ஆடிநிற்பர். அன்பு இவர்களை ஆட்ட இவர்களும் ஆடுவர்.

அலந்தலைத்து

கண்ணெதிர் கண்டு வாழ்த்தினர். மனத்தில் அவ்வொலி சென்று தாக்கலும் மால்கொண்ட மனத்தராய் ஆடினர். மனத்தகத்தானை நேரே காணக் கூவியழைக்கின்றனர். அவனை அழைக்கும் போது அவர்கள் வாய் இன்பத்தோடும் அன்போடும் அன்றலர்ந்த செந்தாமரை போல விரிந்து நின்ற அழகினை என்னென்போம்! அவர்கள் சொற்களும் மலர்ந்த சொற்கள். மலரி லிருந்து வரும் மணம் போல எங்கும் போய்ப் பரவி மலரில் நின்ற தேனென இனிக்கின்றன அச்சொற்கள்.

அயர்வெய்தும்

இவ்வாறு ஆடிப்பாடி நின்றவர்கள் அவன் வரப் பெருமையால் இளைத்து அறிவு குடிபோய் நின்று, தம்மை மறந்து தனித்து விளங்குவர். அன்பான கள்வன் அந்நிலையில் அவர்கள் உள்ளத்தே உவந்தருளி இன்பக் கலவியில் திளைத்திருப்பான்.

மெய்யடியார்

இத்தகையார் உலகினை மருட்ட இவ்வாறு திரிகின்றனரோ? உள்ளம்போலப் புறமும் இறைவனது இன்ப வடிவம் பொலிந்து ஒளிரும் ஒளிவட்டத்தோடும் நகை முகத்தோடும் உவகையோடும் உலகை மறந்து உலவுகின்ற இப்பெரியோர், மெய்யான அடியவர்களே, மெய்யிலும் ஆண்டவனைக் காட்டும் அடியவர்களே. உண்மையே ஒழுக்கமாகக் கொண்ட உயர்ந்தோரே.

தம் ஈட்டம்

யாம் பெற்றது இவவையமும் பெறுகவென வாழ்வோர் ஆதலின், அன்னோர் அழுக்காற்றினல் தனித்து நின்று பேய்போலும் புலிபோலும் களிப்பவர் அல்லர். அடியவரோடும் ஒன்று சேர்ந்து உள்ளுருகி நிற்பதனையே ஒழுக்கமாகக் கொண்டவர்கள் ஆதலின், அவர்கள் மற்றைய அடியவர்களோ டளவளாவி நின்ற நிலையே அழகுடையதாம்; இன்ப வடிவினதாம்.

கண்டிடக் கூடுமேலதுகாணும் கண் பயனுவதே

மறம் வளரும் மாநிலத்தே அறம் வளரும் அடியார்களைக் காண வும் கூடுமோ? அது கூடுமானால் அஃதன்றோ கண்படைத்ததன் பய னாகும்? அழகினைக் காண ஆண்டவன் தந்த கண்கள் இதனினும் மிக்கதோர் அழகினைக் காணுதல் கூடுமோ? படமாடுங் கோயிலைப் பார்த்தென்ன பயன்? கட்புலனாகாக் கடவுளை அச்சட்டகம் காட்டுமோ காட்டாதோ? ஆனால், அடியவரிடத்தே அவனைக் காண்டலில் ஐயம் இல்லை. இறைவனைத் தனியே கண்டு என் பயன்? உலகிடை நின்ற நாம் உலகிடையே அவனைக் காணல் வேண்டும்; உயிரிடையே காணல் வேண்டும். அடியவர்தம் உடல் குளிர உள் குளிர உயிர் குளிர உயிர்க் குள்ளூறும் அறிவு குளிர இவர்க ளகத்தே அன்போடும் அழகோடும் பாய்ந்து உள்ளமே கோயிலாய் உவந்திருந்தபோது அவனொளி அவர்கள் உள்ளத்திருந்தும் புறத்தே எங்கும் வீசாதோ? அவர்கள் திருக்கூத்தும் திருமொழியும் அவனிருப்பை அறிவியாவோ? அந்தக் கூத்தையும் இந்தக் கூத்தையும் கண்டு களித்துக் கருத் தழிவார் கடவுள் மெய்ப்பாட்டினைக் காட்டி, அன்பர் ஆடும் திருக்கூத் தையும் அங்கெழும் கடவுட் சுவையினையும் கண்டு துய்த்து அந்த அழகு நிலையில் நில்லாரோ? அவ்வடியார் அந்த மாலவனை வாயார வாழ்த்தியும் வாவென்றழைத்தும் மால்கொண்டு நின்ற நிலையில் தண் ணந் தாமரை மலரெனத் தனியே மணந்து மலர்ந்தினிப்பதாய்த் தகைபெற்று விளங்கும் தவமுடை வாயினழகையும் அங்கு ஆய்ந்த சொற்கொண்டு அழைப்பதிற் பொலியும் அறிவு நிலையையும் காண வேண்டாவா? தம்மை மறந்து இன்பக்கலவியில் அவனோடமர்ந்து அவனேபோல அறிதுயிலமர்ந்த இன்ப நிலையினைக் காணவேண்டாவா? அடியார்கள் கூட்டமாய்க் கூடி அளவளாவி நிற்கும் அன்பு நிலையி னைக் காணவேண்டாவா? இவற்றினை ஒருங்கே இவ்வாறு கண்ட கணணன்றோ கண்! படமாடுங்கோயிலை விட்டு உள்ளமெனும் நட மாடுங் கோயிலில் புகுந்து அன்பினிற் காய்ச்சி எடுத்த இன்ப நெய் யில் தோய்ந்த அறத்திரி நுனியில் எரியும் அழகெனும் தீயின் அறி வெனும் சுடரொளியாம் ஆண்டவனைக் காணாத கண் என்ன கண்ணோ?

தோடு லாமலர் மங்கை தோளிணை
தோய்ந்த துஞ்சுடர் வாளியால்
நீடு மாமரம் செற்ற தும்நிறை
மேய்த்த தும்இவை யேநினைந்து

ஆடிப் பாடிய ரங்க வோவென்
றழைக்கும் தொண்டர டிப்பொடி
ஆட நாம்பெறில் கங்கை நீர்குடைந்
தாடும் வேட்கைஎன் னுவதே.

(தோடு - இதழ்; வாளி - அம்பு; மரம் - மாமரம்; செற்றதும் - அழித்ததும்; நிரை - ஆனிரை; பசு மந்தை.)

**தோடுலா மலர்மங்கை தோளிணை தோய்ந்ததும்**

அடியவர் பெருமையே பெருமை. அன்பே அவர்கள் வடிவம். அன்பே அவர்கள் அறிவு. அன்பே அவர்கள் வாய்மொழி. அவர்கள் உள்ளத் தறிவு எதனை அறிகின்றது? எதனை நினைக்கின்றது? ஆண்டவன் அன்பு நிலையைத்தான் அறிகின்றது. அன்புவழிச் சென்று அன்பு கண்ணுகக் கண்டு அன்புப் பிடியாகப் பிடித்தா லன்றி அகப்படுவானோ அம்மாயக் கள்வன்? அன்றியும் அன்பே யல்லாது அவனிடத்து அடியவர் வேண்டுவது யாது? அன்பே அவனது பெருமைக் கிருப்பிடம். அதனை நினைந்து உருகுகின்றனர் அடியவர்கள். அவ்வன்புக் கடிப்படையான அருள் நிலையை முதலில் நினைக்கின்றனர். தண்ணருளாந் தனிப்பெருந் தாயோடு கூடி நின்ற அருள்நிலையை அன்போடும் ஆர்வதோடும் நினைந்து மகிழ்கின்றனர். அவ் வருட் பெருந் தாய் தோன்றும்போதே, இன்பமாம் மலரில் இனிதே எழுந்து தோன்றினள். இதழ்கள் மிக்க பெருமலர் ஆதலின் அதிலூறும் தேன் உவட்டெடுத்தோட மணமும் பெருமணமாய் மிகுந்த போது, பூவெனப் படுவது பொறிவாழ் பூ எனச் சிறப்பிக்கப்படும். அப்பூவானது கண்கவர் வனப்போடும் காட்சி தந்து மற்றைய புலன்களுக்கும் வளப்பமாம் இன்பந் தந்துதவுவதை என் என்பது? அம்மலரோ இன்பவடிவினது. மலரினும் மெல்லிய ஊற்றின்பமும், தேனினுமினிய சுவை இன்பமும், பல்லாயிர மிதழ்கள் பரந்து விளங்கும் மலரினுமினிய காட்சி இன்ப மும், திருமலர்நின் றெழும் திருமணத்திலும் இனிய முகர்ச்சி இன்ப மும், பலநிற வண்டுகளும் பன்மலர் சென்று திரிந்து வாடாமே, இன்பமாய் அமர்ந்து இனிய தேனுண்டு பாடும் செவ்வழி முதலாம் திருந்திய பண்ணினும் தித்திக்கும் கேள்வியின்பமும், அருள் வடிவாம் அம்மையிடத்தும் அறிவு வடிவாம் ஆண்டவன் இடத்துமன்றி வேறெங்கே உள்ளன? அன்பு அமைந்த இடத்தில் இன்பமும் இனிதமரு மாதலின் அருட்பெருந் தாய் தோன்றியபோதே இப்பேரின்ப மலரோடே தோன்றினள். இன்ப மலரை இமைப்பளவும் பிரிந்தறி யாள். அவள் வடிவமோ மனமிரக்க மாகிய பெண் வடிவு, மலரோ

இன்ப உருவம். அது நிற்பது இன்ப அன்பு உலகில்தான். அமைதியும் இன்பமும் இன்பக் கலவியில் இணைந்திருக்கும் அழகின் பெருக்கமாம் தண்ணீர்ப் பரப்பில் தென்றல் திருக்கூத்தாடி மெல்ல உலவ, அன்றலர்ந்த மலரேபோல என்றும் தோன்றி அறிவு விளக்கெனப் பொலியும் அழகிய மலரின் இதழ்கள் இனிய காற்றினிலே மெல்ல அசைதலானது, இன்பக் காற்று வாங்கவும், கண்டோர் களிக்கவும் அம்மலரிடையே அவ்விதழ்கள் உலாவிவருதல்போன்று பெரும் புலவோருக்குக் காட்சி தந்தருளும். இதழ்கள் உலாவி அசைதலின், அம்மலர் நன்கு மலர்ந்த மலரே யாகும். அம்மை என்றும் பிரியாது அமரும் மலர் ஆதலின், அன்றலர்ந்த மலர்போல என்றும் வாடா இளமையோடு வாழ்தல் வேண்டும். அம்மையின் இருப்பே அதனுக்கு இளமையை என்றும் உதவியது போலும். பிற இடம் எல்லாம் வன்மை ஏற்றன ஆதலின், அவற்றினை ஒழிந்து நீரி லெழுந்த மெல்லிய மலரிலே வாழும் மெல்லியலின் மெல்லிய தோள்கள் எத்துணை மெல்லியன. அவ்வருளின் மென்மையை அறிந்து தழுவுவான் அறிவு வடிவான ஆண்டவனே ஆவன். தாயானவள் பிள்ளையை அணைப்பது எதனைக் கொண்டு? தோளினைக் கொண்டே யன்றோ? தாயின் அன்பினைத் தோளும் மார்புமே காட்டுகின்றன. மணாளனுக்கும் அவையே அன்பொடு இன்பமாவன; அருளோடு புணர்ந்து நிற்கின்றான் ஆண்டவன். ஐம்புல இன்பந் தரும் மலரிடையே அவ்வின்பத்தை நுகரும் அன்பு வடிவாம் கண்கவர் வனப்பும், கடவுள் மனத்தையும் காற்றில் பறக்கவிட்ட திருமணமும், குழலையும் பழித்த குதலைமொழியும், தேனொடு பால் கலந் தன்ன வாலெயி றூறிய நீரெனப் புலவர் புகழும் அறிவு மொக்குகளில் உள்ளூறிய இன்பத்தேனும், மலரினும் மெல்லிய மயிலின் சாயலும், ஆண்டவன் அறிவினாலும் அளத்த லாகாத அருளுடைய மனமும் உடையாளாய் இவ்வறுபுல இன்பத்தினையும் இறைவன் இனிதே துய்க்க அவனொடும் இணைந்தருளி நிற்கின்றாள். இவ்வாறு அறிவன், அருளொடு புணர்ந்து நின்ற நிலையைச் ''சேர்த்தி'' ''கூட்டம்'' என்று சொல்ல ஒண்ணாது. வாலறிவன் அவ்வருளில் தோய்ந்தேவிட்டான். தேனிற் றோய்ந்த தீமாங்கனியின் புரைபுரை தோறும் தேன் நிறைந்து திகழ்தல் போல, அறிவானது அருளிலே தோய்ந்து புரைபுரைதோறும் அருள் கனிந்தொழுக அம்மையை அப்பன் அணைந்தருளினான். உலகத்தே உடல்தரு இன்பம், நீரெழுந்த மலரிடை இன்பம், நீரிடை இன்பம். மக்கள் மனத்தெழு இன்பம், மலரெழுந்த மங்கையின்பம், வாலறிவனின் உண்மையறிவான இன்பம்-அம்மையின்பமும் முழுப்பொருளாய்

விளங்கு நிலையை ஓவியமாக இதுபோல எழுதுவோர் உண்டோ? அறுபுல இன்பமும் வாடா இளமையும் நம் கண்ணெதிரே கூத்தாடு கின்றன வல்லவோ? இவ்வருள் நிலையை எண்ணுந்தோறும் இப் புன்புலால் யாக்கை புரைபுரை கனிந்துருகு மன்றோ? என்புத் துளை தோறும் இன்பத் தேன் பாயாதோ?

சுடர்வாளியால் நீடு மாமரம் செற்றதும்

பழத்தின் சுவையினை உண்டு களித்தல் வேண்டும். அருட்சாறொழுகும் இவ்வறிவுக் கனியினை உண்ட பேர் உண்டோ? நமக்குப் பயன்படாது போனல் அக்கனி நல்ல கனியானல் என்னை? உயர்ந்த கனியானல் என்னை? ஆனல், பயனே வடிவான பண்ணவனைப் பரிந்து தழுவி இன்பமுற்ருர் ஆறறிவுடைய மக்களே யல்லர். ஐயறிவுடைய மாவும் மாக்களும் அவனை அடைந்து அமைவிலாத இன்பம்பெற்றன. அன்பர்க்கு இடைச்சுவராய் நின்ருரை அழித்து மறப் பேரருள்புரிவான்; அடியாருக்கு எளியனய் நின்று அறப்பேரருளும் புரிவான். உலகெலாம் ஒரு குடைக்கீழ் ஆளும் அரசரின் அருமந்த புதல்வன் இராமன். அப்பெரியான் குரங்குகளின் அரசனகிய சுக்கிரீவனுக்கு அருள் செய்ததனை என் என்போம்! சுக்கிரீவன் அறிவிற் சிறந்தவனு? திறலிற் சிறந்தவனு? மனைவியை யிழந்து வருத்தமுற்ருன்; அண்ணனல் நலிதலுற்ருன்; இராமனை அரண் என அடைக்கலம் புகுந்து அன்பனுயினன், அடியனுயினன்; அவனைத் தேற்றி அரசனும் ஆக்கினன் இராமன்; அவனுடைய பகைவனை வானுலகனுப்பினன். இம்மறப்பேரருளையே "சுடர் வாளியால் நீடு மாமரம் செற்றது" என்ற தொடர் நினைப்பூட்டு-கின்றது. இராமனுக்கு வாலியைக் கொன்றழிக்கும் பேராற்றல் உண்டோ எனக் கண்டறியப் பல புறத்தும் இருந்த ஏழு மரா மரங்களை ஒரே அம்பில் எய்யுமாறு சுக்கிரீவன் கேட்டுக் கொண்டதற் கிணங்கி, அவற்றை எய்தழித்தான் இராமன். அம்மரங்களோ மிகப் பெரிய மரங்கள், மா மரங்கள், அழிவிலா நாளொடும் நீள்வன. அவற்றைச் சுடர்வாளியால் செற்ருன். பண்டே துளையான வற்றிலே ஓட்டினற்போல அம்புவிட்டான். இவன் விட்ட வாளி ஏழு மரத்தையும் எளிதில் ஊடுருவிச் செல்லத் தீயுருக் கொண்டதோ? தீச்சுடராகிய வாளியாயதோ? அம்பு பட்டதும் தீப் பற்றிய மரம் போலப் பட்டன அல்லவோ? பல புறத்தும் உள்ள மரங்-களை வாளி எவ்வாறு செற்றது? விட்ட அம்பு நேரே செல்லும்; அஃதொழிந்து பலவிடத்தும் வளைந்து புகுந்து போதல் எங்ஙனம் கூடும்?

இவ்வாறு இராமனது எண்ணத்தை அறிந்து மராமரமேழும் செற்றழிப் பதற்கு அறிவுச்சுடராகிய வாளியோ ஈது ?

நிரை மேய்த்ததும்

மாக்களுக்கு மறப்பே ரருள்புரிந்த வண்மையை நினைந்துருகிய பின், மாவினத்திற்கு அறப்பேர் அருள் புரிந்த அன்பினை நினைந்துருகு வர், அவ்வடியவர். விலங்குகளுக்கு மிக எளியவனுன இவன் அன்பு இருந்தபடி என்னே! என்னே! தெளிந்து பாயும் நல்ல நீரும் தழைத்து வளரும் பச்சைப் புல்லும் பருகவும் உண்ணவும் தந்து தந்து அவற்றின் உடலை வளர்ப்பான். குழலினி தூதி இன்பந் தந்து அவற் றின் உயிரினை வளர்ப்பான். அவற்றிற்குப் பால் கடுப்பு எடுத்தபோது பாலினைக் கன்றிற்கூட்டியும், பாலினைக் கறந்து உலகிற் கூட்டியும் அன்பினை வளர்ப்பான். அவற்றிற்குத் தினவெடுத்தால் உரிஞ்சு கல் லாய் எதிர்நின்று இன்பத்தை வளர்ப்பான். முல்லையின் மணமும் மௌவலின் மணமும் புதுமழையோடு புகுந்து பின் மண்ணிலிருந்தும் எழுகின்ற புதுமணமும் ஒருங்கு கமழும் பச்சைப் பசேர் என்ற இடை வெளியில் - முத்தினைத் தலையில் அமைத்தெழும் பசுமணி என மழைத் துளியோடு பொலியும் பசும்புல் பரந்த அழகிய இடத்தில் - இழுமென நிழலில் இனிதே ஓடும் இன்ப ஓடையருகில் - இளந்தென்றல் மணத் தோடு புகுந்து மரத்தில் தூங்கிய புதுமழைத் துளியையும் புதுமலர்த் தேனையும் தெறித்து நிற்ப, மாலைக் கதிரவனின் பொன்னிற வெயிலும் செந்நிற வானமும் இடைநின்றபொழுதில் ஆவினைக் கூட்டி அவற் றின் மணியொலியே கை ஒத்தாகக் குழலூதி, அவை நடக்கும்போது எழுந்த தூசு படிந்த கருமணிபோன்ற திருமேனியோடு, அவை கண் களிப்ப அவற்றி னருகே புன்னகை கொண்டு அவற்றை நோக்கியும் தடவியும் இன்ப வடிவாய் நிற்பான். அவனையல்லாது வேறோர் இன் பமும் அறியாத அவையோ அவனது செந்தாமரையினும் மெல்லிய- தாய்ச் சிவந்த திருவடியை அகங்குழைந்து உடல்குழைந்து அன்போடு நாவால் மெல்ல நக்கி இவன் முகத்தை நோக்கி இன்புறுவன. இவ் வாறு இவ்வானிரைக்கு எளியனுன இறைவன் இன்ப அன்பினை எண் ணுந்தோறும் எண்ணுவார் மனத்தில் இன்ப அன்பு பாயுமன்றே? இவ வடிவமும் இவ்வுருவமும் அடியார் உள்ளத்தே ஒளிருமல்லவோ ?

இவையே நினைத்தாடிப்பாடி அரங்கவோ என்றழைக்கும்

இவற்றை நினைப்பார் படும்பாடு சொல்லவும் வேண்டுமோ? இறைவன் தன் எண்ணில்லாத பண்புகளில் இவ் வடியார்கள் இவ்

வன்பு வடிவான செயல்களையே நினைப்பர். இவர்கள் வேண்டுவதும் இவ்வின்ப அன்பே யன்றோ? அவன் செல்வத்தினை இவர்கள் வேண்டார். அவனது அளவில் ஆற்றலையும் இவர்கள் வேண்டார். அவன் அன்பொன்றினையே ஆருயிர்த் துணையாக வேண்டுவர்; நினைப்பர்; நினைந்து நினைந்து தம்மை மறந்த அளவில் நினைவும் கனவும் அறியாது ஆடுவர், அதற்கேற்பத் தம் முயற்சி இன்றியே பாடுவர். ''ஓ அரங்கா, நின் அன்பு இருந்தபடி என்னே என்னே! அரங்கா! அரங்கா!'' என்று அவனை வாய்விட்டழைப்பர்.

**தொண்டரடிப் பொடி ஆடநாம்பெறில் கங்கைநீர் குடைந்தாடும் வேட்கை என்னுவதே !**

இவர்கள் தொண்டு இருந்தவா றென்னே! ஏதேனும் விரும்பி-னரோ? 'அது வேண்டும், இது வேண்டும்' என மன்றுடுகின்றனரோ? அவனுடைய அன்பினை நினைந்து அன்புருவாகின்றனர். அவர்கள் உள்ளத்தே நினைந்திருக்கும் ஆண்டவன்—அவர்களை நாம் காணும் போது—நம் கண்ணுக்கும் அன்பு வடிவாக விளங்குகின்றான். அவர் கள்மேல் வீசிய காற்றும் அன்பு மணக்கும். அவர்கள் காலடியில் நின்ற மண்ணும் அன்பூறும், இன்பமூறும், அறிவூறும். கடவுளின் இன்பக்கூத்தை என்றும் அங்குக் காணலாம். அங்குதத்தான் குரவைக் கூத் தாடுகின்றான். அந்தக் காலடி மண்ணில் புரண்டாலும் கடவுளு-டன் இன்பக் கலவி எய்துவோம். அதிலே குளித்தால் உடல் தூசு பட்டாலும் உள்ளந் தூயதாகும், உயிர் தூயதாகும், உடலும் குன்று உரம் பெறும். இதைவிட்டுப் புறத்தூய்மை ஒன்றே தரும் கங்கை முதலிய ஆற்றில் குடைந்து குடைந்து ஆடிப் பயன் என்ன? பெண்க-ளோடு குடைந்தாடிப் பெரும்பழியே பூணுவோம். சில்லென்றோடும் பனியாற்றில் குடைந்து குடைந்து ஆடும்போது நாம் பெறும் ஊற்றின் பத்தை இந்த மண்ணில் புரண்டாலும் யாம் பெறலாமே! பின் கங்கை யில் ஆடவேண்டும் என்ற அவா எதற்கெழ வேண்டும்? காலடி மண்-ணென மனங் கூச ஒண்ணுமோ? கங்கை நீரும் கடவுளின் காலைக் கழு-விய நீர்தானே? சன்னு முனிவரின் காது வழியாக வந்த எச்சில் பட்ட நீர்தானே? பகீரதனின் முன்னோரின் எலும்பின் மேலோடிய சுடுகாட்டு நீர்தானே ? இன்றளவும் சிவனாரின் சிக்குத்தலையில் புகுந்துதானே வருகின்றது! இதனினும் இத்தொண்டரடிப்பொடி எவ்வாறு தாழ்ந் தது? ஓரிமைப்போது இறைவனோடு கூடிய கங்கையில் விளங்குவதி-லும், ஓயாது இறைவனோடு இன்பக் கலவியிலமர்ந்த அடியார்களின் காலடி மண்ணில் கடவுள் விளங்க மாட்டாரா?

நாதனை நரசிங்கனை
　　நவின்றேத்துவார்கள் உழக்கிய
பாததூளி படுதலால்
　　இவ்வுலகம் பாக்கியம் செய்ததே.

(பெரியாழ்வார்)

அத்தொண்டரடிப்பொடியில் நாமும் அரும்பேறு பெறவேண்டி அடியார்க் கன்பராய் ஆடுவோம்.

ஏற டர்த்ததும் ஏன மாய்நிலம்
　　கீண்ட தும்முன் இராமனுய்
மாற டர்த்ததும் மண்ண ளந்ததும்
　　சொல்லிப் பாடிவண் பொன்னிப்பேர்
ஆறு போல்வரும் கண்ண நீர்கொண்டு
　　அரங்கன் கோயில் திருமுற்றம்
சேறு செய்தொண்டர் சேவ டிச்செழுஞ்
　　சேறென் சென்னிக் கணிவனே.

(ஏறு-காளை மாடு; அடர்த்ததும்-வலியழித்ததும்; ஏனம்-பன்றி; மாறு-பகைவர்; பொன்னி-காவேரி; சென்னி-தலை.)

மறப் பேரருளையும் அறப் பேரருளையும் மேலே பாடிய அடியார், அவனுடைய அன்பன்றி வேறொன்றும் அறியார் ஆதலின், ஒவ்வொன்றையும் தனித்தனிச் செய்யுளில் வைத்துப் பாடி அவற்றை முன் பாட்டிற்போலக் கலந்து துய்க்காது தனித்தனிச் சுவையாகத் துய்ப்பர்.

**ஏறடர்த்ததும்**

நப்பின்னையின் தந்தையானவன் தன் பெண்ணை, ஆனேறு ஏழினையும் அடக்கியவனுக்கே, தருவதாக உறுதி கூறினமையால், முதலே தொடங்கித் தன்னொடு வாழ்ந்து வந்த நப்பின்னையை மணப்பதற்கு வேண்டி அவ்வேழ் ஆனேற்றையும் வென்றடக்கி அழித்தருளினன். நாமும் முதலே தொடங்கி இவனுடன் தொடர்புடையேயாம். நமக்கும் இவனுக்கும் இடைச்சுவராய் நின்ற எழுவகைப் பிறவியினையும் இல்லாது செய்வான் இவனே.

**ஏனமாய் நிலம் கீண்டதும்**

இவ்வுலகமாம் தன் பொறையெனும் மனையாளைப் பாயெனச் சுருட்டிக் கொண்டு ஓர் கொடியவன் (இரணியாட்சன்) கீழுலகம்

புகுந்தபோது, இறைவன் பன்றியாய் வந்து நிலத்தை அகழ்ந்து சென்று கீழுலகில் மறைந்திருந்த அப் பொன்கண்ணனைக் கொன்று தன் கொம்பினுல் உலகத்தைக் குத்தி எடுத்துவந்தனன். நாமும் கீழ்நிலையிலிருந்தால் கைகொடுத்துத் தூக்கிவிடுவான் இவனே.

முன் இராமனுய் மாறடர்த்ததும்

சீதையைக் கவர்ந்துசென்ற அக்கொடியோனை அழித்து நம் தாயை மீட்டுவந்தவன் இவனே. அவ்வண்ணமே நம் பகையாகிய அவா வெகுளி அறியாமை என்றவைகளை அழித்து, நமது அறிவினைப் பழையபடி கொண்டுவாரானே?

மண்ணளந்ததும்

வானவர் மகிழவும் மண்சுமை தீரவும் மாவலிபால் மூன்றடி மண் இரந்துபெற்று, மூவுலகையும் மாவலியையும் அளந்தான். நம் மனத்தையும் மூன்று நிலையையும் அளந்து நான் எனும் செருக்காகிய மாவலியைக் கீழமுந்தச் செய்து நமது வினைச்சுமையைப் போக்குபவனும் அவனே.
சொல்லிப் பாடி

இவற்றையெல்லாம் அவன் செய்தது யார் பொருட்டு? அருள்தாயின் பொருட்டன்றோ? நப்பின்னையும், சீதாபிராட்டியும், மண்ணுலகும், அவனை மணந்த அருட்பெருந் தாயர் ஆவர். எனவே, அவனது திருவிளையாடலனைத்தும் அருளே யடியாக எழுந்தவைகள். அவ்வருள் உள்ளவரை நாம் அஞ்சுவானேன்? அருள் செய்ய வருவானேல் எவ்வுருவும் எவ்வடிவும் ஏற்றதாகக் கொள்வான். எவ்வடிவும் தன் வடிவமாதலின், எதனையும் தான் தனக்கேற்ற வடிவ மென்று கொண்டு அடியாருக்கு அருள்புரிய வருவான். இடையனுய் மேய்ப்பான்; அரசனுய் ஆள்வான்; குறளனுய்க் குறுகுவான்; நெடியனுய் நீளுவான்; பன்றியாயும் போந்து அதன் தொழிலாகிய நிலங் கிளைத்தலையும் செய்வான். நாயென வந்தால் குரைக்க வேண்டாவா? பன்றியென வந்தால் நிலங்கீண்டல் வேண்டாவா? இடையனுக வந்தால் ஏறடர்க்க வேண்டாவா? மன்னனுக வந்தால் மாறடர்க்க வேண்டாவா? இயற்கையோடு மாறுகொள்ளாத இத்திருக்கூத்தினைக் கண்டால் வரும் மெய்ப்பாடுகளை எப்புலவர் விரித்துரைப்பர்? அன்பர்கள் இக்கதைகளைப் புனைந்துரைத்துப் பாடாநிற்கின்றனர். கதையும் கருத்தும் ஒன்றுபடவே கதையாகவே விளங்குகின்றனர்.

வண்பொன்னிப் பேராறுபோல் வரும்கண்ணநீர்
கொண்டு அரங்கன் திருமுற்றத்துச் சேறுசெய்
தொண்டர்

அன்பினை எண்ணுந்தோறும் உவகைச் சுவையும் மெய்ப்பாடும் தோன்றுகின்றன. இன்பக் கண்ணீர் பெருக்கி நிற்கின்றார்கள். வற்றாது நின்று வெள்ளமாய்ப் பெருகி உலகினை ஊட்டும் வண்மை பெற்ற பொன்னி எனும் பேராறு போலக் கண்ணீர் உகுத்து நின்றனர். உள்ளத் தெழுந்த உவகைவெள்ளம் கண்வழியாக அலை புரண்டு வருகின்றது போலும். ஆற்றிடைக்குறையாய் அழகோடு அமைதியுடையதாய்ப் பேராற்றின் பெருமையோடு பொலிதலால் அரங்கம் இன்ப ஊற்றாயிற்று. திருவரங்கக் கோயில் புனிதமான இடமானதால் அத்திருமுற்றத்தில்தான் அடியவர்கள் கூடி நிற்கின்றனர். புறத்தே பொன்னியாறுபோல அடியார் தம் அகத்தே ஓடும் இன்பப் பேராற்றைத் தம் கண்வழியே திருப்பி விட்டமையால், தம் கண்ண நீரால் திருமுற்றத்தைச் சேறு செய்து நிற்கின்றனர்.

சேவடிச் செழுஞ்சேறு என் சென்னிக் கணிவனே

அவர்களது செவ்விய திருவடி புதைந்த சேறு இன்ப வெள்ளத்தோடு இணைந்த தன்றோ? சேறென இகழவும் படுமோ? தொண்டரடிப்பொடி அஃதேயன்றோ? "கோயில் மண்ணைத் தெள்ளித் தருகிறேன்" எனச் சிறுமிகள் அந் நுண்ணிய வெண் பணலினைப் புகழ்ந்து மழை வேண்டிப் பாடுவர். இச்சேறு, அடியாராகிய நடமாடுங் கோயில் நின்றருளிய மண்ணன்றோ? அது திருவரங்கத்துத் திரு முற்றத்திருத்தலின் படமாடுங் கோயில் மண்ணுமாயிற்று. இருவகை ஏற்றம் பெற்ற ஈது திருமண்ணே யாகும். அதனிடையே இன்பத்தினைக் கண்ணநீராக நேரே காணலாம். அதனினும் அழகிய பொருள் வேறொன்றுண்டோ? பல்வளம் நிரம்பிய பொருளும் உண்டோ? ஈதே செழுஞ்சாந்து; மற்றைய சாந்து புறத்தில் விளங்குவன. இஃது உள்ளத்தே ஊறி அறிவும் உயிரும் மணக்க வீசி அணிந்தார்க்கு இன்பமூட்டும். இஃது அடியேனுக்குக் கிட்டுவதொன்றோ? இதனை யான் எனது புன் சென்னி பெருமைபெற அணிதல் வேண்டும்.

தோய்த்த தண்தயிர் வெண்ணெய் பாலுடன்
உண்ட லும்உடன் றாய்ச்சி கண்டு
ஆர்த்த தோளுடை எம்பிரான்என்
அரங்க னுக்கடி யார்களாய்

நாத்த ழும்பெழ நாரணாஎன்
றழைத்து மெய்தழும் பத்தொழுது
ஏத்தி இன்புறும் தொண்டர் சேவடி
ஏத்தி வாழ்த்துமென் நெஞ்சமே.

(உடன் உண்டல் - ஒரே காலத்து உண்ணுதல் ; உடன்று — கோபித்து ; ஆய்ச்சி— யசோதை; ஆர்த்து—பிடித்துக் கட்டிய; பிரான் — தலைவன்; நாத்தழும்பெழ—நாக்குத் தடித்துப் போக; மெய் தழும்ப — உடம்பு விழுந்து வணங்குவதால் காய்ப்பேற; ஏத்தி—போற்றி.)

அடியார்கள் அவனது அறப்பேரருளைத் தனிச்சுவையாகத் துய்க்கின்றனர். மறப் பேரருளை எண்ணிய போதினும் அறப் பேரருளை எண்ணியபோது இவர்கள் நிலை மிக இன்பமாயது, ஒப்புயர்வற்றதாயது. அது நிலைக்கப் பல்லாண்டுகூறும் நிலையில் வந்துவிட்டேன் யானும். மறப்பேரருளைப் பாடும் நிலையில் பகையாகிய கொடியாரது வருத்தத்தையும் பாட வேண்டுதலின் அன்பே வடிவான அடியார் மனம் அதனையும் பொறுத்ததில்லை போலும். "பகை எழுந்ததே, இறைவனோடு பொருவார்களே என்னுமோ?" என அச்சம் இல்லா விடத்தும், அன்பின் மிகுதியால் அஞ்சி நின்றமையால் அந்நிலையில் வாழ்த்திற்கு வாய்ப்பு இல்லை. ஆனால், அறப் பேரருளில் அவன் அன்றி வேறொன்றும் இல்லையன்றோ? இதைக் கண்ட அடியாரின் நிலையினை எவ்வாறு எடுத்துரைப்பது? இறைவனது எளிவந்த நிலையை என் என்போம்! எமக்கெல்லாம் இறைவனை ஆண்டவன் ஆய்ச்சியால் கட்டுண்டான். என்னே! என்னே! கட்டி கட்டியாகத் தோய்ந்த தயிர் தடாநிரம்பக் கிடக்கின்றது. வெண்ணெயும் உறி நிறைய உள்ளது. பாலும் மிடா மிடாவாகக் கிடக்கின்றது. (தோய்ந்த தயிர் தண்ணென்றிருத்தலை இயற்கையோடு மாறுபடாமல் புனைந்துரைத்த ஆழ்வார், தயிரினால் வரும் இன்பமனைத்தும் துய்த்தவர் போலும்). ஒருவரும் இல்லாத அற்றம் பார்க்கின்றான் கண்ணன். அசோதை, பால் தாராளா? தயிர் தாராளா? வெண்ணெய் தாராளா? இவற்றிற்கு இவன் அலைந்து நிற்க ஏழைக் குடும்பத்திலோ பிறந்தான்? அவள் தந்தவற்றை யெல்லாம் உண்ட பின்னும் கள்ளத்திலேயே கண்ணன்தன் கருத்தோடுகின்றது. அஃதுமோர் திருவிளையாடலே. கள்ளவிழியை அப்புறமும் இப்புறமும் குறுவிழியாக விழித்துப்போய்த் தடாவிலும் மிடாவிலும் உறியிலும் அவாவினால் கீழ் ஆழக் கையை விட்டு எவரும் வருவதன் முன்னம் அனைத்தை

யும் உண்ண வேண்டும் என்ற பரபரப்பால் பால் தயிர் வெண்ணெய் என்றவற்றை ஒருங்கே உடன் உண்கின்றான். முச்சுவையும் ஒரு சுவையாக அவற்றை ஒரு சேர வாயில் துறுக்கின்றான். தோய்ந்த தயிரில் கையிட்டபோது அது தண்ணன்றிருந்ததால் அவ்வூற்றின்பத்திற்கு மயங்கிச் சிறிதுபோது கையை எடாது தாழ்த்தனன் போலும். இதற்குள் வந்துவிடுகின்றாள் அசோதை. அவனிடத்தே அவளுக்கு எவ்வளவு அன்புண்டோ, அவ்வளவு சினமும் கொள்கின்றாள். வாயது கையதுவாகக் கொண்டி (களவு)யோடே கண்டுபிடிக்கின்றாள். கையையும் காலையும் உடலோடு சேர்த்துப் பிணைத்துக் கட்டிவிடுகின்றாள். அந்தத் தழும்பினை அவனது தோளில் இன்னும் காணலாம். அவளுக்கு நடுநடுங்கி நிற்பவன்போல அழுகையும் தொழுகையுமாய்ச் சிறுவாய் நெளித்து அஞ்சி நோக்குவதுமாய்க் கூத்தாடுகின்றான். கட்டுண்ண அன்றோ களவாடினன்! இடைக்குடி! அதிலும் பெண், இவளுக்கு எல்லாம்வல்ல இறைவன் எளியனாய் அஞ்சி நிற்பதென்றால் என் என்பது! எந்தத்தோளினைக் கட்டினாள் அவள்? தோடுலா மலர்மங்கை தோளிணை தோய்ந்த தோளன்றோ இன்று கட்டுண்டது? ''கண்ணி நுண் சிறுத்தாம்பினால் கட்டுண்டு எத்திறம் உரலினோடிணைந் திரங்கிய எளிவே.'' இதை எண்ணுந்தோறும் அவன் எனக்கும் எளியவனாவான் அல்லனோ? எம்பிரான், எமக்கெல்லாம் உரியனாகிய தலைவன். ஏன், அம்மட்டோ? ஏழையேனாகிய எனக்கே உரிய அரங்கன் என்று சொல்லும்படியாக வன்றோ அவன் எளிமை இருந்தது! அவனுக்கடியார் ஆனவர்கள் இந்த எளிவினை நோக்கி மகிழ்ச்சியால் நாக்குத் தடிப்பேற, மழலை பேசும் குழந்தைகள் அன்பால் ''அம்மே'' என்று பேசுதல் போல, நாரணா என்று அவன் பெயரை அடைவுகெடச் சொல்லி யழைக்கின்றனர். இத்தகைய உயரியவன் இவ்வாறு எளியவன் ஆனானே என வீழ்ந்து வீழ்ந்து வணங்குகின்றனர். மெய்ம்மறந்து நின்றார்களாதலால், பன்முறை வீழ்ந்து வணங்கியதை அறியாது இன்னமும் வணங்காது நிற்கின்றோமே என வீழ்ந்து விழ்ந்து வணங்குகின்றனர். அதனையும் அறியாமல் மறுபடியும் வணங்குகின்றனர். இவ்வாறு எளிமையில் ஈடுபட்டு வணங்கியதால் அவர்கள் உடம்பெல்லாம் காய் காய்த்துப்போகின்றன. அவனது அன்பின் எளிவினை எல்லா வகையிலும் ஏத்துகின்றனர். இவர்கள் தம் உள்ளத்திற் கண்டதை உரை வழியாக ஓதுகின்றதே நம்மை உவகைக் கடலில் அழுத்துமானால், இறைவனை உண்ட இவர்கள் உள்ளம் என்ன நிலையில் இருக்கும்? இறைவனை உள்ளத்தே கண்ட போது இவர்களே இன்பமாகின்றனர். இறைவனை இவர்களிடை

நன்கு காணலாம். வெண்ணெயுண்ட விளையாட்டினும் இவர்கள் இன்பக் கூத்து எனக்கு இனியதாயிற்று. இவர்கள் நாத்தழும்பேறத் தொழுது மெய்ம்மறந்து மெய் தழும்பத் தொழுது இன்பமுறுவதனைக் கண்டபோது, இந்நில உலகில் அரியநிலை யாதலின், இவர்கள் இறைவனுக்குப் பல்லாண்டு கூறுவதுபோல இக்காட்சி என்றும் விளங்கவேண்டி வாழ்த்துக் கூறுவேன். அவர்கள் சேவடியைப் பல வகையாலும் போற்றுவேன். இறைவனினும் இவர்களே எனக்கினியார்.

பொய்சி லைக்குர லேற்றெ ருத்தம்
  இறுத்துப் போரா வீர்த்தகோன்
செய்சி லைச்சுடர் சூழொளித் திண்ண
  மாமதிள் தென்ன ரங்கனும்
மெய்சி லைக்கரு மேக மொன்றுதம்
  நெஞ்சில் நின்று திகழப்போய்
மெய்சி லிர்ப்பவர் தம்மையே நினைந்து
  என்ம னம்மெய் சிலிர்க்குமே.

(பொய் - வஞ்சமான; சிலை - சினம், அல்லது வில்; சிலைக்குரல்-வில் நாண் எறிந்தாற்போலும் குரலுடையது; எருத்தம் - முகப்பு; போர் - சண்டைக்கு எழுந்தது; அரவு - காளிங்கன் என்னும் பாம்பு; ஈர்த்த - பொய்கையின் நின்றும் வெளியே இழுத்துப்போக விட்ட; சுடர்சூழ் ஒளித்திண்ண மாமதிள் - சுடர் ஒளி திண்ணம் மா மதிள் சூழ்; திண்ணம் - வலிமை யமைந்த; மா - பெரிய; மெய் - உடலிலே; சிலை - வில்லொடு கூடிய; கருமேகம் - கருமேகம் போன்ற கண்ணன்; நின்று திகழ - உள்ளே நின்று வெளியே திகழ; மனம்மெய் சிலிர்க்கும் - முன்னைய மனநிலையின் வடிவமாகிய துன்பம் நீங்கி இன்ப வடிவினதாகும்.)

ஆய்ச்சிக்கும் ஆண்டவன் எளியனாயினன். அவன் எளிவந்து அருள் செய்தமை, அவன் ஓர் இளைஞனாய் இருந்ததாலோ என்னும் ஐயமுறல் வேண்டாம். இடைச் சிறுவனா யிருந்தும் செயற்கரிய செய்தான். அத்தகையான் அல்லனோ இவ்வாறு கட்டுக்கடங்கிக் கள்ளவிழி விழித்தான். அவனுடைய எளிவினை உயர்த்தும் அவனுடைய அருமையினை இந்தப் பாட்டில் நினைக்கின்றனர்.

நப்பின்னையை மணக்க எண்ணினன் கண்ணன். அவளுடைய தந்தை ஆனேறேழினையும் அவனெதிர் அவிழ்த்து விட்டான். அவை பாய்ந்துவந்தன. பார்த்தவர்க்கு என்ன தோன்றிற்று?

கொடுமையாம் பெயரதொன்றும், கொலைத்தொழில் பெயர தொன்றும், கடுஞ்சினப் பெயரதொன்றும், காற்றெனும் பெயரதொன் றும், இடி எனும் பெயரதொன்றும், எரியனல் பெயரதொன்றும், அட லெனும் பெயரதொன்றும் அழகிய வடிவந்தாங்கி அண்ணலை உண் ணப் பொய்யாம் ஆனென மருளவந்த வண்ணமும் கண்டு நின்றார். மனமதும் நைய நின்றார். விண்ணதில் வாலை நீட்டி மிடுக்கொடும் விறலும் கொண்டு, மண்ணதில் கொம்பைத் தாழ்த்தி வருவதை என்னே என்பர். வலிவொடும் வயிற்றில் தாக்கிக் குடரினை மாலை யாகக் கொள்வதே குறிப்பாக வரும் அவற்றின் அஞ்சத்தக்க நிலையி னைக் கண்டவர் நடுநடுங்கினர். ஆனேறுக்குக் கொலைபுரியும் எண் ணம் உண்டோ? ஆனல், இவற்றிற்கு அவ்வெண்ணம் உண்டு. ஆத லின் ஆனேறென்பது பொய்யே. சினத்தால் கண் சிவந்து விட்டன. வின்னாண் எறிந்ததுபோல இடிக்குரலோடும் வந்தன. கண்டார் வயிறு குழம்பவும் கேட்டார் மனம் நடுங்கவும் வந்த ஆனேறுகளைப் பார்த்தான். ஓரே பாய்ச்சலாகப் பாய்ந்து அவற்றின் முசுப்பினைப் பிடித்தழுத்தினன். அதனையே ஆற்றாது அவ் ஆன் ஏறு ஏழும் முசுப்பு முரிந்து வலிகுன்றிச் சினமெல்லாம் அழுகையாக, இடிகுரல் எல்லாம் ''அம்மே'' என்றவிந்துபோகப் பொய்ம்மை அழிந்து ஒழிந்தன. ஓரெருதுபோல ஏழெருதும் வென்ற ஒப்பற்றவனை உணர்வார் யார்? ஏற்றெருத்தம் இறுத்தா னன்றே ஆர்த்த தோளுடைய எம்பிரான்? அதுவொன்றே அவனது ஆடற்கிடம்! காளிங்கப் பாம்பு வெறுந் தண்ணீர்ப் பாம்பன்று, போரே உருவானதொரு பொய்ப் பாம்பாம். இளஞ் சிறுவர் தண்ணீர்ப் பாம்புகளை வெளியே இழுத்து எறிவது போல அப்பொய்ப் போரரவினை மிக எளிதாக வெளியே எறிந்தான்.

இவ்வாறெல்லாம் திருவிளையாடல்கள் புரிந்து திருவாய்ப் பாடிக்குத் தலைவன் (கோன்) ஆயினன். அத்தகையானல்லனே கட்டுண்டு உரலொடும் கிடந்தான்?

கல்லினற் செய்த திண்மையையும் மிக்க ஒளியையும் உடைய திருமதிள்கள் சூழ்ந்த திருவரங்கத்தில் நம்மை நாடி வந்தவன் அமர்ந்தான். நமது அரும்பெரும் பொருளுக்கு அரண்களும் அமைந்-தவா றென்னே! அழகிய கோவிலுக்குள் அரவின் மணியான அரங்-கன் பொலிதலாலே, கல்லா லாகிய மதிள்களின் புறத்தும் அவன் சுடரொளி விளங்குகின்றது. அவனை மதிளுக்குள் வைத்தடக்க முடியுமோ? வைக்கோற் போரில் விளக்கினை வைத்து மறைக்க முடியுமோ?

அவ்வழகிய அரங்கனது உருவம் இருந்த வகைதான் என்னே? கார்முகிலானது தனது மெய்யினிடத்தே ஒரு வில்லோடு வந்தெதிர் தோன்றியதுபோல இராமனுய்த் திகழ்வான். இக்கருமுகிலே அடியவர்தம் நெஞ்சில் நின்று நிலவுகின்றது. மதிள்களுக் குள்ளும் அடைத்து வைக்க ஒண்ணுத பொருளை மனத்திலேயும் அடைத்து வைக்க ஒண்ணுதன்ருே? அரவின் மணியாம் ஒரு (மாணிக்கம்) குப்பியின் உள்ளிடத்தே நின்ற நிலை புறம்பே தெரியுமாப்போலவே பெரிய பெருமாளைத் தங்கள் நெஞ்சிலே எழுந்தருளுவித்து வைக்கையாலே நிழலிடாநிற்குமன்ருே? உள்ளும் புறமும் ஒளிவிடுமாறு ஒப்பற்று உயர்ந்தவனை உள்ளத்தே ஒளித்து வைத்தவர்களது உடலம் இன்பவடிவாதலை எடுத்துரைக்க வேண்டுமோ? இன்பம் அடங்காது மயிர்க்கால்தோறும் வெளிப்பட்டு உலகில் பாய்தலால் மெய்சிலிர்த்து நிற்கின்றனர் அவ்வன்பர்.

யான் இறைவனை எண்ணேன். உலகலந்தவனை உள்ளத்தே அளந்து வைத்து இன்பமுற்று அவ்விறைவன் ஒளியினை நாம் எல்லாம் காணப் புறம்பும் திகழுமாறு செயற்கரிய செய்த இந்நடமாடுங் கோயில்களையே என்னுடைய நெஞ்சம் நினைக்கும். இறைவன் உள்ளத்தில் ஒளிர்வதால் இவர்கள் உடலம் சிலிர்த்தது. ஈதொரு வியப்போ? இவர்களை என்னுள்ளத்தே வைத்து எண்ணியபோது என்னுடலன்ருே சிலிர்த்தது, என்னுள்ளமும் அன்ருே மெய்சிலிர்த்தது! ஈதன்ருே புதுமை! தொட்டறியும் பொருளான உடலம் சிலிர்த்து மகிழ்ந்த நிலையை, உருவமில்லாத என் உள்ளமும் அடைந்தமையன்ருே பெருவியப்பு! இவ்வியப்பிற் கிடமாயவர் இவவடியாரே யன்றி இறைவன் அல்லன். பிறருடைய மனம் திரிந்து நிற்பதில் பெருமை இல்லை. உலகமுமாக உலவிய எனதுள்ளம் ஒரு முகமாகி உவகை பூத்ததே இதில் உள்ளதோர் ஏற்றம். எனவே, இவர்களையன்றி வேருென்றினையும் என் நெஞ்சம் நினையாது.

ஆதி அந்தம் அநந்தம் அற்புதம்
  ஆன வானவர் தம்பிரான்
பாத மாமலர் சூடும் பத்தி
  இலாத பாவிகள் உய்ந்திடத்
தீதில் நன்னெறி காட்டி எங்கும்
  திரிந்து அரங்கன்எம் மானுக்கே
காதல் செய்தொண் டர்க்கெப் பிறப்பிலும்
  காதல் செய்யும்என் நெஞ்சமே.

இறைவனை வணங்காத பேர்களை என் என்பது? இறைவனை அவர்கள் அறிகிலர் என்போமா? அவனை வணங்குவது என் என்பதை அறிகிலர் என்போமா? எவற்றிற்கும் முன்னாய் மூத்தவனே எவற்றிற்கும் முதலானவன்; எவை முடிந்தபோதும் தான் முடியாது முகிழ்த்தலின் அவனே எவற்றிற்கும் முடிவு. நமது முதலையும் முடிவையும் நாம் அறிதல்வேண்டும் எனச் சொல்லவும் வேண்டுமோ? முதலையும் முடிவினையும் அறிய முயன்றால் அது முடிவதொன்றோ? முடியாமல் என்னை? வானில் ஒளித்துள்ளானோ? எப்பொருளிலும் எவ்விடத்தும் எக்காலத்தும் இடையீ டில்லாது நிறைந்து நின்றுள்ளான்? தொட்ட தொட்ட இடந்தோறும் தொடு மணற்கேணியில் ஊறித் தோன்றும் நீர்போலத் தொல்லைமால் தோன்றாநிற்கின்றான். இருந்த இடத்திலேயே இறைவனை எதிர்காணலாம். அவனிடம் நமக்களிப்பதற்கு என்ன உண்டு என்ற ஐயமோ? எதில்லை இறைவனிடம்? வீட்டு நிலைபெற்ற வானவர்களே எல்லாம் வேண்டி இவனைத் தலைவனாகக் கொண்டார்கள் என்றால், நாம் வேண்டுவ தொன்றோ இவனிடம் இல்லாமற்போகும்? வானவர் தலைவனாய் மிகமிக உயரியவனாபடியால், மிகமிகத் தாழ்ந்த நாம், முடவன் கொம்புத் தேனுக்கு வேணவாக் கொண்டதுபோல, இவனை நாடி நின்றால் என்ன பயன்? எல்லாப் பயனும் உண்டு. ஈதன்றோ இவனிடத்திருப்பதோர் வியப்பு (அற்புதம்)! வியப்பே ஒரு வடிவான வானவர் பெருமான் உயர்நிலைக்கு ஒரு சிறிதும் ஒவ்வாத கீழ்நிலையில் வந்திறங்கி நம்முடன் ஒன்றுகலந்து அருள் செய்வான். உலகிற்கே முதலாய் நின்றவன் உலகத்துப் பல பொருளுமாகி உலகியலை நடத்துகின்றான். பிறவாதவன் அன்பரிடத்தே பிறந்தது போலப் பெரு விளையாடல் புரிகின்றான். அழிவில்லாதவன் அழிவுற்றவன்போல அன்பருக்குஅஞ்சி நிற்கின்றான். முடிவிற்கும் முடிவானவன் நம்மை முடிவிலா நிலைமையில் முந்துறத் தள்ளுவான். இடையீ டில்லாது எங்கும் நிறைந்து நின்றோன் அங்கோ இங்கோ ஓரிடத் தெழுந்து உருவும் வடிவுமாய் நிற்பான். வானவர் தம்பிரானாய் வாழ்பவன் பன்றியாயும் அன்பர்க் கெதிர் வந்து உலாவுவான்.

இவ்வாறு நமக்கென எங்கும் வந்துநின்று எளியவனான இறைவனை எண்ணாதாரை என் செய்வது? எம்மைத் தேடித் திருவடி நோவ இவ்வுலகடைந்த எம்மானின் திருவடிமலரை நமது தலைக் கணியாகச் சூடி ஏத்தவேண்டாவா? அவ்வாறு செய்யாதவர் நெஞ்சிற் பசையற்றவர்; பழிக்கே ஆளாவர். நமது தலைவனாய் நம்மை நாடி வந்த அரங்கனை ஐந்திணை ஒழுக்கம் பூண்டு காதல் கொண்ட தொண்டர்

கள், அவனையே நினைந்து ஓரிடத்திருத்தல் கூடும். இவர்களது அன்பின் பெருக்கம் வெள்ளமாய்க் கங்குகரை யின்றிப் புரள்வதால் இவர்களை எங்கும் ஈர்த்துச் செல்கின்றது. இவர்கள் உலகினர் இறைவனை உணராதிருத்தல் கண்டு உள்ளம் நோகின்றனர். உலகெங்கும் ஒப்பற்றவனை உணர்ந்து காண்கின்ற உயர்ந்த ஒழுக்கமுடையோர் சில பழியாளரிடம் இறைவன் காற்ருய்ப் பறத்தலைக் கண்டு நெஞ்சு கலங்கி நிற்கின்ருர்கள். இம்மாக்களும் உய்ந்தால்தான் உறுதிப்பாடு உண்டு என உழைக்க முன்வருகின்றனர். மூலை முடுக்கெல்லாம் திரிந்து இத்தகைய உயிர்களை உயர்நிலைக்கு ஏற்ற ஒருப்படுகின்றனர். எங்கும் திரிகின்றனர். ஓதுவதிலும் ஒழுகிக் காட்டுவதன்ரே உயர்ந்தது? அவனை அடையாதவர்கள் அறஞ் செய்யாதவரே யாவர் பாவிகள். அவர்களுக்கு அவனை அடையும் அற வழியாகிய அன்புவழியைக் காட்டுகின்றனர். தீமையே இலா அறவழி அன்புவழி ஒன்றே அன்ரே? அதனை உலகில் தம் வாழ்க்கையில் வாழ்ந்து வழி காட்டி அதன் பெருமையையும் இன்பத்தையும் எளிமையையும் பழியாளர் மனத்தில் பசுமரத் தாணிபோலப் பதியவைக்கின்றனர்; உள்ளூர உணரச் செய்கின்றனர்; அவ்வின்பத்தைத் துய்க்கச் செய்கின்றனர். உயிர்களுக்கு உதவி செய்வதே இவ்வடியார்கள் இறைவனுக் கியற்றும் பெருந்தொண்டு. காற்ருய்ப் பறந்த கடவுள், பழியாளரே அறவாளரானபோது அவர்களது உள்ளத்தே இன்ப வெள்ளமாய்ப் பாய்ந்து கன்னற் கட்டியாய்த் திரண்டு திகழ்கின்ருன். இவ்வாறு இறைவனுக்கு எவ்வெவர் உள்ளத்தும் இனிய கோயிலமைத்து வழிபடுவதே அவர்கள் வழிபாடு. நடமாடுங் கோயிலானவர்கள், எல்லோரையும் நடமாடும் கோயிலாகத் திருத்தியமைக்கின்றனர். தமக்கென வாழாப் பிறர்க் குரியாள ராகிய இத்தகுதியாளரால் அன்ரே இறைவனும் விளங்குகின்ருன்? இவர்களல்லரோ இறைவனைக் கண்டு எமக்குக் காட்டுகின்றவர்கள்! ஆதலால், இறைவனை விட்டு இவர்களுக்கே என்மனம் காதல் செய்கின்றது. இன்னும் பிறவியுளதெனினும் இவர்களுக்கு அடிமை செய்வதற் கேற்றதாகலின் அப்பிறவியும் இனியதாய் வேண்டற்பாலதாம். இவர்கள் இன்புற எவரும் இன்புறுவர்; எல்லாருள்ளும் உள்ள இறைவனும் இன்புறுவான். எனவே, இவர்கள் இன்புறுந் தொண்டினையே செய்துவாழ என்மனம் முந்துகின்றது. என் நெஞ்சிற்கும் இவ்வெண்ணமும் இவ்வாழ்வும் வந்தனவே!

காரி னம்புரை மேனி நற்கதிர்
முத்த வெண்ணகைச் செய்வாய்

ஆர மார்வன் அரங்கன் என்னும்
அரும்பெ ருஞ்சுடர் ஒன்றினைச்
சேரும் நெஞ்சின ராகிச் சேர்ந்து
கசிந்தி ழிந்தகண் ணீர்களால்
வார நிற்பவர் தாளி ணைக்கொரு
வார மாகுமென் நெஞ்சமே.

(கார் இனம் - முகிற் கூட்டம்; கதிர் - ஒளி; நகை-பல்; செய்ய-சிவந்த; ஆரம் - பணிமாலை; சேரும் நெஞ்சினராகி - சேரவேண்டும் என்னும் எண்ணமுடையவராய்; சேர்ந்து - அவனையடைந்து.)

அறிவே ஒளி, அழகே அருள்

முகிற்கூட்டங்களின் அழகினை யெல்லாம் பிழிந்தெடுத்தாற் போலும் பேரழகுடையவன், பேருளாளன். இரவெனக் கரியவனும் நின்றானே? அவனது திருமேனியினின்றும் ஓர் ஒளி பெருகி வழிகின்றது; அறிவு ஒளி பெருக்கெடுக்கின்றது. கதிரவனைக் கார்முகில் மறைத்ததேபோலும் திருமேனியின் ஒளியோடு திகழ்கின்றான். கதிரவன் ஒளிபோலக் கண்ணைக் குருடாக்கும் தீ ஒளி யன்று இவ்வொளி; நூற்றுவர்க் கொல்லியோடு நூக்கியெறி பொறியும் கண்டுபிடித்து நூழிலாட்டில் திளைக்கும் நோயறிவு மன்று, பேயறிவு மன்று. இவனுடைய ஒளியோ கதிரவனினும் மிக்க ஒளியுடையதாயினும், கண்குளிரக் கண்டு களிக்கக்கூடிய தாகலின் நல்லதோர் பேரெழில்! எல்லோர்க்கும் இனியதாகப் பயன்படும் அறிவே இவனறிவு; எல்லோர்க்கும் சோறுபோடும் அறிவு, கூறைதரும் அறிவு; மேலாம் இன்பத்தை யூட்டும் அன்பாம் அறிவு. கருமணிபோலக் கதிர்விடும் கட்டழகன். அருளொடு பொலியும் அறிவன்.

கருமணிக்குள்ளே வெண்மணியும் உள்ளது. கருமையின் அருகில் வெண்மை மிக வெளுத்துத் தோன்றும்; வெண்மையின் அருகே கருமை மிகவும் கறுத்துத் தோன்றும். முரண்பட்டு நின்றன இவ்வகையில் ஒன்றிற்கொன்றுதவுவதும் முடிவான முதல்வனிடத்திலே முரண்பாடு முற்றும் அழிந் தொழிகின்றமையால் அன்றோ. இவ்வுண்மையைப் புலவர் அறிவர்; அன்பர் அறிவர்; ஆதலின், அவர்கள் பகைவரிடத்தும் பண்ணவனைக் காண்பர். நிற்க, கருமணியின் ஒளியிடையே வெள்ளிய பற்களின் நிலவொளியும் காணலாம். அவ்வெண் மணிகள் பதித்த இடமோ செந்துகிரேபோலச் சிவந்து விளங்கும்.

அதுவே அவன் திருவாய் மலர்! புன்னகை புரிந்தருளும் பொன் அரங்கனது பொற்பிலே இவ்வேரெழிலனைத்தும் இனிதே விளங்குகின் றன. வெண்மையருகே செம்மையும், செம்மையருகே வெண்மையும் நிறம் மிகப்பெற்று நிலவுகின்றன. மலைபோன்ற மார்பினிடத்தே அருவிபோல அரவின் மணிக்கோவை ஒன்று எழுந்து விளங்கி அவ னது செல்வப் பெருக்கெனச் சிறந்து திகழ்கின்றது.

அறத்திற்கு அடிப்படையாய் இயற்கையான ஏரெழிலாய் விளங் கும் இறைவன் தன் அறிவோடிணைந்த அன்பு நிலையும், அரவின் மணிக்கோவையில் தோன்றும் பொருணிலையும், செய்ய வாயின் சீர் விளங்கும் திருநகையில் தோன்றும் திருவருட் பேரின்ப நிலையும் கண்ட அன்பர்கள் அறம் பொருள் இன்பம் என்ற முப்பொருளும் முடிந்து ஒன்றுன இடமே வீடென அறிவர் அல்லரோ? அவனே அரங் கன். துன்பமாகிய இவ்வுலகில் புழு முதல் புத்தேளிர்வரை உள் ளோர் அனைவரும் அடைய முயல்வதும், அடையாது வருந்துவதால் அருமையானதும் இன்பமே யன்றே? அரங்கன் அரும் பொருளாம் இன்பப் பொருள் (ஆனந்தம்). அவனே எல்லாமாகிப் பரந்து பெருகிநின்ற பெரும்பொருளாம் உண்மைப் பொருள் (சத்). அவனே அறிவடிவான சுடர்ப்பொருள். எனவே, அவனே உண்மையறிவின்ப மானவன் (சச்சிதானந்தம்). அத்தகைய உண்மையறிவின்பமான பொருள் ஒன்றன்றிப் பல இல்லை; பல இருப்பின் இப்பொருள் எல்லா வற்றையும் தன்னுளடக்கிநிற்றல் இல்லையாம். அவற்றோடு முரண் பட்டு நிற்க வேண்டிவருமாதலின் இன்ப மில்லையாம். அனைத்தை யும் அறியும் அறிவும் இல்லையாம். இவனே எல்லாமாய் நின்ற போது வேறொரு பொருளேது? அவனை அறிவது எங்ஙனம்? நெஞ்சு ருகிச் சுடர்விடும் அன்பு வடிவான அறிவு விளக்கத்தால்தான் அறிய லாம். அன்றென்றல் என்ன? அவனை அடையவேண்டி விரும்புதல் இவனை விட்டுப் பிரிந்திருக்க இயலாமை, அந்த நிலையில் இவனேடி உள்ளத்தே வந்து புகுகின்றான். நெஞ்சுருகி மகிழ்வாரது மனமலர் மிசை ஏகினன் இவனே யல்லனே? இவனைச் சேரவேண்டும் என்ற விருப்பத்தோடு இவனை நெஞ்சிலிருத்தி நினைந்து நினைந்து, நினை வால் இவனை அடைந்து தம் மனத்தாமரையில் இம் மாலவனை வீற் றிருக்கச் செய்தபோது அவர்கள் உடல் கசிந்து, உள்ளம் கசிந்து ஒப்பற்ற இன்ப உருவாவர். இன்பமானது உடலிற் கசிந்து உட லில் விளங்கும். கண்ணிற் கசிந்து கண்ணீராய்ப் பெருகி வழிகின் றது. அன்பிற்கு முண்டோ அடைக்குந் தாழ், ஆர்வலர் புன்கணீர் பூசல் தரும். இவ்வாறு தீதில் நன்னெறியில் நிலைநின்ற பெரியோர்

களது தாளிணையையே என் நெஞ்சம் போற்றுகின்றது. இன்புரு வாகி அன்பாம் கண்ணீர் பெருக்கும் அடியவரது திருவடிக்கே ஒப் பற்ற அன்புடைய தாகின்றது என் நெஞ்சு. ஆண்டவனைக் கண்டு அன்படைதல் அடியவர் இயற்கை; அடியாரைக் கண்டு அன்படை தல் அடியேன் இயற்கை.

மாலை யுற்ற கடல்கி டந்தவன்
வண்டு கிண்டு நறுந்துழாய்
மாலை யுற்ற வரைப்பெ ருந்திரு
மார்வ னைமலர்க் கண்ணனை
மாலை யுற்றெழுந் தாடிப் பாடித்
திரிந்து அரங்கன்எம் மானுக்கே
மாலை யுற்றிடும் தொண்டர் வாழ்வுக்கு
மாலை யுற்றதென் நெஞ்சமே.

(1. மாலையுற்ற-களிப்பினால் கலக்கமுற்ற; கடல்-அலை எறி கிற கடல்; 2. (துழாய் மாலை) உற்ற-பொருந்திய; வரை-மலை போன்ற; 3. மாலைஉற்று-மையல்கொண்டு; 4. மாலையுற்றிடு-பித்தேறும்; 5. மாலைஉற்றது-விரும்பியது).

பாற்கடலில் பள்ளி கொள்கின்றான் இன்பமலையான இறைவன். இவனுடைய வடிவம் தன்மேற் பட்டவளவில் உள்நிலைமாறிக் களிப் பேறிக் கொந்தளிப்பை அடைகின்றது அப்பெருங்கடல். இருக்கும் இடத்திற்கும் இன்பம் தந்து இன்பமாய் இருக்கின்றான். அவனே அவ்வின்பத்தையும் பெறுகின்றான். அவ் வலையாட்டமே தொட்டி லாட்டமாகத் தூங்குகின்றான். மலைபோன்ற அளக்கலாகா அளவும் பெருமையும், துளக்கலாகாத் தோற்றமும் உடையதாய்ப் பெருத்த மார்புடையான்; மார்பெனும் குன்றில் குன்றிட்ட விளக்காய்த் திரு மகள் இன்பக் கூத்தாடி நிற்கின்றாள். மலையின் முடியைச் சூழ்ந்து மர நிழலில் மறைந்தோடும் அருவிபோலப் பச்சைத்துழாய்ப் படலை மார்பில் விளங்குகின்றது; நறு நாற்றத்தை நாற்பாலும் வீசி, நலம் புரி கொள்கையோடு நகை செய்கின்றது. வாய்க்கினிய தேனை உண்ண வண்டுகள் வந்து செவிக்கினிய பண்களைப் பாடி அத்துழா யைக் கிண்டுகின்றன. என்றோ அணிந்த துழாய் மாலை இன்றும் இவ்வாறு பொலிவது இவனுடைய சேர்த்தியா லன்றோ? கண்ணுக் கினிய பசுமையும், வாய்க் கினிய தேனும், காதுக் கினிய

வண்டின் பாடலும், வண்டினை யழைக்கும் மெய்க்கினிய மென்மை-யும், தண்மையும், முகர்தற்கினிய நறுமனமும், வாடா இளமையும் பெற்று இறைவனொடு சேர்ந்தின்புறுவதால் அன்றோ இறைவனும் இதனால் இன்பமடைகின்றான், திருமகளும் இவனோடு சேர்ந்து குன்றிட்ட விளக்காகின்றாள். மற்றைய இடத்தோ அறத்தோடும் அன்போடும் வாராப் பொருள் எனப் பழிக்கின்றனர். திருமகளுக்கு இன்பந்தந்து அவளோடு கூடி இவனும் இன்புறுகின்றான். அன்பு வாழ்க்கையில் இருதலையும் அன்றோ இன்பமும் அன்பும் ஒத்திருக்-கும்? அறிவிலாப் பொருள்களும், கடல்போல, இவனுடன் அன்பு வாழ்க்கையில் இணைந்து இன்புறுகின்றன; ஓரறிவுயி ராகிய துழாயும் அங்ஙனமே. எல்லா மறிந்த கடவுளாகிய திருமகளும் அங்ஙனமே. இவ்வாறு தன்னைச் சேர்ந்தாருக்கும் தான் நின்ற இடத்திற்கும் இன்பந் தந்து இன்பம் பெறுவானது இன்பமெல்லாம் குடிகொண்-டிருப்பது இவனுடைய செந்தாமரை போன்று அருளொடு மலர்ந்து அறிவோடு ஒளிரும் கண்ணே யாகும். அன்பர்கள், இவ்வழகிய கண்ணையும், அருட்பெருந் தாய் அன்புடன் ஆடு மார்பினையும், இவனுடைய திருமணத்தோடு இங்கு வந்த திருத்துழாயினையும், இன்ப அறிவாய்ப் பாற்கடலில் பள்ளிகொண்ட நிலையினையும், அறிவிலாப் பொருளிடத்து அணைந்து நின்று இன்பூட்டி இன்ப-மடையும் இன்ப நிலையினையும் என்றும் அடியார்கள் எண்ணுவர்; எண்ணியபோது மையல் கொள்வர்; இன்பமடைவர்; இன்பப் பெருக்கால் இருந்த இடத்தில் இருக்கப்பெறுமல் எழுந்து ஆடுவர்; பாடுவர்; எங்கும் திரிந்து இவ்வின்ப வாழ்வை வாழ்ந்து காட்டிப் பண்ணவனை எண்ணாத பழியுடையாரையும் அன்பு வழியினிற் செலுத்துவர்; நம்மை நோக்கி அருள் செய்யத் திருவரங்கத்தே குடிபுகுந்து, எளிமை காட்டி நம்மை எழுதிக்கொண்ட இத்தலை-வனுக்குப் பித்தேறித் திரிவர். அத்தகைய தொண்டரது மாறாப் பெருவாழ்வினையே என்மனமும் விருப்புகின்றது. இறைவனோடு ஒன்றுதலை விரும்பாது இறைவனை வழிபட்டு எல்லா உயிர்களுக்கும் இனியன செய்தொழுகும் இத்தொண்டர் போல வாழ்தலையே என் நெஞ்சம் விரும்புகின்றது.

மொய்த்துக் கண்பனி சோர மெய்கள்
சிலிர்ப்ப ஏங்கி இளைத்துநின்று
எய்த்துக் கும்பிடு நட்ட மிட்டெழுந்
தாடிப் பாடி இறைஞ்சிஎன்

அத்தன் அச்சன் அரங்க னுக்குஅடி
யார்க ளாகி யவருக்கே
பித்த ராமவர் பித்த ரல்லர்கள்
மற்றையார் முற்றும் பித்தரே.

(எய்த்து-தளர்ந்து; கும்பிடு நட்டம் இட்டு - தலைகீழாகக் கூத்தாடி).

இறைவனையே எண்ணி இன்புறும் அடியார்கள் தமது இன்பம் பெருக்கெடுத் தோடுவதால், உயிர்க்கொரு தனிவழி யாகிய கண்ணின் புரைபுரை தோறும் அவ்வின்ப வெள்ளம் கசிந்து வழிந்து இன்பக் கண்ணீர்த் துளிகள் கண்ணிறைய மொய்த்துக்கொண்டு என்றும் முந்துறுகின்றன. மனம் வெதும்பி அழுந்தோறும் கண்ணீரும் வெதும்பி வெந்நீராக வருகின்றது. உள்ளம் குளிர்ந்த போது இன்பத் தால் வரும் கண்ணீர் பனிநீர்போலத் தண்ணென்று பாயும். உடலைத் தும் மயிர்க் கூச்செறிய நிற்கின்றனர். இறைவனையே எண்ணிய இன்ப மேலீட்டால் அவர்கள் மனம் ஏங்குகின்றது. உடல் இளைக்கின் றது. தனி நிற்கின்றனர் அடியவர்கள். அந்நின்ற நிலையும் தளர்ந்து மெய்ம்மறந்து கும்பிட்டுக் கூத்தாடுகின்றனர். தலைகீழாகக் கூத்தாடிச் சிறிது எழுந்து நிற்கின்றனர். இன்பம் மேலும் பெருகுதலின் இன்பத் தால் ஆடுகின்றனர்; இவனது புகழைப் பாடுகின்றனர். இவன் பெருமை எண்ணி இறைஞ்சி வணங்குகின்றனர். இவ்வாறு-என் அப்பன்-என் தலைவன்-எம்மை நோக்கி வந்த அரங்கன்-இவனுக்கு அடியார்க ளாகிய தொண்டருக்குப் பித்தேறியவர் பித்தர் அல்லர் (''அடியார்களாகியவருக்கே'' என்ற இடத்தில் ''அடியார்களாகி அவனுக்கே'' என்ற திருத்தம் காணப்படுகின்றது. இத்திரு மொழியில் இறைவனுக்குப் பித்தேறுவதைக் கூறுது, அடியார்களாகியவருக்குப் பித்தேறினவரையே கூறுகின்றமையால் முதல்கூறியதையே கொண்டு இங்கு எழுதுகின்றோம். இறைவனிடம் பித்தேறுவதினும் இவர் களிடம் பித்தேறுவதையே ஆழ்வார் இங்குப் பேசுகின்றார்.) இந்தப் பித்தே பேரறிவும் பேரின்பமும் ஆதலின் இத்தகைய பித்தேறுதவர் களே உண்மையில் பித்தர்கள்.

இவ்வளவும் படித்தமையாலேயே குருபரம்பரை கூறும் கதை நம்பத்தகுந்த தாகின்றது. இத்திருமொழியை அடிப்படையாக வைத் துத்தான் இக்கதையை எழுதினார்களோ என்று ஐயமும் எழுகின்றது. இவ்வளவும் கூறிய பின்னரும் இதனை நம்பாதவர்கள், ஆழ்வார்

தாமே தம் வாயால் ''அடியார்க் கடியேன்'' எனக் கூறிக்கொள்வதைக் கேட்டுத் தெளிவாராக.

அல்லி மாமலர் மங்கை நாதன்
அரங்கன் மெய்யடி யார்கள்தம்
எல்லை யிலடி மைத்தி றத்தினில்
என்றும் மேவு மனத்தனும்
கொல்லி காவலன் கூடல் நாயகன்
கோழிக் கோன்குல சேகரன்
சொல்லின் இன்தமிழ் மாலை வல்லவர்
தொண்டர் தொண்டர்க ளாவரே.

ஆழ்வார் தமது திருமொழியைக் கூறுகின்றவர்களுக்கு என்ன பயன் கூறுகின்றார்? எல்லாப் பயன்களினும் சிறந்த பயனையே இப் பாட்டில் கூறுவது இயல்பாதலின் இங்கேதான் அவர் நோக்கத்தினை ஆராய்தல் வேண்டும். என்ன பயனை எடுத்துரைக்கின்றார்? சொற்களிலே இனிமையுடைய இத்தமிழ் பாடல்களின் கோவைகளைப் பொருளுணர்ந்து ஓதவல்லவர்கள் தொண்டர் தொண்டர்கள் ஆவரே எனக் கூறுகின்றார். பாட்டின் பயனை உணர்ந்தவர் உறுதி கூறத் தடை என்ன? பாட்டினைப் படித்த நாமும் அம்முடிவினிற்கே வந்துள்ளோம். இப்பாடல்கள் யார் பாடியன? ஏழை பாடியனவோ? சோற்றுக்கில்லாமல் அடியாரோடு கூடி வயிறு வளர்க்க வந்தவன் பாடிய பாடல்களோ? அல்ல அல்ல. எல்லோரும் தமக்கு அடிமையாய் இருக்கும் அரசரல்லரோ அடியாருக்கு அடியாராக அவாவுகின்றார்? கொல்லிமலையுள்ள சேரநாட்டுக்கும் தலைவர்; கூடல் என்ற மதுரையைத் தலைமையாகக் கொண்ட பாண்டி நாட்டுக்கும் தலைவர்; கோழி என்ற உறையூரைத் தலைமையாகக் கொண்ட சோழ நாட்டுக்குந் தலைவர். எனவே, தமிழ் நாட்டிலேயே தனித்தலைமை பூண்ட அரசர் பெருமானார். அரசநிலையின் உயர்வினை அடைந்த ஒருவரே அடியவர்க் கடிமையாக விரும்பினால் அடியவர் பெருமையை என்ன என்பது! எதனை நாடி நிற்கின்றார் குலசேகரர்? நெஞ்சார நினைந்து நிற்பது அடியவருக்கு அடிமை செய்வதுதான். எப்போதேனும் ஒருபோது அடிமை செய்தால் இவர் மனம் இன்புறுமோ? இன்புறாது. என்றும் அவ்வடிமைத் திறத்தில் மேவுமனத்தர், போலியடியாரைப் புறக்கணித்து மெய்யடியாரையே வேண்டிநிற்பர். அம் மெய்யடியாரிலும் அல்லிமாமலர் மங்கையாகிய அருட்பெருந்தாயின் தோளினைத் தோய்ந்த அறிவாளனையே தொழும் அடியாருக்கே

அடியார் ஆவர். அருளொடு புணர்ந்தானை எண்ணினல்தான் உலகத்தவர்பாலும் அருள் பூண்டு ஒழுகுதல் கூடும். மெய்யடியாரிடத்து ஆழ்வார் கொண்ட அன்பு எத்தகையது? அடியார்களோடு சேய்மையாகிய தொடர்பிருந்தாலும் அத்தொடர்புடையாரது திருவடியில் நெஞ்சாரப் பணிந்தடிமை செய்வார். எல்லையி லடிமைத்திறம் என்கின்ருர் ஆழ்வார். ''அடியார் அடியார்தம் அடியார் அடியார்தமக்கு அடியார் அடியார்தம் அடியார் அடியோங்களே'' என்றபடி பாடி அடிமைத் திறத்திலழுந்திய பற்றுடையவர்.



5

## பேயாழ்வார்

திருமாலை வழிபட்டு உயர்நிலையெய்திய அடியார்களில் பேயாழ்வாரும் ஒருவர். அப்பெரியார், ஆண்டவன்பால் அழுத்தமான அன்புடையவராகித் திருமாலிடத்தே பெருவெறி கொண்டலைந்தது கண்டு தெருவாழ் சிறுவரும் பெரும் பேயெனப் பின்னே ஓடி நகையாடினர். அஃதே அவருக்கோர் அருமைத் திருப்பெய ராயது. இறைவனடியார்க்கு இகழ்ச்சியும் புகழ்ச்சியே யன்றே. அங்ஙனமே சிவபெருமானை வழிபட்டாரிலும் காரைக்காலம்மையாரும் பேயெனத் திரிந்து பெருமாளிடத்தே பெற்ற தாயெனப் பேரன்பு பூண்டொழுகிக் காரைக்காற் பேய் என்று கண்டவர் சிரிக்க வாழ்ந்தனர். உலகினரோ பொருள்களின் உண்மை விலையறியாத சின்னஞ்சிறு குழவிகள். காக்கைப் பொன்னையும் கைப்பொரு ளெல்லாம் கொடுத்து வாங்கும் பேதையரே யாவர். காற்றின் நிலையறியாது கண்ணிழந்த மாந்தரைத் தேற்றித் தெளிவித்தல் தெய்வப்புலவர்க்கும் அரிதாகும். குழவிகள் எங்ஙனம் மினுக்கும் பகட்டுமாய் உள்ளவற்றை விரும்பி யலைகின்றனவோ, அங்ஙனமேதான் உலகினரும் பயன் தராப்பொருள்களையே நாடி அழிவர். உண்மை விலையினை அறிந்தவரே மெய்யுணர்ந்தோர் ஆவர்.

> எப்பொருள் எத்தன்மைத் தாயினும் அப்பொருள்
> மெய்ப்பொருள் காண்பது அறிவு

மெய்யுணர்ந்தோர் உடல்வலி கண்டு உள்ளம் சிதையார்; செல்வப் பொலிவு கண்டு திகைத்து நில்லார்; அரசன் படை கண்டு அஞ்சி நடுங்கார்; மாதர்க்கு மயங்கி மயல் வலை சிக்கார்; உடையே உடலம், உணவே உயிர் என நினைந்து உண்மையுடலையும் உயிரையும் மறவார். நிலையற்றவற்றை நிலையென்றுணரும் புல்லறிவாண்மை அவர்களிடம் இல்லை. அன்பே அவர்கள் வழிபடும் கடவுள். காக்கைப் பொன்னிற்கும் கடவுட் பொன்னிற்கும் வேற்றுமையறிவர்.

நாமார்க்கும் குடியல்லோம் நமனை யஞ்சோம்
நரகத்தில் இடர்ப்படோம் நடலை யில்லோம்
ஏமாப்போம் பிணியறியோம் பணிவோ மல்லோம்
இன்பமே எந்நாளும் துன்ப மில்லை

என்று பாடுவர். அவர்களுடைய அருள்வளர் கண்ணிற்கு உலகத்தினர் உழைப்பெல்லாம் இளங்குழவியின் பொருளிலாத தொழில் போன்றே புலனாகின்றது. உலகத்தைப் பேயுலகம் எனப் பேசிப் பிரிந்து நிற்பர். கண்ணன் கூறுகிறபடி ''உலகினர் விழித்திருக்கும் நிலையில் மெய்யுணர்ந்தவன் உறங்குகின்றான்; அவர்கள் உறங்கு நிலையில் இவன் விழித்திருக்கின்றான்''. உலகின் விழிப்புநிலை உலகியலாகும், உலகின் உறக்க நிலை மெய்யுணர்வேயாகும். இது கண்ட மாக்கள் இதன் உட்பொருள் அறியாது பெரியோரைப் பேயர் எனப் பேசிக்கொள்வர். ஆனால், உண்மையுணர்ந்தவர்கள், 'பித்தன்' 'பேயன்' என்பவற்றிற்கு 'மெய்யுணர்ந்தோன்' என்றே பொருள் கொள்வர். இதுபற்றியன்றோ இறைவனும் தன்னைப் ''பித்தா'' என்றே பாடத் தொடங்குமாறு ஆளுடைய நம்பிக்கு அருள்செய்தார்.

உலகத்தார் உண்டென்பது இல்லென்பான் வையத்து
அலகையா வைக்கப் படும்

என்ற குறளில் உலகம் என்பது உயர்ந்தோரையே குறிக்கின்றது. அதனை அறியாத கீழ்மாக்கள் தம் கொள்கைக்கும் நடைக்கும் மாறுபட்டவரை, வாய் கூசாது பேயெனப் பேசி இகழ்வர். உண்மையை நோக்குமிடத்து உலகத்தார் எனச் சிறப்பிக்கப்பெற்ற உயர்ந்தோராகிய அன்பர்கள் உண்டென உணர்ந்த ஆண்டவனது அன்பினை இல்லையென்றும், இவ்வுலக இன்பமே எந்நாளும் உள்ளதென்றும், நாயெனத் தேடியலைந்து தெருவோடும் மாக்களே பேயிற் பெரிய பேய்களாம்.

குலசேகரரும் தம்மைத் தாமே பேயர் எனக் கூறிக் கொள்கின்றனர். அவரும் ஒரு பேயாழ்வாரே. பெரியோர்கள், தம்மை உலகம் பேயெனப் பேசி இகழ்ந்த போதுதான் பெருமைபெற்றவர் எனக் கருதுகின்றனர்.

தப்பா மேதாம் பிடித்தது சலியாத்து
தழலது கண்ட மெழுகது போலத்

தொழுதுளம் உருகி யழுதுடல் கம்பித்து
ஆடியு மலறியும் பாடியும் பரவியும்
கொடியேறும் பேதையும் கொண்டது விடாதெனும்
படியே யாகிநல் லிடையறு வன்பிற்
பசுமரத் தாணி யறைந்தாற் போலக்
கசிவது பெருகிக் கடலென மறுகி
அகங்குழைந் தனுகுல மாய்மெய் விதிர்த்துச்
சகம்பே யென்று தம்மைச் சிரிப்ப
நாணது வொழிந்து நாடவர் பழித்துரை
பூணது வாகக் கோணுத லின்றிச்
சதுரிழந் தறிமால் கொண்டு சாருங்
கதியது பரமா வதிசய மாகக்
கற்று மனமெனக் கதறியும் பதறியும்
மற்றோர் தெய்வங் கனவிலு நினையாது
அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர னாகி யருளிய பெருமையைச்
சிறுமையென் றிகழாதே திருவடி யிணையைப்
பிறிவினை யறியா நிழலது போல
முன்பின் னாகி முனியா தத்திசை
என்புநைந் துருகி நெக்குநெக் கேங்கி
அன்பெனு மாறு கரையது புரள
நன்புல னொன்றி நாதவென் றரற்றி
உரைதடு மாறி யுரோமஞ் சிலிர்ப்பக்
கரமலர் மொட்டித் திருதய மலரக்
கண்களி கூர நுண்டுளி யரும்பச்
சாயா அன்பினை நாடொறுந் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி !

(திருவாசகம்)

என்று உலகினர், பேய்நிலை என உளறும் ஒப்பற்ற உயர்நிலையை உணர்ந்தவாறு ஓதுவது காண்க? அன்பு நிலையை இவ்வாறே குலசேகரரும் முகுந்தமாலையில் ஓதுவதைக் காணலாம். காரைக்காலம்மையாரும் தம்மைப் பேயெனப் பாடிக்கொள்வதில் பெருவிருப்புடையராகி, "காடுமலிந்த கனல்வாய் எயிற்றுக் காரைக்காற் பேய்" என்றும் "செடிதலைக் காரைக்காற்பேய்" என்றும் "பேயாய நற்கணத்தி லொன்றாய நாம்" என்றும் பாடுவது காண்க. குலசேகரரும் "பேயனாய் ஒழிந்தேன்" எனப் பாடுகின்றார். உலகத் துறுதிப்பொருளைக்

கடைப்பிடியாத மாக்கள் நின்ற நிலையினும் தமது நிலை மாறுபட்ட தென நன்கு எடுத்தோதுகின்றார். "பேயரே எனக்கு யாவரும் ஓர் பேயனே எவர்க்கும்" என முடிக்கின்றார்.

> தலைப்பட்டார் தீரத் துறந்தார் மயங்கி
> வலைப்பட்டார் மற்றை யவர்

என்ற உண்மையைத் தம்மளவில் விளக்குகின்றார். ஆனால், இவர் கூறும் துறவோ இயற்கைத் துறவேயாகும். உலகனைத்தும் ஒக்காளம் என்று உளறுவார் இவர் அல்லர். உலகத்தே உயர்நிலையினையும் கண்டறிந்தவர், இழிநிலையையும் எண்ணியுணர்ந்தவர். பின்னதன் இழிவினையே பெரியோர் பேசுவர். ஒன்றினையும் பற்றாது உலகினை இகழ்பவர் உள்ளத்தியல்பினை உணராதவரே யாவர். உள்ளமானது சிறிதேனும் தேங்கிநிற்ப தன்றி அருவி போல ஒரு கல்லில் நின்றின்னொரு கல்லில் தாவித் தாவி ஓடிக் கொண்டேயிருக்கும். பற்றிலாது யிடையீடின்றி விழுவது அருமையிலும் அருமை. உடையினை ஒழியென்றால் உணவினைப் பற்றும்; உணவினை உடலை மறவென்றால் உயிரை நினைக்கும்; உள்ளம் ஊன்றிநிற்கும் கைத்தடியைப் பிடுங்கி எறியவேண்டுமானால், அதற்கு மற்றொரு ஊன்றுகோல் உதவவேண்டும். உலகை மறவென்றால் உள்ளம் அதனை மறத்தல் எந்நாளும் இல்லை. உடனேயே 'உயர்ந்தோனை நினை' என ஓர் ஊன்றுகோல் அளித்தல் வேண்டும். உள்ளத்திற்கு மற்றுமோர் இயல்பும் உண்டு. அஃது உறங்கி ஓய்ந்த தன்மையது. எதையேனும் 'செய்யாதே' எனக் கேட்டதும் "ஏன்" என விழித்தெழுகின்றது. 'செய்துதான் பார்ப்போமே' எனச் சிரிக்கின்றது. "அறிவுமரத்தின் அருங்கனியை அருந்தாதே" என்று ஆண்டவன் வரையறுத்து அருள் செய்யாமற் போயிருந்தால் அந்தப் பழத்தை ஆதாம் என்ற முதலான மகனும் அருந்தி யிரான்; ஏவாள் என்ற முதற் பெண் மகளும் பேயின் அடிமையாகியிராள்; இறப்பே உலகில் இல்லையாய் இருக்கும். நம் சிறுவர்களின் இயல்பையே நோக்கினால் இவ்வுண்மை புலனாம். முகிலினம் குடி புகுந்த முடியோடிலங்கும் குன்றுநின்றும் குதித்தோடி வருகின்ற அருவியால் தாக்குண்டு அடியோடும் பிளந்த இருங் குவட்டிரண்டி னிடையே தூங்கும் தேனடை மூங்கிலால் கிழியவே, அத்தேன் வெள்ளமானது மலைமீது தவழ்கின்ற மழையினது குளிர்ச்சியோடே, உயரநின் றிழியவிட்டமைந்த நூலேணி ஒன்றுபோல் மெல்லியதாய் இறங்கித் தெளிந்து ஒழுகுகின்றது. கன்றீன்ற ஆவினம் கானகத்திலே தமது கன்றினை நினைந்து கனைப்பச் சொரிகின்ற பால்படிந்து பெருந்திரளா

யினபோது அவ்வாறு ஒழுகுமத் தெவிட்டாத செந்தேனிலே சுவைபடத் தோய்ந்து தோய்ந்து உள்ளூர இனிதாகிப் பனிக்கட்டி போலக் குளிர்ச்சியுடையதாகின்றது. பாவாணரது பண்ணிறைந்த பாக்களே போன்றதாய அப்பனிக்கும் பழந்தீஞ்சுவைதான் அன்பிற் கரைந்து உயிரின்பமாய்க் கனிந்த பழமாகின்றது. எனவே, இத்தேனும் பாலும் பாயுமிடத்தே தாளுண்ட நீரைத் தலையாலே தந்துதவும் மாமரம் வளர்ந்து நின்று நனி பழுக்கின்றது. இப்பழம், தடவுதற்கும் உடல் கூசும் தகையுடைய நல்லாரது மெல்லிய தாடைபோல வழவழ என மனம் வழுக்கி வீழுமாறு பொலியும் ஒரு பொன் முட்டையைத் தீம் பொழிலகத்தே ஒரு தேமா மரம் தனது பாசடைநடுவே இட்டது போலத் திகழ்ந்து, சிறிது மறைந்தும் பெரிது வெளித் தோன்றியும் கண்டவர் மனத்தோடு ஊசலாடுகின்றது. கிளையில் குந்திப்பாடும் கிளியின் சிறுகச் சிவந்த மூக்கொன்றையும் தான் கொள்ளைகொண்டதன் பயனாய்ப் பல ஆவின் நெய் மணமும் பல பூவின் தேன் மணமும் தென்றலில் குழைந்து ஒன்ருகிக் குளிர்மணமாக மாறி வருவதொன்றைத் தன் மணமெனத் தேர்ந்தெடுத்து அந்நறு நாற்றத்தையே மக்கள் மனங்கவர் வலையாக வீசுகின்றது. கண்கவர் வனப்பினல் கண்டவர் மனத்தில் காதலை எழுப்பிக் கல்லைப்பிசைந்து கனிவிக்கின்றது. நாற்புறத்தின் நின்ருரும் நாவினீரூற நாக்கினைத் தட்டிக்கொண்டே எதிரில் ஓடி வருமாறு இன்பத்தை எங்கும் பொழிகின்றது. பாசடை நடுவே காற்றில் அப்பழம் அசைவதும் கனிந்ததொரு பாட்டாகி, அதைக் கண்டாரையும் அதனை முன் உண்டாரையும், பண்ணுலகில் புகுவிக்கின்றது. உண்டாலு மழியாது பெருகி வளர்கின்ற உண்மையமுதாகி ஒளிர்கின்றது. இத்தகைய தேமாங்கனி ஒன்றினை அன்போடும் தேடிக்கொண்டு வந்து தந்தையார் தம் செல்வப் பிள்ளைகளுக்கு அளிக்கின்ருர். ஆனல். அதனை ஒருகடி கடித்துறிஞ்சி அப்புறத்தே வீசி எறிகின்றனர். அவ்வினிப்பெல்லாம் அவர்கள் உணரவில்லை. பின்னர்க் காவல் நிறைத்ததும் மந்திகள் அறியா மரங்கள் பயின்றதுமான அடர்ந் திருண்ட பொழிலுள்ளே தந்தையாரும் காவலாளரும் இல்லாத அற்றம் பார்த்து மெல்ல நுழைகின்றனர். வேலியில் ஒருவனையும், மரத்தின்கீழ் ஒருவனையும், வரும் வழியில் ஒருவனையும் காவல் வைத்து முள்ளம் புதரினிடையே வளர்ந்த முள் சுற்றியுள்ள ஒரு மரத்தின்மேல் உடல் கிழியக் கால் கிழியக் கை கிழிய அவர் உள்ளந்தான் கிழியாதேறுகின்றனர். காயுங் கையுமாகக் கீழ் வீழ்ந்து அடிபட்டுச் சளுக்கேறி நிற்கின்றபோது காவலாளி வருவதைக் கண்டு காயை வாயிற் கௌவிக்கொண்டே காற்றென ஓடி,

ஊடே ஓடும் ஓடையில் குளிக்கின்றனர். ஊறுகாய்க்கும் உதவாத அக் காய் வெந்நீர்போல வெம்பி வெகுட்டுதலால் பல்லெல்லாம் புளிக்கின்றது கண்டு புன் சிரிப்புக் கொள்கின்றனர். முகத்தைக் கோணவைத்து முழுதின்பம் பெறுகின்றனர். காயெல்லாம் கொட்டையே, மேலெல்லாம் பால் வீச்சமே. இதனையுண்டு இன்ப உலகிற் புகுகின்றனர். இஃது எதனாலாயது, வேண்டாம் என்ற மாங்காய் மிக இனிக்கின்றது. 'உண்' என உதவிய ஒப்பிலா மாங்கனி ஓக்காளமாகின்றது. எதிர்மறையை எதிர்ப்பதே எல்லார் உள்ளத்திற்கு மியல்பாகும். செய்யாதே என்பதினும் செய் என்பதே சிறந்த கட்டளையாம். அங்ஙனமே பலரோடும் கூடாதே என்பதினும் பண்ணவனோடும் கூடுக என்பது பயனுடையதாகின்றது. கடவுளையே எண்ணி நிற்பவர் உலகை எண்ணிக் கருத்தழிவதில்லை. நிறைந்ததொரு கொள்கலம்வேறொன்றற்கும் இடங்கொடுப்பதில்லை. கடவுளே நிறைந்த மன முடையார் தம் மனத்தே வேறெதனைப் புகுத்துதவுதல் கூடும்? "ஆழ அமுக்கினும் ஆழ்கடல் நீர் நாழி முகவாது நானாழி." அங்ஙனமே ஆழ்வாரும் "அரங்கனுக்குப் பித்த னாயினேன். அந்நிலையில் உலகம் இருக்க அங்கு இடமில்லை. ஆதலின், உலகத்தோடு கூடுவது ஒழிந்தேன்" என்ற இயற்கைத் துறவு முறையை மிக அழகாக எடுத்துப் பேசுகின்றார்.

> பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்
> பற்றுக பற்று விடற்கு

என்றன்றோ வள்ளுவரும் கூறுகின்றார்?

குருபரம்பரையானது குலசேகரர் உலகைத் துறந்து சென்ற ஒரு கதையினையும் கூறுகின்ற தன்றோ? அதனை இப்பகுதி வற்புறுத்துகின்றது. "பேராளன் பேரோதும் பெரியோரை ஒருகாலும் பிரிகிலேன்" என்ற கொள்கையை வைத்து பேலே பாடியவர் பித்தரென்றே பிறர் கூற "எண்ணாத மானிடத்தை எண்ணாத போதெல்லாம் இனியவாறே" என்று பாடுவது இயல்பாகின்றது,

> மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக் கொள்ளுமிவ்
> வையந் தன்னொடுங் கூடுவ தில்லையான்
> ஐயனே அரங்கா வென்றழைக்கின்றேன்
> மையல் கொண்டொழிந் தேனென்றன் மாலுக்கே.

(மெய்யில் - உடலில் அல்லது மெய்யில்லாத - பொய்யாகிய நிலையில்லாத ; மையல் - பித்து).

மெய்யில் வாழ்க்கையை மெய்யெனக்கொள்ளும்

உலக வாழ்க்கையானது உடலொடு விளங்கும் வாழ்க்கையே யாகும். இது நிலையில்லாத வாழ்க்கையாதலின் பொய்யான வாழ்க்கையு மாகும். வாழாது மடிந்தொழிதல் மக்கள் இயல்பன்று, அறநெறியும் அன்று. உடலை வளர்த்தோர் உயிரை வளர்த்தோரே; உயிரை வளர்த்தோர் உயிரிடை ஒளியை வளர்த்தோரே.

அற்றால் அளவறிந் துண்க அஃதுடம்பு
பெற்றான் நெடிதுய்க்கு மாறு

என வள்ளுவரும் நெடிதுய்த்தல் வேண்டுமென வற்புறுத்துகின்றனர். நெடியோனை அடைய நெடிதுய்த்தல் நேரிதே யாகும். ஆனால், நெடியோனையும் உயிரையும் மறந்து, உடலோடு வாழ்வதே வாழ்வு என நம்பினாய் உயிர்கள் கடைப்பிடிக்கவேண்டிய உறுதிப் பொருள்களை மறந்து உண்பதும் உடுப்பதும் உறங்குவதுமாய் உலக வாழ்க்கையை நடத்துபவன் உயிரற்றவனே யாவான். ஒப்பற்றவனை ஓவும் நாளே உணர்வழியும் நாள்; உயிர் போகும் நாள்; உயர்பாடு ஏற்காத நாள். அவன் அடியேத்துவா ரிகழ்ந்திட்டநாள்; மறந்திட்ட நாள்; கெட்ட நாள். ஆதலின் மற்றுப் பற்றெனக் கின்றி நின்திருவடியினை மனத்தே நினைக்கப்பெற்ற நாள்தான் உயிரோடு பிறந்த நாளாகும். எனவே, உடலோடு கூடிய வாழ்க்கை ஒப்பற்றவனை உவந்தடைவதற்கு ஒரு வழியே யாகும். அது நாம் போகும் ஊர் அன்று. முடிந்த முடிபன்று. அதுவே மெய்ப்பொருள் அன்று. வழிக்கும் ஊர்க்கும் வேற்றுமையறியாது மயங்குதல் ஆகாது. என்றும் நிலையாய் இருப்போம் என எண்ணி இன்பம் நுகர்ந் தொழுகுவதால் நமக்கும் பயனில்லை; பிறர்க்கும் பயனில்லை. உண்மையும் இன்பமும் அறிவும் அன்றி உலகத்துள்ளன வேறெவை? அவற்றையடைந்து உய்யாதபோது மனவுணர்வுடைய மக்கள், மாக்களாய் மாவாய்-பறவையாய்ப் பாம்பாய்-புழுவாய்-மரமாய்ப் புல்லாய்-கல்லாய்க் கழிகின்றனர். உண்மையறிவின்ப வடிவினரே கடவுள். அவரே உலகிற்கும் உயிர்க்கும் ஒரு முடிவாவர். உலகமும் உயிரும் அவரது உடலே யாகும். எவற்றிற்கும் உள்ளே ஒளியாகி ஒளிர்பவரே ஒப்பற்ற தனிமுதலாவர். அவரே மெய்ப்பொருள். அவரை நினைந்ததே மெய்யான வாழ்க்கை; அதனையே மெய்யெனக் கொள்ளுதல் வேண்டும். இறந்தாரைக் கொட்டுமுழக்கோடு எங்கும் பெருவழக்காய் உலகினர் எல்லாம் அறியத் தூக்கிச்செல்வதை

எந்நாளும் பார்த்திருந்தும், அதனை எண்ணாது இறுமாந்து நின்று எவர்க்கும் இனியன செய்யாது மாக்களாய் இழிந்த இழுதையா-ரோடு, மெய்யாம் இறைவனைக் கண்டு மெய் வாழ்வுவாழ்வார் கூடிக் குலாவுவது எங்ஙனம் இயலும்? தெவிட்டாத தெள்ளமுதம் உண்டார் எட்டிக் காயை ஏறெடுத்துப் பார்ப்பரோ?

வையந்தன்னொடும்

இத்தகைய இழுதையாரின் இழிவுகள் இருத்தற்கிடமாயது இவ்வுலகம். வைத்தற்கிட மாதலின் வையமெனப் பெயர்பெற்ற உல-கம், மாலவனை ஒளித்துவைத்து மறம் வைத்தற்கே இடமான வைய-மாகும்; மறநிலையமாகும்.

கூடுவதில்லை யான்

கூடுதல் இல்லை என்றால் உலகினரை விட்டோடிப் போதலோ? அவர்களை வழிப்படுத்த வேண்டாவோ? நெருப்புப் பட்ட விடத்தில் அதனை விளக்கத் தோன்றாத போது தன்னைக் கொண்டு தான் தப்புவாரைப் போலத் தன்னைக் கொண்டு தப்புவர் ஒரு சிலர். எல்லோரையும் உய்யச் செய்வார் ஒருசிலர். சாக்கிய நாயனார் போலத் தம்வரையில் உய்ந்துபோவாரே முன்னவர்; திருநாவுக் கரையர் போல எல்லோரையும் அன்பு நெறியால் அறிவு நெறிக்கண் செலுத்துவோரே பின்னவர். பின்னவரே, ஆழ்வார்கள் என்றும் ஆளுடையார் என்றும் புகழப்படும் பெரியோர். எனவே, குலசேகரர் முன்னணியில் சேராது பின்னணியில் சேர்ந்தா ராதலின் தம்வரையில் தப்பி ஓடுகின்றவர் அல்லர். கூடுவதாவது அவர்கள் ஒழுக்கத்தை மேற்கொண்டு அவர்களோடு கூடிக் குலாவுவதேயாகும். பிறரை வழிப்படுத்துவதை அடியாரின் சிறப்பியல்பாகக் கூறிய இவரும், 'பாதமாமலர் சூடும் பத்தியிலாத பாவிகள் உய்ந்திடத் தீதில் நன் னெறிகாட்டி' எங்குந் திரிகின்றவரே யாவர். ஆனால், தாமரை இலை மேலே முத்தென நின்று, கதிரவன் ஒளியில் பேரின்பப் பேரொளி யின் பெருந்துளிபோல விளங்கும் தண்ணீர்த்துளி இலையில் ஒட்டாது தயங்குதல்போல உலகினரிடையே உலகின் முன்னேற்றத்தைக்கருதிப் பெரியோர் வாழ்ந்தாலும், உலகினர் செய்கையில் சேராமலும் அவ ரோடு கைகோத்துக் கலந்து களிக்காதும் கூடிக் குலாவிக் குதிக்காதும் தனி நிற்பர். கூடாமை ஒன்றே கூறினால் உள்ளம் நம்மோடு கூடாது. வேறொன்றினைக் கூறுவதனையும் கூறுதல் வேண்டும். அதனைப் பின்னி ரண்டடிகளால் ஓதுகின்றார் ஆழ்வார்.

ஐயனே

மெய்யென விளங்கும் பொருளினையே மெய்யெனக் கொண்டு மெய் வாழ்வு வாழ்கின்றேன். உலகத்திற் பிறந்தார் உலகத்திற்கு ஒரு முதல்வனான ஐயனை (தலைவனை) அறிய வேண்டாவா? அறிய அறிவு கொளுத்திய ஐயனை (ஆரியனை – குருவை) வாழ்த்தி வணங்கவேண்டாவா? பொருளை எல்லாம் அழித்தும் கொடிய பிள்ளையாய்க் கொலைப்பழி பூண்டோனும் நல்லவனாய் நல்வழியிற் புகுந்து வீடுசேர்ந்து தன்வழி நில்லானோ, மிகுந்த பொருளைக் கொள்ளானோ என்று எதிர்பார்த்து அவன் வந்தால் தன்னுடன் எந்நாளும் இருந்த நல்லபிள்ளையையும் மறந்து, வந்தவனுக்கே பெருவிருந்து செய்து களிக்கும் தந்தையினும் சிறந்த தந்தையாய்த் தண்ணளியோடு விளங்கி நம்வரவு பார்த்திருக்கும் ஐயனை (தந்தை) அடைய வேண்டாவா? நாம் அடைதற்கு ஏற்ற வழியை இராமனாய் நடந்து காட்டியும், கண்ணனாய் எடுத்துக் காட்டியும், நம்முன் சென்ற ஐயனை (தம்முன்) நண்ணி அன்புவடிவாக வேண்டாவா? எளிதில் எல்லோரும் கண்டு இன்பமுறுமாறு எம்மை நோக்கி இவ்வுலகிலே இத்தமிழ் நாட்டில் திருவரங்கத்தே புகுந்த திருவருளை நினைக்க வேண்டாவா?

அரங்கா

பயிரிடையே போய்க் குடில்கட்டி வாழும் குடியானவனைப்போலன்றோ இறைவன் எம்மிடை வந்து திருக்கோயில் கொண்டெழுந்தருளுகின்றான்? குழவி உறங்கும் தொட்டிலினடியிற் படுத்திருந்து பால் நினைந்தூட்டும் தாயினும் சாலப் பரிந்து, ஊனினை உருக்கி உள்ளொளி பெருக்கி, உவப்பிலா இன்பமாய தேனினைச் சொரிந்து புறம் புறந் திரிகின்ற அரங்கன் அருளை நினைக்க வேண்டாவா?

என்றழைக்கின்றேன்

நினைத்தபோது என்னையும் மறந்து, அப்பண்புகள் மிக்க அப்பெரியானை அந்தப் பெயர்களே கொண்டு, இன்பத்திற்கு போக்கு வீடாக என்றும் கூப்பிடா நிற்கின்றேன், ஐயன் நிலையையும் அரங்கன் நிலையையும் நினைத்தால் நாம் ஆம்படி அஃதேயன்றோ?

என்றன் மாலுக்கே

எனக்கு இங்ஙனம் எல்லாம் அருள் செய்து பின்னின்று காத்திருத்தலைப் பொருதவனாய் என் பித்தே பிடித்து மாலானான் என்றன்

மால். அவன் எனக்குப் பித்தேறினபடியைக் கண்டு நானும் அவனுக்குப் பித்தனானேன்.

மையல் கொண்டொழிந்தேன்

பித்தனாய் ஒன்றாகாது பிரிந்துநிற்க முடியுமோ? உடையே ஊனே பெண்ணே பிறவே எனக் கனவிலும் கரைந்துருகும் உலகினரைப்போல, அன்பே அருளே அறிவே மெய்யே எனக் கனவிலும் அவன் நினைவாகி வாய்வெருவா நிற்கின்றேன். இந்நிலை நின்றேன் உலகினரோடு கூடிக் குலாவுவ தெங்ஙனம்? அமுதினை உண்டார் அங்கணநீர் உண்பாரோ? அவன் வடிவும் அவன் செயலும் அவன் பண்பும் அவன் அறிவும் குடிபுகுந்து நிரம்பிய மனத்திலே உலகினர் ஒழுக்கமும் இழுக்கும், உடையும் நடையும் புகுதற்கு எவ்வளவு இடமும் இல்லையே! அவனே தலைவன், அவனே தந்தை, அவனே நண்பன், அவனே அன்பன். பின்னெது வேண்டிப் பிறிதோரிடம் புகுவேன்?

நூலி னேரிடையார் திறத்தே நிற்கும்
ஞாலந் தன்னொடுங் கூடுவ தில்லையான்
ஆலியா அழையா அரங்கா என்று
மாலெழுந் தொழிந்தே னென்றன்மா லுக்கே.

(நூலின் நேர்-நூலைப்போன்ற; இடையார்-இடையினை உடைய பெண்கள்; திறந்தே - விஷயத்தை அல்லது உறுப்பிலே; ஆலியா - கூத்தாடி).

அரங்கன்

"ஆடவரும் பெண்ணாய் அனையவிருப்பும் அழகிற்கோர் அழகான ஆணழகனாய அரங்கன், பெருமைக்கே பெருமைதரும் பெரியோனாய்ப் பெரிய கோவிலில் வாழ்பவன், அன்பும் அன்புகொள்ளும் அன்பன், அன்பரை நாடி அரங்கத்தே வாழ்பவன்.

என்றன் மாலுக்கே

பெருமையும் பேரன்பும் பேரழகுமே ஒருவடிவானவன் எனக்கு எளிவந்து என்மீது மால்கொண்டான். சிற்றின்பச் சிறுதுளிகளாகிய மங்கையர் வலிய அணைத்தபோது தம்மை மறந்து தனிநிலை யடைகின்றனர் மக்கள். பேரின்பப் பெருங்கடலே மேல் விழுந்து தழுவினால் யான் என்னாவேன்? தழுவும் இடமோ காதற்குறிப்புக் கரை

கடந்து பொங்கும் களியரங்கம். ஆற்றிடைக் குறையின் நாற்புறமும் பொன்னியாறு சூழ்ந்து வணங்கி ஓடித் திரைக்கையால் குளிரிளந் தென்றலை மனத்தோடு மணந்து எங்கும் பரவி இன்பமுற வேண்டி இருள் குடிபுகுந்த பெரும் பொழில்களில் விரும்பிப் புகுந்து நீர்த் துளிகளை இன்பத் துளிகளாக விழ்த்தி அழகு செய் தின்பமூட்டி உயிரை வளர்க்கின்றது. பலநிறப் பறவைகள் பண் பல பாடுவதும், பேடைகள் களிக்க ஆடுவதும், தேன்துளிக்கும், சிறுமலரும் வண்டு பாடும் பெருமலரும் உள்ளூறிய மணத்தோடே வெளிப்பகட்டாம் நிறம் பலவுங்கொண்டு விளக்கென எரிவதுவும், கண்டோர் நெஞ்சத்தே களிப்பூட்டிக் குடிகொள்கின்றன. களவிய லாகிய அத்தகைய இடத்தே அத்தகையவனே, அவ்வாறு மேல் விழுந்தபோது அடியனேன், எவ்வாருவேன்?

ஆலியா அழையா

தலைகீழாகக் கூத்தாடுகின்றேன். அவனோடு கூடிநிற்பதையும் மறந்து அவனழகையும் அன்பையும் எண்ணிக் கன்றுள்ளிக் கனைக்கும் கற்றுவே போல, அரங்கா அரங்கா என அடைவுகெடக் கூப்பிட்டு வாய்வெருவா நின்றேன். இங்ஙனம் பித்தனாகின்றேன்.

மாலெழுந்தொழிந்தேன்

அவனழகு இருந்தபடி என்னே! என்னே! ஒவ்வோர் அணுவிலும் அமைந்துகிடக்கும் அழகினை ஓரணு அளவிலேனும் முற்றமுடியக் கண்டு துய்த்தலாவதோ? அரங்கத்தே கல்லளவிற் குடிபுகுந்த அழகினையேனும் கண்டுணர்தல் ஆவதோ?

மாலினேரிடையார் திறத்தே

இவ்வாறு பித்தேறி நிற்கின்ற நான் உலகத்தவரோடு கூடுவதில்லை. கூடுவதெங்ஙனம் கூடும்? அனைத்துமாய அழகிற் கழகனைக் கண்ட கண், வேறொருவிடத்தும் அவன் அழகினையன்றி வேறொன்று கண்டு மக்களது அழகென மயங்குவதுண்டோ? மங்கையர் அழகினைக் காணினும் அன்னவன் அழகெனக் கொண்டு தொழுது வணங்கி மணவாளன் திறத்தே நிற்பேன். அழகினை உள்நின்ற ஆண்டவனின் ஒளிவுவடிவெனக் கொண்டு தொழாது மங்கையர் உடலின் வளமென எண்ணி அவர்களது மயக்கவலையில்

சிக்குவார் உலகினர். நூலினும் நுண்ணிதாய இடையுடைய பெண்களது அழகின் நுட்பம் அவர் அறியார். அவர்கள் பெண்ணெனும் கடவுளின் பேரன்புநிலையை அறியாது காதற் கழிவிட மென எண்ணி அவர்கள் இடையையே எண்ணி நிற்பர். பெண்களிடத்தே இறைவன் திறமாகிய அறிவு விளக்காம் அழகும் உண்டு; இது கொண்டு நம்மை அவர்கள் இறைவனெடு சேர்த்தல் கூடும். மக்கள் திறமாகிய ஊனும் என்பும் உண்டு; இவைகொண்டு நமது ஊனையுருக்கிச் சுடுகாட்டென்பாக்கவும் கூடும். இறைவன் திறத்து ஏரெழிலை வழிபடாது பெண்கள் திறத்து உறுப்பினை ஒவ்வொன்ருக வழிபடுகின்றனரே? அந்தோ அவர்கள் வழிபடுவது என்புந் தோலுமேயன்ரூே? சிறிதூண்றி நோக்கினுல் அழகு சுரக்கும் அறிவூற்ரும் இறைவன் திறத்தினை அங்குங் கண்டு இன்பவெள்ளத் தழுந்தலாமே. இறைவனழகு எல்லையிலா திருத்தல் கண்டு அவனழகில் ஈடுபடுவது போல ஊனுருவாகிய இப்பெண்கள் உறுப்பே அழகிற்கு இருப்பிடம் எனவெண்ணி, அவ்வுடனலன் முடிவிலாததெனக் கொண்டு ஈடுபடுகின்றனரே! காவலனும் கணவனுமாய்க் கலந்துநின்ற இறைவனைக் கண்டு காண்பனவு முரைப்பனவும் மற்றென்றின்றிக் கண்ணனையே கண்டுரைத்த கடிய காதலால், அழகுமுழுதும் ஒருங்கே காணப் பெருது அவன் உறுப்பில் ஒவ்வொன்றிலேயே மனம் பதிந்து நின்று ''அரங்கத்தம்மான் திருக்கமல பாதங்கள் வந்தென் கண்ணிலுள்ளவொக்கின்றதே'' என்றும் ''அரங்கத்தம்மான் அரைச்சிவந்த வாடையின் மேற்சென்றதாம் என் சிந்தனையே'' என்றும், ''அந்தி போல் நிறத்தாடையும் அதன்மேல் அயனைப் படைத்ததோரெழில் உந்திமேல தன்ரூே அடியேனுள்ளத் தின்னுயிரே'' என்றும், ''திருவயிற் றுதரபந்தன மென்னுள்ளத்துள் நின்றுலா கின்றதே'' என்றும், ''திருவார மார்பதன்ரூே அடியேனை ஆட்கொண்டதே'' என்றும், ''செய்யவாய் ஐயோ என்னைச் சிந்தை நுகர்வதுவே'' என்றும், ''கரியவாகிப் புடைபரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரியவாய கண்கள் என்னைப் பேதமை செய்தனவே'' என்றும், ''கோலமா மணியாரமும் முத்துத் தாமமும் முடிவில்லதோரெழில் நீலமேனி ஐயோ நிறைகொண்ட தென் னெஞ்சினையே'' என்றும், என்னமுதனைக் கண்ட கண்கள் மற்றென்றினைக் காணுவே'' என்றும் பாடுகின்றனர், அடியார்கள். ''கூத்தனிற் கூத்து வல்லாருளரோ என்றன் கோல்வளைக்கே'' என்று இறைவனே காதலனுகவும் உயிரே காதலியாகவும் கலந்த நிலையில்,

குனித்த புருவமுங் கொவ்வைச்
செவ்வாயிற் குமிண்சிரிப்பும்
பனித்த சடையும் பவளம்போல்
மேனியிற் பால்வெண்ணீறும்
இனித்த முடைய வெடுத்தபொற்
பாதமுங் காணப்பெற்ருல்
மனித்தப் பிறவியும் வேண்டுவ
தேயிந்த மாநிலத்தே

என்று வேண்டி, இறைவனை அடைந்து கண்டு ''நட்டம் என்று வந்தாயெனும் எம்பெருமான் திருக்குறிப்பே'' என்ற திருக்குறிப்பின் வழியோடி ''அரனுடல் கண்டால் பிளையுடைக் கண்களாற் பின்னைப் பேய்த் தொண்டர் காண்பதென்னே'' என அவன் அழகினை அடிமுதல் காணத் தொடங்கி, ஓரழகு கண்டால் வேறழகு காண முடியாதபடியால் ஒவ்வோருறுப்பாய்க் கண்டின்புறத் தொடங்கித் ''திருவடியைக் கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே'' என்றும், ''உடுத்ததுகில் கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே'' என்றும், ''உந்தியின்மே லசைத்த கச்சினழகு கண்டாற் பின்னைக் கண்கொண்டு காண்பதன்னே'' என்றும், ''கைந்நின்ற ஆடல் கண்டாற் பின் கண்கொண்டு காண்பதென்னே'' என்றும், ''வானத் தவருய்ய வன்னஞ்சையுண்ட கண்டத்திலங்கும் ஏனத்தெயிறு கண்டாற் பின்னைக் கண்கொண்டு காண்பதென்னே'' என்றும், ''சிரித்த முகங்கண்ட கண் கொண்டு மற்றினிக் காண்பதென்னே'' என்றும், ''நெற்றியிற் கண் கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்ப தென்னே'' என்றும், ''முத்தும் வயிரமும் மாணிக்கந்தன்னுள் விளங்கிய தூமத்த மலர்கண்ட கண்கொண்டு மற்றினிக் காண்பதென்னே'' என்றும் பாடி, அடிமுதல் கண்டபின்னர் முடிந்த முடிபாகிய திண்கழலையே எண்ணி ''நெருங்கி மிதித்த விரல்கண்ட கண்கொண்டுகாண்பதென்னே'' எனத் திருவடியழகில் ஈடுபட்டு இன்புறலாகின்றனர், இறைவன் அடியார். இறைவனுடைய எல்லையில்லாத எழிலைக் கண்டபோதுதான் இவ்வாறு அழகு முழுதும் காணது ஒவ்வோர் நிலையைக் கண்டின்புறுவது கூடுவ தாகின்றது. ''தோள்கண்டார் தோளே கண்டார், தொடுகழற் கமலமன்ன தாள்கண்டார் தாளே கண்டார், தடக்கை கண்டாரு மஃதே, வாள்கொண்ட கண்ணுர் யாரே வடிவினை முடியக்கண்டார், ஊழ் கொண்ட சமயத்தன்ன னுருவு கண்டாரை ஒத்தார்'' என்பது இறைவனுக்கே ஏற்றதாகும். இந்நிலையைப் மபண்களிடத்தும் கண்டதுபோலப் பேயாய் அலைந்து ஒரு உறுப்பினை நுகரப்புகுந்தால்

மற்றோர் உறுப்பில் போகமாட்டாதவராய் நிற்கின்றனர் இவ்வுலகினர். கண்ணழகு காணவும் வாழ்நாள் போதாதென்பர்; ஏரெழில் பகர பல நூறு வாயுடைய பாம்பரசனாலும் முடியாதென்பர்; மங்கையின் ஒரு சிறு பல்லழகை முற்றுங்காணல் பல நூறு கண்ணுடைய வானவர் தலைவனுக்கும் இயலாதென்று புகழ்வர். இவ்வாறு பெண்கள் திறத்தேயே இவர்கள் நிற்கின்றனரே!

நிற்கும்

பெண்களோடு கூடினாலும் பெருநிலையினை அடைய முயலுதல் வேண்டும். மாதரை வாழ்க்கைத் துணையாகக்கொண்டு அன்பினைப் பெருக்கி உயர்நிலையடைந்து உய்ந்துபோதல் வேண்டும். இவ்வாறு பெண்ணிலையினின்றும் உயரச் சென்றியங்காது பெண்களிடத்தேயே உயிரற்ற பிணம்போலச் செயலற்று நின்றுவிடுகின்றனரே இவ்வுலகினர். தண்ணீர் பல இடங்களில் புகுந்து பாய்ந்தாலும் மேலும் மேலும் ஓடிக்கொண்டேயிருக்குமானால் மாசெலாம் நீங்கித் தூயதாகின்றது. ஓரிடத்தேயே தேங்கி நிற்குமானால் புழுத்துப் போகின்றது. மாதரொடு நிற்றல் ஒரு நிலை; அஃதொரு வழியேயாகும். அதற்கு மேலும் செல்லவன்றோ அஃதொரு வழியாகின்றது? போகும் ஊரை மறந்து வழியிலேயே நின்றவனை என் என்பது! மேற்சென்று உழையாதபோது உடலம் புழுப்பதன்றி உயிரும் புழுத்துப்போகின்றது.

அம் மாதரேனும் இறைவனைப்போல் நம்மேல் விழுந்து காதலிக்கின்றனரோ? அன்பெலாம் ஒருதலையே உள்ளது. நூலினேரிடையாரோடு கலத்தலாகிய களவின்பம் கடவுள் வடிவினதாகலாம். ஆனால் உலகினர்தாம் அவர்கள் திறத்தே நிற்கின்றனர். அவர்கள் இவர்கள் திறத்தே நிற்றலுண்டேயன்றிக் கூடுதலும் கலத்தலும் இல்லை. இல்லாதபோது இன்பம் ஏது?

ஞாலம் தன்னொடும்

இத்தகையது இந்த ஞாலம். ஞாலம் என்றால் ஞான்று வெளியிடையே தொங்குவது என்பது பொருள். விலங்குநிலைக்கும் இறைவன் நிலைக்கும் இடையே தொங்குவதே மக்கள் வாழும் உலகம். உடலை நோக்கின் கீழே விழுவோம். அழகோடு அறிவை நோக்கின் மேலேறுவோம். இறைவனோடு சேருவோம். இடைநின்ற தொங்கலாட்டப் பிழைப்பில் எத்துணை நாள் இருப்பது?

கூடுவதில்லை யான்

இவ்வாழ்வு வாழ்வாரோடு சேரின், நீரின் மூழ்கியவர்கள் பிடிக்க வருவாரையும் நீரில் அமுத்திவிடுதல்போல நம்மையும் விலங்குகளில் அமுத்திவிடுவர். ஆதலின் அவர்களோடு யான் கூடிக் குலாவுவது இல்லை.

மார ஞர்வரி வெஞ்சிலைக் காட்செய்யும்
பாரி னரொடுங் கூடுவ தில்லையான்
ஆர மார்ப னரங்க னநந்தன் நல்
நார ணன்நர காந்தகன் பித்தனே

(மாரன் - மன்மதன்; வரி - வரிந்து கட்டிய, அல்லது அழகிய; வெஞ்சிலை - தப்பாது எய்யும் கொடிய வில், அல்லது விரும்பும் வில்; ஆரம்-முத்துமாலை ; அநந்தன் - முடிவில்லாதவன் ; நாரகாந்தகன் - நரகாசுரனுக்கு யமனைய்க் கொன்றவன்).

ஆரமார்பன்

அழகே தன்னியல்பானவன்; அதற்கு மேலும் அழகுக்கழகு செய்வதென முத்துக்கோவை யணிந்த மார்பனைய் இயற்கையே கொண்டு ஒப்பனை செய்து விளங்குபவன்.

அரங்கன்

எம்மை நோக்கி இன்னருள் செய்ய இவ்வுலகிற் குடிபுகுந்த திருவரங்கத்தே அவனழகும், இயற்கையின் ஒப்பனையும் ஒருங்கே ஒளிர்வது காண்க.

அநந்தன்

இவ்வாறு எமக்கு எளியவனாயினும் எல்லோர்க்கும் அரியவனே. காலத்தாலும் இடத்தாலும் பொருளாலும் முடிவிலாது எங்குமாய் எல்லாமாய் விரிந்தான். இவ்வின்ப வெள்ளத்தில் எங்குப் புகினும் அவனோடு கூடியாடலாம். எல்லாமாய் விரிந்த அருமையும் இவ்வாறு எமக்கு எளிமையாகின்றது. தொட்ட தொட்ட இடந்தோறும் தொல்லையின்பமாய்த் தொடர்ந்து நிற்பான். (நன்று பெரிதாகும்).

நல்

இவ்வாறு எங்கும் பரந்து நின்று எல்லாமாய பெரியவன் (நன்மை - மங்கலம் - இன்பம்) நமக்கு இன்பந் தரும் நல்லோனே.

நாரணன்

"நாராயணன் என்றது நாரங்களுக்கு அயனம் என்றபடி. நாரங்க ளாவன - நித்ய வஸ்துக்களி னுடைய திரள். அவையாவன ஜ்ஞா நா நந்தாமலத்வாதிகளும், ஜ்ஞாநசக் தியாதிகளும், வாத்ஸல்ய ஸௌசீல்யாதிகளும், திருமேனியும், காந்தி ஸௌகுமார்யாதிகளும், திவ்யபூஷணங்களும், திவ்வாயுதங்களும், பெரிய பிராட்டியார் தொடக்கமான நாச்சிமார்களும், நித்யஸூரிகளும், சத்ர சாம்ராதிகளும், திருவாசல் காக்கும் முதலிகளும், கணுதிபரும், முக்தரும் பரமாகாசமும். ப்ரக்ருதியும், பத்தாத் மாக்களும், காலமும், தமாதி விகாரங்களும், அண்டங்களும் அண்டத்துக்குட்பட்ட தேவாதி பதார்த்தங்களும். அயனம் என்றது இவற்றுக்கு ஆச்ரயம் என்றபடி. அங்ஙனன்றிக்கே இவை தன்னை யாச்ரமாக வுடையன் என்னவுமாம். இவை யிரண் டாலும் பலித்தது பரத்வ ஸௌலப்யங்கள். அந்தர்யாமித்வமும் உபாயத்வமும் உபேயத்வமுமாகவுமாம். எம்பிரா னெந்தை என்கை யாலே ஈச்வரனே எல்லாவுறவும் முறையுமென்று சொல்லும் நாம் பிறர்க்கான வன்றும் அவன் நமக்காய் இருக்கும்; இராமட மூட்டுவாரைப் போலே உள்ளே பதிகிடந்து ஸத்தையே பிடித்து நோக்கிக் கொண்டுபோகும்" (பிள்ளை லோகாசார்யர் முமுக்ஷுப்படி 1-ப்ரகரணம் 95—104) "நாரயண சப்தம் நாரங்களுக்கு அயநம் என்றும், நாரங்களை அயனமாக வுடையன் என்றும் ஸர்வாதாரத் வாதி விசிஷ்டனை ஸ்ரீய: பதியைச் சொல்லுகிறது...... நாராயண சப்தம் நிகரில் புகழாய் இத்யாதிகளிற் சொன்ன வாத்ஸல்ய ஸ்வாமித்வ ஸௌசீல்ய ஸௌலப்யாதிகளையுடையனை ஸர்வேச்வரனைச் சொல்லு கிறது" (வேதாந்த தேசிகர் ரஹஸ்ய பதவீ).

"எப்பொருளிலும் தானிருப்பானும் எப்பொருளுக்கும் தானிருப் பிடமாய் உள்ளான். பழியும் மாசும் பூண்டு மழுங்கிய பொருள்களையும் விலகி நில்லாது இலங்குகின்றான். ஈதன்றோ அவனருள் இருந்தபடி; தன்னுடைமை விடமாட்டாமையாலே அழுக்கை விரும்புமவன்."

நரகாந்தகன்

அவனே தன் அன்பு மேலிடுதலால் நம்மேல் விழா நிற்க நடுவே பகையும் போய்க்கொடு நிற்குமன்றே? நரகாசுரனைக் கொன்றழித்து நல்லார்க்கும் நல்லியலாருக்கும் அருள் செய்தானன்றோ? உலகினைப் பன்றியாய்க் குத்தி எடுத்து வருகையில், இறைவனது திருமேனி பட்டதும் உலகமாம் அன்னை உவந்து பெற்ற பிள்ளையே இக்கொடியோன், அவனே கொடுமை செய்யத் தலைப்பட்ட போது அவ்வுலகன்னையோடும் அவனெதிர் சென்று அம்மகனைக் கொன்றழித்து அடியவர்க் கருள் செய்யும் நடுவு நிலையுடைய பெரியோன் இவன் அன்றி வேறு யார் உளர்?

பித்தனே

கண்கவர் கட்டழகன்; ஒப்பனைசெய்து உவந்தவன்; நம்மை நோக்கி நல்லருள் புரியவந்து நலந்திகழ் இடத்தில் நடுவே நம்மைத் தழுவுபவன்; தோன்றாத் துணையாகித் தொட்டதொட்ட இடந்தோறும் தொல் வடிவம் காட்டுபவன். தொலையாத பழியுடையாரையும் தூயராக்கித் துயரொழித்து அவரோட தொல்லை யின்பத்திற்சேர்ப்பான். இதுகண்டும் எவரேதினும் தாம் தகுதியற்றவர் என அஞ்சிநின்றால், அன்னோர் குற்றமே பெரிதுடையாராயினும் அவரை இழக்க மனம் பொறாமல் அவரைக் குளிர நோக்கிக் குரவையாடக் கைகொடுத்திழுப்பவன். இடையே முட்டுக்கட்டையாய் நின்றாரைத் தண்ணருளாம் தனித் தாயொடும் வந்து தகர்த்தெறிவான். இவற்றை எண்ணும் போதே எமக்குப் பித்தேறுகின்றது.

ஆட்செயும்

இறைவன் மனைவியோடு வாழ்கின்றான். நாமும் மனைவி மக்களோடு வாழ்தல் தக்கதாம். ஆனால், அவர் நெறியில் நில்லாது அறநெறி யாகிய அன்பு நெறியில் நின்று தன் மனையாளோடுமே சென்று அவள் பெற்ற மக்கள் கொடியோராயின் கொன்றே குவிக்கும் நடுநிலையுடையவன் அவன். அப்பெருந்தாயும் அவ்வறநிலையில் கட்டுண்டு கிடக்கின்றாள். நாமும் இவ்வாறு அறத்திற் கட்டுண்ட அன்புடைய மனையாளோடு நடுவுநிலையில் நின்று உலக வாழ்க்கையை அறிவுநெறி யாகிய அறநெறியில் நடத்த முடியுமாயின் அஃதொரு மனைமாட்சியே யாகும். இந்த நிலையில், அறிவு எனும் வில்லாகிய சார்ங்கம் ஏந்திய அருள்வடிவினனுக்கு நாம் அடிமையாகின்றோம்;

அம் மனைவி மக்களின் மேலுள்ள பற்றின் வடிவினதாகிய கறுப்பு வில்லேந்தி மருள் வடிவினனாகிய கறுப்பு வில்லியும் நமக்கு அடிமை யாகின்ருன். கண்டகண்ட பெண்கள்மேலே கருத்தைச் செலுத்திக் காதல்கொண்டு கற்பழிக்கப் புகுவார் கறுப்புவில்லிக் காட்செயும் கயவரேயாவர். கறுப்பு வில்லியின் கைக்கடங்கிய அறிவிலா வில்-லுக்கும் ஆட்செய்யும் அலிகளே இன்னேர். ஐந்தடக்கலாற்றிப் பெரியோராய் ஐம்புல இன்பத்தையும் அறநெறியே துய்ப்பவர்,

ஆசலம்புரி ஐம்பொறி வாளியும்
காச லம்பு முலையவர் கண்ணெனும்
பூச லம்பும் நெறியின் புறஞ்செலா

என்றபடி, ஐம்பொறியை அடக்கிநிற்பவர் ஆவார். ஈதே இயற்கைத் துறவு. இவர்களே கறுப்புவில்லியைத் தமக்காட்செய விலைக்குக் கொண்டவர் ஆவர். சிவபெருமான் கறுப்புவில்லியைக் கொன்ருன்; ஆனல் மலைமகளை மணந்தான். கறுப்புவில்லியை அடிமையாக்கிக் காதல் நிகழ்வதைக் குறிக்கின்றது இக்கதை. அவ்வாறு வாழாது, மருளின் அடிமையாகிய அவாவிற்கு அடிமையாயின் உலகம் அழியும் என்க. இவ்வாறு ஆட்செய்வதே இழித்துரைக்கத் தக்க தாகும்.

மாரனர்

அத்தகையாருக்குக் கறுப்புவில்லி இறப்பையும் தரும் மாரன கின்ருன்.

வரிவெம் சிலை

அழகிய வில் வரிந்துகட்டிய வில்லாகின்றது; விரும்பத்தக்க கரும்பு அஞ்சத்தக்கதாய்க் கொன்றேதொலைக்கும் கொடிய வில்லாகின் றது. அவாவிற்கு அடிமையாகாது அன்புவழி நின்ருருக்கோ, அவ்வில் அருவமானவன் கையில் உள்ளதாய், வண்டுகள் சூழ்ந்து பாடும் வரிப் பாட்டு மிகுந்ததாய், எல்லோராலும் விரும்பப்படுவதாய் விளையாட்டிற் கெனக் கரும்பிற் செய்ததொரு வில்லாகின்றது.

பாரினரோடும்

உலகம் பார்க்கப்படும் பொருளாதலின் பார் எனப் பெயர் பெற்றது. எனவே, இம்மாக்கள் தோற்றத்திற் கடிமையாய்

வாழ்ந்தொழிகின்றனர். உலகிற் கொரு முதல்வன் உலகெங்கும் உள்ளீடாக ஒளிர்வதனைக் கண்டுணர்வதில்லை.

கூடுவதில்லை யான்

இத்தகைய உலகத்தினரில் ஒருவரோடும் யான் கூடுவதில்லை.

உண்டி யேயுடை யேயுகந் தோடுமிம்
மண்டலத் தோடுங் கூடுவ தில்லையான்
அண்ட வாண னரங்களவன் பேய்முலை
உண்ட வாயன்ற னுன்மத்தன் காண்மினே

(உண்டி—உணவு; உடை—துணி; உகந்து—மிகுதியும் விரும்பி; மண்டலம்—உலகம்; அண்டவாணன்—மோட்சத்தில் வாழ்பவன்; பேய்—பூதகி; உன்மத்தன்—பித்தன்).

உண்டியே

உடலை உயிரோடுங்கூட்டிக் கடவுளை அடைய—வழிபாடியற்ற வழிசெய் தமைப்பது உண்டியே யாகும்.

உடையே

மானத்தைக் காத்து, மாக்களிலும் மக்களை உயர்ந்தோ ராக்குவது உடையே யாகும்; இவற்றை நாடி நிற்பது இயல்பே யாகும்.

உகந்து

ஆனல், இவற்றில் அளவுகடந்த அவாவுடையாரே அறிவிலிகள் ஆவர். உயிர்வாழ உண்ணுது, உண்ணுதற்கென்றே உயிர் வாழ்ந்து நாவின்பம் கருதி உண்பவன் மக்களில் ஒருவன் அல்லன், மாக்களில் ஒருவன் அல்லன், இயற்கைப் பரப்பில் எதுவும் அல்லன். அவ்வியல்புடையன அவையல்ல. ஆதலின் இயற்கையோடு பகைத்து நிற்கும் அறக் கொடியோனே அவன் என்க. இரண்டு விரல் அளவினதாகிய இந்தவொரு நாக்கினை, அடக்கியாள முடியாமையால் அன்றே நோய்வாய்ப்பட்டும் பேய்க்கோட்பட்டும் மாக்கள் அலைகின்றனர்! வயிற்றிற்குமோர் அளவுண்மையால் இடையீடின்றி உண்பது இயலாதாகின்றது. ஆதலின், வாய்க்குள் விரலிட்டுக் குத்தி உண்டவற்றை வெளிப்படுத்தி மறுபடியும் மாம்பழம் உண்பாரை என் என்பது? மானத்திற்குத் துணி கட்டுவதை விட்டு உடையே உயிரும் உடலும்

என்று உழல்வாரை என் என்பது! ஓர் உடை தைக்க எத்துணைத் தையல்வேலை செய்வர், எத்துணைப் பொன், எத்துணை முத்து? எத்துணைப் பெயர் அதைப் பின்னின்று சுமந்து செல்வர்! சுமக்க இயலாதபோதும் வெளிப்பகட்டிற்காகச் சுமந்துசெல்லும் இப்பிணந் தூக்கிகளின் கேடு கெட்ட அறிவை என் என்பது? தலைமயிரைப் பலவகையாகக் கோதிமுடித்து இரவெல்லாம் பல்பொறிகளிடையே அழுத்திவைத்து அப்புறமும் இப்புறமும் திரும்பாமே படுத்து இருந்து பலநாள் ஒப்பனை செய்வதனை என் என்பது? ஈதோ வாழ்வு!

ஓடும்

இவ்வாறு இடர்ப்படுவார், நற்பொருளையும் இவற்றுடனே நாடி நிற்பாரோ? இல்லை இல்லை. அஃதியலுவ தொன்றன்று. வேறொன்றும் வேண்டாது உண்டியே உடையே என்றே உழல் கின்றனர். நெருப்புப் பற்றிய போது வீட்டினின்றும் தப்பி ஓடுவார் என்ன பரபரப்போடும் ஓடுவரோ அஃதேபோலத் தாம் வேண்டும் உயரிய உடைகளில் ஒரு நூல் குறைந்தாலும், சுவை நிரம்பிய உணவில் ஓர் அரிசி குறைந்தாலும் பரபரப்பாக ஓடி உழல்கின்றனர். சிறை விரித்தாடும் மயிலும், கொண்டையோடு குலவும் மீன்குத்தியும் போன்று பலநிறம் கொண்ட பறவைகளும் தூய அறிவுபோல விளங் கும் அன்னப் பறவையும் வால்நீண்ட கருங் குருவியும் அழகிய குப்பாயம் போர்த்துலவுகின்றன. மீன்களும் பூச்சிகளும் பலநிற விளக் கெனப் பொலியும் உடைதாங்கி ஒளிர்கின்றன. பறவைகளும் விலங்குகளும் பசும்புல்லும் பழமரமும் எத்துணை யழகிய உடையும் இனிய உணவும் உண்டுடுத்து வாழ்கின்றன. இவ்வுலக மாக்கள் இன்னும் பலவூழி முயன்றாலும் அவ்வூணையும் அவ்வுடையையும் அடைதல் ஆவதோ? ஆனால் அவை ஓடியலைந்தோ அவற்றைப் பெறுகின்றன? புல்லும் மரமும் வேர்வழியாக ஓடுவதன்றி வேறெங்கும் போதல் கூடுமோ? இவையும் இறைவனது இயற்கைவழியே நின்று ஊணும் உடையும் பெற்று இன்புறுகின்றன. இவ்வுலகத்தினர் ஓடி யுழைக்கின்றனர்; ஆனால் வேண்டியவற்றைப் பெறுகின்றனரோ? அதனைச் சொல்லவும் வேண்டுமோ? உழைப்பதன்றி ஊதியத்தை உலகினர் ஒருநாளும் உணர்ந்த தில்லை.

இம்மண்டலம் தன்னொடும்

இவர்கள் வாழ்வது மண்ணுலக காதலின் (மண்தலம்) மண்-ணேயாய் அழிகின்றனர். மண்ணாகியும் அறிவொடும் கலந்த உடலை முற்றும் அறிவாக்க முயலாது பின்னும் சிறிதறிவினின்றும்

கழன்று மண்ணுகவே முந்துகின்றனர். அன்றியும் இவ்வுலகம் வட்ட வடிவினதாகும் (மண்டலம்-வளைவு). அஃதேபோல இவ்வுலகினரும் வழியில் நேரே செல்வதன்றி வளைந்து செல்கின்றனர். வேண்டிய உண்டியை உண்டு மேற்செல்லாது உண்டியில் பலவகையினைக் கண்டுபிடித்து அதற்குவேண்டிய பொருள்களை நாடி உயிர்வாழ்க்கை முழுதும் பல அடிமைகளாம் மடையர்களைத் தேடி நிற்பர். உண்பதையும் மறப்பர். ஒருசுவை குறையினும் உண்ணுது வருந்துவர். உடையை மறந்து உடையின் பலவகைப் பகட்டை நாடிச்செல்வர். வட்டவடிவான பொருள்களில் சுற்றி நேரே சென்று கொண்டிருந்தால் தொடங்கிய இடத்தே வந்து வந்து வளைந்து போதல்போல இவ்வுலகத்தினரும் தின்றதையே தின்றும் உடுத்ததையே உடுத்தும் பழைய நிலையிலேயே நின்று வெளிவர அஞ்சிப் பதுங்கிக் கிடப்பர். மேனிலை செல்ல விரும்பவும் செய்யார்.

கூடுவதில்லை யான்

இத்தகையாரோடு நான் கூடுவதில்லை. யானே 'உண்ணுஞ் சோறும், பருகுநீர் தின்னும் வெற்றிலையும் எல்லாம் கண்ணன்' என்றிருப்பேன். அவர்களைப்போல உண்பேன் உடுப்பேன், ஆனுல் அவை யெல்லாம் கண்ணனே என அறிந்து உயர்நிலை எய்தினேன்.

அண்டவாணன்

அக்கண்ணனே யன்றி இவை எல்லமாய் இருப்பவர் வேறு யார்? அவனே வீட்டுலகில் வாழ்பவன்.

அரங்கன்

ஆனுல், நம் நாட்டில் வந்து புகுந்த தண்ணருளாய அரங்கத்தழகன். அவன் செல்வச் செருக்கால் நம்மைப் புறக்கணிப்பானே?

ஆயன்

அவனெளிவந்த நிலையை ஆயனுய்க் குழவியாய் நின்ற அருணிலை காட்டவில்லையோ? அருளும் அறிவும் பெற்றுல் அவற்றைப் பேணிப் போற்றும் பேராற்றல் எமக்கில்லையே என அஞ்சுதல் வேண்டா. அன்பு வடிவான அசோதைக்கு அருள்வடிவான திருக்குழவியாய்ப் பிறந்தான். எல்லார்க்கும் அரியவனை எல்லார்க்கும் எளியவனுக்கிய அசோதை அவனைக் காத்தல் கூடுமோ? பேய்ச்சி வந்தபோது அவள் என்ன செய்தல் கூடும்? இவனே தான் காத்தல் வேண்டும்.

வன்பேய்

பேயும் குழவிமுகம் நோக்கிப் பெரிதும் மனம் இரங்கும். அவ்வாறிரங்காத இப்பேயோ கல்லினும் வலிய மனமுடைய வன் பேயாகும். பேற்றையும் தருவான்; போற்றியும் காப்பான். குழவிச் செயலிலேயே ஒரு திருவிளையாடல் புரிந்தான்.

பேய்முலை உண்ட வாயன்

பாலுண்டே பழியுடையாளை அழித் தருளினன். அவனுக்கு நஞ்சமும் அமுதமாகும். அனைத்தும் அவனுடைய அமைப்பன்றோ? ஆதலின் உண்ணவும் உடுக்கவும் அவன் தருவதே அமையும் என நிற்பேன். பழியுடையாளின் உயிரினைக் குடித்த வாய், பண்டுபோலச் செக்கச் சிவந்து தித்தித்திருந்த தன்றோ? அவன் மறச் செயலும் அன்புச் செயலே ஆகும்.

உன்மத்தன்

இவற்றை யெல்லாம் எண்ணினல் என் மனம் பித்தேறி நிற்கின்றது. என் பித்து நின்றவாறு இவ்வுலகில் அருமையில் அருமை யாதலின் நீர் காண்மினோ.

காண்மினே

பெண்கள் திறத்திலே பற்றுகைக்கு மருந்திடுகை பண்ணினரை மீட்க ஒண்ணாதது போலவே அவனுடைய பண்புகளிலே அகப்பட்டுப் பித்தனாயினேன். பித்தன் என ஏசுவீர், என் பித்தினைக் காண்மினோ.

தீதில் நன்னெறி நிற்கஅல்லாது செய்
நீதி யாரொடுங் கூடுவ தில்லையான்
ஆதி யாய னரங்கனந் தாமரைப்
பேதை மாமண வாளன்றன் பித்தனே

நன்னெறி

நல்வழியில் நடப்பார் பலர். ஒன்றுமறியா முழுமகனைப் பால் கறுப்பென்று உரை யென்றால், அஃது அவனுக்கு இயலாமையின், பொய்யுரையான். எல்லோரும் நல்லவர் எனப் புகழின் தனது தொழிலும் பல்கி வளரும் என்று எண்ணி ஊதியம் கருதி நல்வழி புகுவோரும் உள்ளனர்.

வாணிகஞ் செய்வோர்க்கு வாணிகம் பேணிப்
பிறவுந் தமபோற் செயின்

பிறர் பழிப்பரே என அஞ்சியும், அரசன் கொல்வானே என நடுங்கி

யும் கொலையையும் மறத்தினையும் மறப்பவர் பலர். ஆனால் இவர்கள் கயவரே யாவர்.

> அச்சமே கீழ்களது அசாரம் எச்சம்
> அவாவுண்டேல் உண்டாம் சிறிது.

*தீதில் நன்னெறி*

ஆனல், அறவாழி யந்தணரான பெரியோர், அறிவு வழி நின்று அறம் வளர்க்கின்றனர். செந்தண்மை பூண்டொழுகுவதால் அவர் செய்வன எல்லாம் அறமாகின்றன. 'அவனே தானே ஆகிய அந்நெறி ஏகனாகி இறைபணி' நிற்கின்றனர். ஈது நமக்கு இன்பந் தருதலின் நன்னெறியாகும். பிறரை அவாவினாலும், அச்சத்தினாலும், அறியாமையாலும் மயக்குதல் இன்மையால் பிறர்க்கொரு தீங்கும் இந்நெறி நின்றாரால் ஏற்படுவதில்லை. எனவே, இது தீதில் நன்னெறியாகும்.

*நிற்க அலாதுசெய் நீதியாரொடும்*

முழுமக்களும் கயவரும் அறவோர்போல ஒழுகி அறமேசெய்யினும் அவர்களது மனநிலை அவாவுக்கும் அச்சத்திற்கும் அடிமையாதலின் அவர் செய்யும் அறங்கள் அறமல்லாதனவேயாம். அறமென்பது புறத்தொழிலைப் பற்றியதன்று; அகத் தூய்மையைப் பொறுத்ததே யாகும். ''மனத்துக்கண் மாசிலனாதல் அனைத்தறம்'' என்றும், அறவாழியானரே அந்தணர் ஆதலின் ''அறவாழி அந்தணர்'' என்றும் அந்தணரே அறவோர் ஆதலின் ''அந்தணர் என்போர் அறவோர்'' என்றும் பாடுக.

*கூடுவதில்லை யான்*

அவாவும் அறியாமையும் அச்சமும் கருதி அறஞ்செய்யப் புகுந்த போலி யறவோரோடு கூடின் பெரும் பழியே சூழும். தீய வழியில் நிற்பார் தமது தீமையை மறவாது ஒழுகுதலின் அன்னோர், இப்போலியறவோரினும் உயர்ந்தாரே என்க.

> வலியில் நிலைமையான் வல்லுருவம் பெற்றம்
> புலியின்தோல் போர்த்துமேய்ந் தற்று.

> தவமறைந்து அல்லவை செய்தல் புதல்மறைந்து
> வேட்டுவன் புட்சிமிழ்த் தற்று.

*ஆதி*

இம்மயக்க உலகின்நின்றும் ஈடேறுவது எப்படி? எல்லாவற்றிற்கும் இறைவனாகிய முதல்வன் ஒருவன் நம்மைக் காத்து நிற்கின்றான். அவனருமை கேட்டு அஞ்சற்க.

ஆயன்

அவன், இடையரில் ஒருவனாய் வந்து பிறந்து இடைச்சியால் கட்டுண்டு மாடும் மேய்த்து, அவற்றிற்கு உரிஞ்சு கல்லாயும் நின்ற எளியோன்.

அரங்கன்

அதுவும் முன்னாளில் நடந்ததென்று இரங்கா வகை அரங்கத்தே வந்து புகுந்தான்.

அந்தாமரைப் பேதை

அருள் செய்வதில் ஐயமில்லை என்பதனைத் தண்ணருளாம் தனிப்பெருந் தாயொடும் கூடிநின்ற நிலை அறிவுறுத்துகின்றது. (அம்-நீர்) மெல்லிய நீரில் எழுந்த மெல்லியதாகிய (அம்-அழகு) அழகிய தாமரைப்பூவில் பெண் வடிவாய மெல்லிய உடலொடு மெல்லிய உள்ளமும் பெற்றவள். அவள் நமக்கு மனம் இரங்குதலைச் சொல்ல வேண்டுமோ? அவளோ பேதை. கொடியாராயினும் அவர் துன்புறுவது கண்டால் மனம்பொறுது அவர்கள் கொடுமையை மறந்து மனம் குளிர்ந்தருள் செய்யும் பெருமையே பேதமையாகும். அப்பண்பே வடிவமானவள் அருள்தாய். இவன் பண்ணின குற்றத்தை அவன் காதணுபடி மறைப்பாள். அவள் கூறுவதை அப்பெரியான் கேட்பானோ என ஐயுறல் வேண்டா?

மாமணவாளன்

அவளால் அன்றோ அவன் பெருமையடைவது (மா-பெருமை). ஆதலின் அவளது அருளுரையைக் கேளாத நாள் இல்லை. அம்மட்டோ! இறைவன் புது மாப்பிள்ளையாகிய மணவாளனாக விளங்குதலினால் புதுப் பெண்ணின் பேச்சைக் கேளாதிருத்தல் இவ்வுலகிலும் இல்லை; அவ்வுலகிலும் இல்லை.

தன்பித்தனே

இவ்வெளிமையை எண்ணுதலும் அவன் வெறிகொண்டு பித்தனாகின்றேன்.

எம்ப ரத்தரல் லாரொடுங் கூடலன்
உம்பர் வாழ்வையொன் றாகக் கருதிலன்
தம்பி ரானம ரர்க்கரங் கநகர்
எம்பி ரானுக் கெழுமையும் பித்தனே.

(எம்பரத்தரல்லர் - எம்மைப்போல ஆண்டவனிடத்தே அன்பு பூண்டொழுகாதவர்; உம்பர் - ஸ்வர்க்கம்; ஒன்ருக - ஒரு பொருளாக.)

**எம்பரத்தர் அல்லாரோடுங் கூடலன்**

பொய்ந் நின்ற ஞானமும் பொல்லா அழுக்குடம்பும் இந்நின்ற நீர்மையினியா முருமை ஒழிவில் காலமெல்லாமுடனுய் மன்னி வழுவிலா வடிமைசெய்ய வேண்டுவேன் யான். இவ்வழி யாகிய எம்வழி நில்லார் தம் வழி நில்லேன் (கூடுதல் என்பதற்கு அவர்களோடு கூடிக் குலாவி இன்பந் துய்ப்பதே பொருள் என்பதை இரண்டாம் அடி நன்கு விளக்குகின்றது).

**உம்பர் வாழ்வையும் ஒன்ருகக் கருதிலன்**

நல்லினத்தார் (ஸ்வர்க்கர் - சுவர்க்கர்) எனப் பெயர்பெற்ற மேலுலகத்தாரது இன்பமும் ஒருபொருளாகக் கருதவில்லை. நிலையிலாத இன்பத்தை நிலையாயினதென்று நினைந்து நிற்பாரோடு எங்ஙனம் கூடுவேன்? பெண்கள் இன்பமும் கள்ளின் இன்பமுமே அவர்கள் கண்ட இன்பம். பெண்களை யெல்லாம் பொது மகளிராக்கி இன்பம் துய்க்கும் அவர்கள் வாழ்வும் ஒரு வாழ்வோ?

**அமரர்க்கு**

அம்மேலுல கத்திற்கும் மேலுலகமான உயர் நிலையைக் கண்டு அப்பித்தேறியவன் ஆனேன். அறிவே கள்ளாக உண்டு அருளே பெண்ணுகக் கொண்டோன் திகழும் நாடு அப்பெண்ணுக்கும் அரும் பெருங் கடவுளாய் அழகெறிக்கும் நாடு; திருவீற்றிருக்குந் திருநாடு. அந்நிலமிசை நீடுவாழ்வாரே அழியாத நிலையடைந்தோர். இறவாதவர் (அமரர்) என இயம்புவது இன்னோரைத்தான். அவ்வயர்வறு மமரர்களே அழியாப் பேரறிவு பெற்றுப் பேரின்பத்திற் றிளைப்பார்.

**தம்பிரான்**

இன்னோரும் அடிவணங்தும் பெரியோன் தனக்கொரு முதலிலாதவனே யாவான்.

**அரங்கநகர்**

எல்லார்க்குந் தலைவனுய் நின்ற அந்நிலை அனைவர்க்கும் பயன் தாராதென அறிந்து உலகத்தே வந்து தன் ஆரழகினைக் காட்டி அடிமைகொள்ள வேண்டி அரங்கத்தே ஆற்றங்கரையில் நம்மைப் பிடிக்க வொரு கோயிற் பொறி வைத்துக் காத்திருந்தபோது, காத்திருத்தலை

யும் பொருதவனை, எளியேனை என்மேல் மையல்கொண்டு என்னை யும் அன்புவலையிற் சிக்கச்செய்து குடிமகனாகக் கொண்டு எனக்குந் தலைவ னாயினான்.

எம்பிரான்

எல்லா இன்பமுமான இறைவன் இவ்வாறு மேல் விழுந்து தழு வியபோது எனக்குப் பித்தேறிவிட்டது. இப் பித்து இப்பிறவியி லன்றி ஏழு பிறவியளவும் தொடர்ந்து வரும். என் பித்திருந்தபடி இஃதன்றோ!

எத்தி றத்திலும் யாரொடுங் கூடுமச்
சித்தந் தன்னைத் தவிர்த்தனன் செங்கண்மால்
அத்த னேஅரங் காஎன் றழைக்கின்றேன்.
பித்த னாயொழிந் தோனெம்பி ரானுக்கே.

மால்

ஆண்டவன் என்மீது மால் கொண்டெழுந்தான்.

அத்தா அரங்கா

அவனே எனக்கு அத்தனா (தலைவன்) கிய தலைவன். தண் ணருள் நிறைந்த (அத்தன்) தந்தையே யாகி அரங்க நகர் புகுந்து யான் காண வீற்றிருக்கின்றான்.

செங்கண்மால்

குளிர்ச்சியும் மென்மையும் இனிமையும் மிக்க செந்தாமரை மலர்போலச் சிவந்து அழகியதாய் ஒளிவிடும் தனது கண்வலையை வீசி என்னைத் தன் வழிக்கொண்டான்.

எம்பிரான்

என்னுடைய தலைவனாயினான். என் மனம் அவ் வலைக்குட் பட்டபோது வேறெங்கே ஓடுதல் கூடும்?

பித்தனா யொழிந்தேன்

அவன் பெருமையினையும் அருளினையும் எளிமையினையும் அழ கினையும் எண்ணுகின்றேன்.

என்றழைக்கின்றேன்

எண்ணிப் பித்தனாகிக் கூப்பிடுகின்றேன். என் பித்து நின்றபடி அஃதே என்க.

எத்திறத்திலும்

மால்கொண்ட மனம் பிறரோடு கூடுவதெங்ஙனம்? அடியவ

ராய அந்தணர் அறவோரே யாதலில் அவர்கள் செய்வன சிற்சில போது மறம்போலத் தோன்றினும் அறமேயாகும். ஆதலின் எத்திறத்திலும் அவர்களோடு கூடி வாழலாம்.

**யாரொடும்**

மக்களில் பலர் மாக்களே யாதலின், அறநெறியே ஒழுகி நிற்பதில்லை; மறநெறியே நடந்து செல்வதுமில்லை. அறமும் செய்து மறமும் செய்து இடைநின் றூசலாடுவர். தீதில் நன்னெறியே சென்றுலாவும்போது அவ்வழியில் நின்று அவர்கள் பிரியும்வரை வழிப்போக்கராய் அவரோடு ஒத்துழைத்தல் கூடும். யாரோடும் கூடலாம், எத்திறத்திலும் கூடுதல் இயையாது; எத்திறத்திலும் சிலரோடு கூடலாம்; எத்திறத்திலும் யாரொடும் கூடுதலாகாது.

**சித்தந் தன்னைத் தவிர்த்தனன் செங்கண்மால்**

ஆனால், மக்களோ, நல்லோராயினும் தீயோராயினும் பிறரோடு கூடிவாழும் இயல்பினையுடையவர். கூட்டில் அடைத்து வைத்த கோள்ரியும் கொடும் புலியும் அல்லர். தனித்து வாழ்ந்தால் இவர்களுக்குத் தலைவெடித்துப் போகும். ஆதலின் எத்திறத்திலும் யாரொடும் கூடிவாழ முற்படுவர். இவ்வுள்ள நிலையை என் வரையில் மாற்றி யமைத்தான் கண்வீசி அடிமைகொண்ட கண்ணன். ஒன்றைப் பற்றிய உள்ளம் அப்பற்றிய நிலையில் வேறொன்றினைப் பற்றாதென்ற இயற்கை வழியே என்னைத் திருத்தி யமைத்தான். யானோ நோன்பு நோற்று இந்நிலை யடைந்தேனோ? அடைதலும் கூடுமோ? கூடுவதில்லை. அவனருளாலே அவன் தாள் வணங்கினேன். அவன் என்மேல் மால் கொள்ள அந்நிலையில் பிறிதொன்றை அம்மனம் கொள்வதற் கங்கிடம் இல்லை.

> பேய ரேயெனக் கியாவரும் யானுமோர்
> பேய னேயெவர்க் கும்மிது பேசிபென்
> ஆய னேயரங் காவென் றழைக்கின்றேன்
> பேய னாயொழிந் தேனெம்பி ரானுக்கே.

**பேயரே எனக்கியாவரும்**

நிலையில்லாதவற்றை நிலையாயின வென்று மாறியுணர்ந்து பேய்போல உழன்றலையும் உலகினர் என்னளவில் பேயரே யாவர்.

**யானுமோர் பேயனே எவர்க்கும்**

அவர்கள் என்றும் உண்டென்று உறுதி கூறும் உலக வாழ்க்கையை நிலை இல்லாத தெனப் புறக்கணித்து நிலையான அரங்கனை

எண்ணிப் பேயாய் அலேகின்றே ஞதலின் அவர்கள் அளவில் யானு மொரு பேயனே.

இது பேசியென

இதைப் பேசிப் பேசிப் பயன் என்னே ? பேச்சினுல் பெருநிலே யடைந்தார் ஒருவரும் இல்லே. தீதில் நன்னெறியில் நாம் ஒழுகிக் காட்டுதல் வேண்டும். அது கண்டு உலகினர் உள்ளம் திரும்பும். அளவிலா இன்பத்தில் அடியவர்கள் மூழ்குவது கண்டு அவர்களும் அவ்வழியடைவர்.

ஆயனே

பேய்நிலே நின்றே பேரின்பங் காட்டிப் பேயரைத் திருத்துவேன். அறிவு, கண்ணுற் காண்கிறது பொய் யென்றிராதபடி, வந்து பிறந்து தன் படிகளே எனக்குக் காட்டிய ஆயன் காண்பதெல்லாம் கடவுளே என்பதை ஒரிடத்தே கடவுள் ஒளி மிக்குத் திகழநின்றருளிக் காட்டி வீட்டான். கடவுளாய் வந்து அறிவின் பொருளே நமது கருத்துக் கிசைந்த பாட்டாய்ப் பாடினுன். கண்டவர்க்குக் காட்சிதந்து கைக் கெட்டி நின்ருன்.

அரங்கா

அப்பிரிவினுக்குப் பிற்படரிழவோடே தலேக்கட்டாதபடி கோவி லில் கண்வளர்ந் தருளிய பெரிய பெருமாளது திருப்பெயரைச் சொல்லி அளவு கெடக் கூப்பிடாநின்றேன்.

பேயனுயொழிந்தேன் எம்பிரானுக்கே

எல்லோரும் பித்தனென் றென்னேக் கைவிடும்படி, என் இறை வன்வாய்ப் பட்டுப் பேயனு யலேகின்றேன். ஆயினும் எனது இன்ப நிலே கண்டு இகழ்வாரும் இறைவனேப் புகழ்வாராய் என்வழி திரும்பி இன்ப நிலேயடைந்து உய்வார்கள்.

அங்கை யாழி யரங்க னடியிணே
தங்கு சிந்தைத் தனிபெரும் பித்தனுய்க்
கொங்கர் கோன்குல சேகரன் சொன்னசொல்
இங்கு வல்லவர்க் கேதமொன் றில்லேயே.

அங்கை

செக்கச் சிவந்து பழமெனக் கனிந்து மெல்லியதாய் நுண்ணி யதாய் முடியும் அறிவுபோல அடைவே சென்று அழகாய் முடியும் விரனுனிகளோடும் கரும்பின் கணுவெனக் காணவும் இனிக்கும் விரல்

மைககளோடும் விளங்கி அகன்று நின்று வெளியே உயர்ந்து சிறுகச் சிவந்து, உள்ளிடைத் தாழ்ந்து ஒளி வேறுபாட்டால் மிகச் சிவந்தும், ஓவியம் போன்ற கீற்றுக்களோடு திகழும் அங்கையோ அருளன்னை கைப்பிடித்து மணந்த மெல்லிய கையாகும். அக்கையால் பிடிக்க இவவாழி என்ன நோன்பு நோற்றதோ? தாமரை முகிழெனச் செங்கை குவிந்து நிற்கும் ஒரு விரலால் ஆழியினைப் பிடித்த நிலையில் முன்கையானது யாழின் குடங்கைபோல விளங்கக் கல்லெனத் திரண்ட தோளும் வன்மையைக் காட்டி நிற்கும்.

ஆழி

சுடரொளி பெருக்கி ஒரு சுட்டுவிரலில் சுழன்று நிற்கும் அவ்வாழியைக் கண்டு பகைவர் உள்ளம் பதைபதைக்க நடுங்குவர். அன்பரோ அவனுக்கோர் ஒப்பனையாகிய அவ்வொப்பிலா ஆழி கண்டு மையல் கொள்வர். பகையும் ஒழியுமென உறுதி கொள்வர்.

அரங்கன்

இவ்வாறு ஏரெழிலைக் காட்டி எம்மை ஆட்கொள்ள வேண்டி அரங்கத்து வாழ்கின்றான் மணவாளப் பெருமாள். அவனுடைய இரு தாள்களாகிய மலர்க்கூட்டிலே என் மனம் சென்று அடைபட்டது.

அடியிணை தங்குசிந்தை

ஒப்பொன் றில்லாத தனிப் பெரும் பித்தனானேன். கொங்கு நாடுடைய கோமகனாய்க் குலசேகரப் பெருமாளென உலக வாழ்க்கையில் உயர்ந்து வாழ்ந்தவனே, உலகோடும் கூடுவதில்லை என்று உறுதிசெய்து இவ்வாறு மாறினேன். இப்பாடல்கள் உலக வாழ்க்கையின் இழிவையும் அன்பர் வாழ்க்கையின் இன்பத்தையும் எடுத்துக் காட்டுதலினால், இவற்றைப் பாடும் உலகினர் இந்நிலை அடைந்து, அதில் வல்லவராதல் எளிதேயாகும். உலக வழக்கின் உண்மையை உணர்ந்து அவர்களும் உயர்நிலையடைவர்.

ஏதமொன்றில்லையே

யாதனின் யாதனின் நீங்கியான் நோதல்
அதனின் அதனின் இலன்

ஆதலினால், அவர்களுக்குத் துன்பம் ஒன்றும் வாராது.

# 6



## பிறவி
## வேண்டுந் துறவி



இறைவனை வேண்டி இவ்வுலகை இழந்து நிற்கும் இன்ப நிலைக்கு ஏற்றதொரு வழியாம் இயற்கைத் துறவினை இங்கு எடுத் துரைக்கின்றார் ஆழ்வார். இவரது துறவறத்தின் இயற்கைப் பான் மையை இத் திருமொழியும் இனிது விளக்குகிறது. உண்மையாய் உயர்ந்து அதிலொளிர் அறிவாய் விளங்கி அவ்வறிவி லூறும் இன்ப வெள்ளமாய்ப் பொங்கி எங்கும் வழிந்து எல்லாவற்றையும் தன்னுட் கொண்ட கடவுளை அடைந்தபின், எத்தொழிலும் எளிதா கின்றது; இனிய அறமாகின்றது. இதற்கு மேலும் எமக்கு வேண் டுவது இவ்வுலகிலேனும் எவ்வுலகிலேனும் என்றேனும் உண்டோ? இந் நிலையடைந்த பெரியோர் இவ்வின்பத்தில் ஈடுபட்டு நின்றபோது பிறவாத பெரும்பேற்றையும் மறந்து மால் கொண்ட மனத்தவராய்ப் பிறவியே வேண்டிநிற்பர். கற்கண்டேயாகிவிடுவதிலும், தனியே வேறுநின்று கற்கண்டைச் சுவைப்பதே பேரின்பம் என்பர். கடவு ளாக ஆகிவிடுவதிலும் கடவுளினும் வேருகிக் கடவுளின்பத்தைக் கல்லிலும் கண்டு காதலித்துக் களியேறுவதே கடவுட்பே றென்பர். இறவாத இன்ப அன்போடு இறைவன் ஆடுந்திருக்கூத்தை எதிரி ருந்து என்றும் கண்டுகொண்டிருத்தல் வேண்டும் என்று காரைக்கா- லம்மையார் வேண்டிநின்று பெற்றதாகச் சேக்கிழார் பாடுகின்றார்.

மனித்தப் பிறவியும் வேண்டுவதே இந்த மாநிலத்தே

என்றும்,

இன்னும் பாலிக்குமோ இப்பிறவியே

என்றும், திருநாவுக்கரையர் பாடுகின்றனர். கடவுள் திருவடி நிழலில் நின்று அவரது திருக்கூத்தினைக் கண்டு களிக்கும் அணுக்கத் தொண் டர்களில் ஒருவராக விளங்கா மற்போனலும், அவரோடு ஏதேனும் ஒரு தொடர்புண்டானலும் பெரும்பேரும் எனப் பேசிப் பிரிவஞ்சி மனம் துடிப்பர். கடவுளைக் கனவிற் கண்டாலும் களிப்படையலாம். கடவுள்

மணம் பட்டாலும் கருகிய உயிர் தளிர்க்கும். அவர் நின்றவிடத்தே புகுந்தாலும் பொலிவு பெறுவோம். கல்லாகவும் புல்லாகவும் காற்றுக வும் கருவானமாகவும் மாறிப் பிறந்தேனும் கடவுளோடு தொடர்பு பூண்டால் இன்ப மடைவோம். இவ்வாறெல்லாம் எண்ணி எண்ணி, அழுது புலம்பி அன்புருவாகின்றனர் அடியவர். கல்லிற் புகுந்து கண்டவர் தம் கருத்தழிக்கும் கண்ணனோடு கலந்தருளிக் களிப்படையக் கருதுகின்றார் ஆழ்வார். குலசேகரர் இத் திருமொழியில் கூறியருளிய வற்றைக் கருத்திற் கொண்டு, கரிய செம்மலாம் இராமன் தன் காலடி மண் வேண்டிக் கருத்தழிந்து கரைந்துருகுகின்ற பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்,

> புலையாம் பிறவி பிறந்தென்செய்
> தோம்பொன்னி பொன்கொழிக்கும்
> அலையார் திருவரங் கத்தெம்
> பிரான்நம தன்னைமயாடும்
> தொலையாத கானங் கடந்தவந்
> நாள்தடந் தோறும்புல்லாய்ச்
> சிலையாய்க் கிடந்தில மேநெஞ்ச
> மேகழல் தீண்டுகைக்கே

எனப் பாடுகின்றார்.

காதலன் காதலியின்மேல் கொண்ட கடக்கலாகாக் கடல் போன்ற காதலால் கசிந்துருகி, அவளைத் தான் அடையாதபோது ''முல்லை மலராய்ப் பிறந்து அவளது கூந்தலிற் புகுந்து மணம் வீசும் திருவுடை யன் ஆவேனே, பஞ்சாகிப் பிறந்து புடைவையாய் மாறி அவளைச் சுற்றி வளைத்து இறுக அணைத்து என் துன்பம் நீங்குவேன்'' என்று காதல்வெறி கொள்ளுகிறான்.

> ஆனால் அழகுமன்னன் அர்ச்சுனனும் ஏதுசொல்வான்
> நீர்-என்னதான் சொன்னாலும் என்செவியி லேருது
> மாதந்த கன்னியரை மணமாலை சூட்டினக்கால்
> சித்தசன் விகாரமது தெளியுங்கா ணென்தோழா
> நான்-செத்து மடிந்தாலும் செலவழிந்து போனாலும்
> மாண்டு மடிந்து வைகுண்டம் போனாலும்
> செத்த விடந்தனிலே செங்கழுநீர்ப் பூப்பேன்
> குடமல்லியாய்ப் பிறந்து கொண்டையிலே போயிருப்பேன்
> கொண்டைக்குப் பூவாவேன் கொய்வனத்திற் பையாவேன்
> கண்ணுக்கு மையாவேன் காலுக்கு மெட்டாவேன்

நாயகியாள் நெற்றியிலே நற்சாந்துப் பொட்டாவேன்
அவள்-முந்தாணித் தொங்கலிலே பொத்திய முள்ளாவேன்

என்று அாச்சுனன் புலம்புவதாகப் பவளக்கொடிமாலேயில் வருவது காண்க.

காதலரைப்போலக் கடவுள்வெறி கொண்டாரும் கடவுளின் திருமலேயில் புல்லாயும் மரமாயும் மீனுயும் குருகாயும் நெறியாயும் படியாயும் கிடந்து அவன் பவள வாய் காண விரும்புவர். அன்புடையார் இருந்த இடத்தைக் காண்பதுவும் அன்புடையாரைக் காண்பதே போலாம். கோவைகளிலில் வரும் ''பொழில் கண்டு வியத்தல்'' என்ற துறை இதனே இனிது விளக்குகின்றது. கடவுள் இருந்த இடத்தைக் காண்பதுவும் கடவுளேக் காண்பதே போலாம். அவ் விடமே யாதல் அவரே யாதல் போலாம். அத்தகையது ஆழ்வாரின் உள்ளத்து உயர்நிலே. அந்நிலேயில் கல்லாய்ப் புல்லாய்க் கிடப்பதும் திருநாட்டுப் பெருவாழ்வாகின்றது. அந்நிலே யடையாத போது அரசச் செல்வத்து வீற்றிருப்பதும் எரிவாய்நிரயத்து இடும்பை யாகின்றது.

ஆழ்வார் இறைவனிடத்தே எல்லேயில்லாத இன்ப அன்புடையார். ஆனுல், அவ்விறைவனே மக்களிடத்தே கண்டு களிப்பவர். ஆதலின், புல்லும் கல்லுமாய்ப் பிறந்து திருமலேயிற் புகுந்து வாழ விரும்பியபோதும் உலகினர்க்குப் பயன்படுமாறே விரும்புகின்றனர். கடவுள் நின்ற இடத்தே கல்லாய் நின்று கண்ணனேக் காணக் கருதுவார்; எத்தகைய கல்லாய் இருப்பாரவரெனிலோ, பழ அடியார் பலரும் ஏறியிழியும் படியாய்ப் பயன்பட்டே அவனது பவள வாய் காண முற்படுவர். எல்லாம் இறைவனுகக் காணும் நிலே ஈதேயாகும்.

ஊனேறு செல்வத் துடற்பிறவி யான்வேண்டேன்
ஆனேறே ழடர்த்தான் அடிமைத் திறமல்லால்
கூனேறு சங்க மிடத்தான்றன் வேங்கடத்தே
கோனேறி வாழும் குருகாய்ப் பிறப்பேனே

உடற்பிறவி

எண்ணிலாத பல காலம் எண்ணிலாத பல பிறவி எடுத்து எடுத்து இவ்வுலகில் வாழ்ந்து வருவதெல்லாம் எதன் பொருட்டு? உலகைத் துய்த்துணர்ந்து இயற்கையோ டிணேந்த இறைவனே அறிந்து, அவ்வறிவுக்கியைய உலகத்தோ டொட்ட ஒழுகி உயர்நிலே யடையவே யன்றே, பிறந்தும் இறந்தும் பேரிடர் உறுவது? பறவையாயும் கறவையாயும் மக்களாயும் மாக்களாயும் பலவிடத்தும்

பல நிலையிலும் பிறந்து வளர்வதால் நம் மனமும் அறிவும் பல வகையான பயிற்சிபெற்று உயர்நிலையடைகின்றது. உள்ளத்தின் உயர்நிலைக் கேற்றதோர் உடலம் பெற்று உலகில் பிறந்து வளர்கின்றோம். உடல் வகையால் வேறுபாடு தோன்றினாலும், உண்மையில் நோக்குமிடத்து உள்ளத்தின் வேற்றுமையே பல வகை உயிர்த் தோற்றங்களுக்கும் மூலமாகும். எனவே, உள்ளமே உயிர்த் தோற்றந்தோறும் மாறிமாறிப் பிறக்கின்றது. உயிரும் உள்ளமும் மாறாதபோது உடலளவில் மாறிப் பிறந்ததால் உயர்நிலை அடைதல் ஒருபொழுதும் இல்லை; கீழ்நிலை யடைந்தே கேடுறுவோம். எனவே, உயிர்ப் பிறவியே வேண்டற்பாலது; உடற்பிறவி வேண்டற்பாலதன்று.

பிறப்பும் இறப்பும் பெருந்தொல்லையே. ஆனால், வைக்கோற் புரியால் கட்டுண்ட ஆனேறு அப்புரியினைத் தின்றே விடுதலை பெறுதல் வேண்டும். அஃதே போல நாமும் நம் வினையின் பயனைத் துய்த்தே உயர்தல் வேண்டும். பள்ளிச் சிறார்க்குப் படிப்பு வருத்தமாய்த் தோன்றுவதுபோல, நமக்கு இவ்வுலகமாம் பள்ளி பெருஞ்சிறையாக நிற்கின்றது. பள்ளியில் பயின்றால் அன்றிப் பயன்பெறும் வகையில் வாழ்தல் இயலாதன்றோ? ஆதலின், பிறவி இவவகையில் வேண்டற்பாலதேயாம். ஆனால், அஃது உயிர்ப்பிறவியாய் ஒளிர்தல் வேண்டும். உடற் பிறவியளவாய் ஒழிதல் ஒண்ணாது. மக்களாய்ப் பிறந்தும் குரங்கெனக் குறும்பு செய்து குதித்திடுவாரும், புலியெனப் பொங்கி எரிந்துவீழ்வாரும், உடற்பிறவி பெற்றாரே யன்றி உயிர்ப் பிறவி பெற்றார் இல்லை. உடலளவில் தான் மக்கள் என மாறிப் பிறந்துள்ளார்கள். உள்ள நிலையோ குரங்கு நிலையிலும் புலி நிலையிலும் ஊன்றிநிற்கின்றது.

**ஊனேறு செல்வம்**

அவ்வாறு ஊன்றிநின்றபோது உடலே தாம் என எண்ணி அதனைப் போற்றுவதிலேயே கண்ணும் கருத்துமுடைய ராகின்றனர். உடலை வளர்ப்ப தென்றால் என்ன? ஊனை வளர்ப்பதுதான். ஊனேறு செல்வ மொன்றே உடலுக்குச் செல்வமாவது. உள்ளமும் அறிவும் உயிரும் மாறிப் பிறந்து உயர்ந்து வளராதபோது உடலளவில் மாறிப் பிறந்து வணங்காமுடி மன்னனாய் உயர வளர்ந்தால் ஒரு பயனும் இல்லை. உடல் கொழுத்தால், காட்டில் ஓடும் நரிகட்கிரையாகலாம். ஊன்மல்கு மோடு பருப்பவர், தாம்செல்லும் இடத்திற் கெல்லாம் ஊன் பொதிந்த பசுங்குடிலை ஒரு பெருஞ் சுமையாகச்

சுமந்து சென்று உலகத்திற்கும் தமக்கும் தாமே பெருஞ்சுமையாய் ஒழிவதல்லால் உலகத்திற்கு ஒருநாளும் உதவ ாரார். தமக்கும் உதவுவா ராகார்.

### செல்வம் யான் வேண்டேன்

இன்பத்தை நாடிநிற்கும் நாமனைவரும் இன்பத்தில் நம்மைச் செலுத்துவது செல்வமே என எண்ணி அதனைத் தேடி அல்லும் பக லும் உழைக்கின்றோம். அந்நிலையில் இன்பத்தை மறந்து இன்பமே செல்வமென மயங்குகிறோம். இச் செல்வங்களில், பொருள் முதலி யனவோ இவ்வுலகளவுங்கூட எம்மோடு என்றும் இயைந்து வருவ தில்லை. ஆனால், ஊனேறு செல்வத்துடலோ உண்மையாம் வாழ்க்கைத் துணையாய் உலகில் உள்ளவரை உடன் வருகின்றது. ஆனால், ஈது நாம் செல்லும் நெறியே அன்றிச் சென்றடையும் முடிவிடம் அன்று. ஈதும், செல்வம் எனப் பெயர் பெற்று நம்மை நீங்கிச் செல்லும் தன்மையது. ஆதலின், காற்றுள்ளபோதே தூற்றிக்கொள்ள வேண் டும். இல்லையேல் இலவு காத்த கிளியாய் ஏமாற்றமடைவோம். உயர்நிலை யடைந்து உயிர் வாழ்தலின் பொருட்டே உடலை வளர்த் தல் வேண்டும்; உடலை வளர்த்தற் பொருட்டே உயிர் வாழ்தல் ஒண்ணாது.

### ஆனேறேழ் அடர்த்தான்

உயிரை மறந்து உடலையே உறுதியென எண்ணி. அதனையும் பயன்படுத்திக்கொள்ளாது இழந்து நின்றவர்கள் வாழ்வே வாழ்ந்த னர் என்று கூறுவதோடு நின்றுவிடுதல் உண்மையுரைத்த லாகாது. விலங்கோ 'தக்க தின்னது தகாத தின்னது' என்று அறிந்து ஒழுகுவ தில்லை. ஆதலின், அந்நிலையில் நன்மை தீமை என்ற பேச்சு இல்லை. ஆனால், ஆறறிவு பெற்றும் அறிவை மறந்து அல்லல்படுவோர் அறி விலாப் பேதையர் அல்லர், அறக்கொடியோரேயாவர். இவர்களே இராவணன் இரணியன் எனப் பெயர் பெற்றோர். ஊன்பெருத்து நின்று செருக்கித் திரிந்து கொலைவடிவம் கொண்டெழுந்து கண்ணன் மேற் பாய்ந்த ஆனேறு ஏழும் இவர்கள் நிலையை நன்கு உணர்த்து கின்றன. அன்பே வடிவான ஆனேறு அனைத்தையும் மேய்த்து வளர்த்த கண்ணன் அவற்றிற்கு உரிஞ்சு கல்லாய் நின்றும் அவற் றின் உடலையும் உயிரையும் வளர்த்தான். வானவர்க் கரசனை வழி படுவதிலும் பாலூட்டி வளர்க்கும் ஆவினத்தை வழிபடுவதே உண்மை வழிபாடெனக் காட்டிக் குன்றமே குடை யாகப் பிடித்தான். அன்று

முதல் ஆவினமே அறக் கடவுளாய் விளங்குகின்றன இந்நாட்டில். ஆனால், உயிர்ப் பிறவி மாருது உடற்பிறவியொன்றே மாறி ஆனென உலவிப் புலியெனப் பாய்ந்த பொல்லாத விலங்குகள் ஏழினையும் அத்தகையவன் அத்தகைய நாட்டில் முசுப்பு முரியக் கொன்று குவித் தான். ஆனேறு ஏழையும் அடர்த்ததன் பயன் என்ன? அன்புவடி வாய் உயிர் மாறிப் பிறந்த நப்பின்னையைக் கைப்பிடித்தருளி அவ ளோடு அன்புருவாய்க் கலந்தருளினன். அவ்வருளன்னையும் உயர் நிலையி லோங்கி யுயர்ந்து உயிர்த் தலைவனேடு ஒன்ருயினள். பகை யும் தலைசாய்ந்தது. அன்புகொண்டு அடிமை பூண்டதும் அவனே மேல்விழுந்து கைப்பிடித்தருளுவான்; பகையையும் கெடுப்பான்.

கூனேறுசங்க மிடத்தான்

ஊனேறு செல்வத்தோரேழு ஆனேறும், கூனேறு திமிலோடு பொலிந்தன அல்லவோ! அக் கூனேறு திமிலன்ரே முரிந்து வீழ்ந் தன? "பொய்சினக் குரலேற்றெருத்த மிறுத்தும் போரரவீர்த்த கோனன்ரே" கண்ணன்? உயிர் மாறிப் பிறவாது உடல் மாறிப் பிறந்த கூனேறு எருத்தமுடைய ஆனேறு, அழிந்தொழிய, உடல் மாறிப் பிறவாது உயிர் மாறிப் பிறந்த கூனேறு சங்கமோ குன்ருத நிலையடைந்தது. நிலத்திணைப் பொருள்களில் புல் மரம் முதலியன ஓரறிவுயிரோடு ஒளிர்கின்றன. இயங்குதிணைப் பொருள்களில் கடை நிலையில் உள்ளது இந்நந்தேயாகும்.

புல்மரம் முதல உற்றறியு மோரறிவுயிர்
முரண் நந்தாதி நாவறிவோ டீரறிவுயிர்

எனவருதல் காண்க. ஊனேறு செல்வத்தை ஒருபொருளாகக் கரு தாது, ஊனை உதறிநின்று உழைக்க முன்வந்தது, அவ்வுள்ளத்துறுதி. எழுந்ததும் கூனுடைய நந்தும் அவன் கழுத்தென அழகாகி நின்றது. என் செய்தான் இறைவன்? நப்பின்னையைத் தழுவியணைக்கும் கை யால் அதனையும் தழுவியணைத்தான். தனியே மேலுயர்த்தி விளக் கினன். இடதுகையில் என்றும் பிடித்திருப்பான் ஆதலின் வாடா இளமையும் பெருமையும் பெற்று அஃது இனிய நிலையடைந்தது. "பெண்படையார் உன்மேல் பெரும் பூசல் சாற்றுகின்ருர். செவியில் மந்திரங் கொள்வாயே போலும். செங்கண்மால் தன்னுடைய வாய்த் தீர்த்தம் பாய்ந்தாட வல்லாய். உன்னேடுடனே ஒரு கடலில் வாழ் வாரை இன்னர் இனையர் என்று எண்ணுவார் இல்லை" என்றெல் லாம் அடியார் புகழ நின்றதன்ரே? ஊனேறு செல்வத் துடற் பிறவி

வேண்டாது அன்பேறு செல்வத்து அறிவுப் பிறவி பெற்றபோது நாம் பெண்ணேயாயினும் நந்தேயாயினும் நம்மேல் விழுந்து நம் கைப் பிடித்து நம்முடன் கலந்து நமக்கு இன்பப் பெருநிலையளிப்பான்.

குருகு

அத்தகைய அறிவுப் பிறவி பெற்றால் மக்கள் வடிவமொன்றே வேண்டுமென்பதில்லை. கூனேறு சங்கம் போலக் குளிர்ந்ததொரு வெண்ணிய குருகாய்ப் பிறந்தாலும் பெருமையே அடைவோம். வெள்ளை வெளுத்த கள்ளமில்லா உள்ளமும்,

> கொக்கொக்க கூம்பும் பருவத்து மற்றதன்
> குத்தொக்க சீர்த்த விடத்து

என்றபடி, கண்ணும் கருத்துமாய்க் கருதியதைக் கைக்கொள்ளும் ஊக்கமும் உறுதியும் நீர்மையொடு தண்மையும் நிறைந்த இடத்தே நின்றநிலையும், குருகாய் (அன்னம்) இருந்தே நம் கோமான் மறைப் பொருளைக் கூறியருளிய பெருமையும், குருகை நினைத்தவுடன் நம் மனத்தே எழுகின்றன அல்லவோ?

பிறப்பேனே

''உடற் பிறவி வேண்டேன், குருகாய்ப் பிறப்பேன்'' எனப் பாடுகின்றேன். இதிலொரு முரண்பாடும் இல்லை. குருகாய்ப் பிறப்பது பிறவியன்று. கோனேரி வாழும் குறைவிலா வாழ்க்கை யாகும். அறிவு வடிவமான திருநாடாம் மாலுலகில் அருள்வடிவான திருவாற்றில் (விரஜாநதி) வாழும் இன்ப வாழ்க்கையே யாகும்.

வேங்கடம்

குன்றக் குறவர்க்கும் குளிர்முகங் காட்டக் குன்றிட்ட விளக்காய் நின்றான் இறைவன். அவன் மலையில் அவனுகக்கும் கோனேரியில் வாழ்வது அவனோடு வாழ்வதன்றோ? அவனொடும் நீரிலன்றோ ஆடுகின்றோம். அவன் அடிதோய்ந்த மண்ணிலூறும் நீரன்றோ அந் நீர். இக் காற்றும், இந்நீரும் இம்மலையும் அல்லாது இன்ப உலகென வேறொன்று உண்டோ? இந்நீரையும் காற்றையும் மலையினையும் துய்க்க அவற்றிற் கேற்ற ஒரு குருகாய்ப் பிறத்தலும் பெரும் பேறேயாம். ஆனால், உள்ளம் மாறுத லொன்றே வேண்டுவது.

அடிமைத்திறம்

இறைவன் உடலாய உலகத்தோடு ஒட்ட ஒழுகி ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வாழ்தலே அடிமைத் திறமாகும். உணர்வு பெருக்கெடுத்தோடும் இயற்கைவழி ஈதே யாகும். இவ்வழி செல்லாது

அல்வழியில், நம் உடற்பொறையை ஊடே தடையாய் எறிந்து வழி மறித்து இறைவன் வடிவான இயற்கைக்கு மாறு செல்வது அழகோ? அடிமைத் திறம் என்றால் அடிமைத் திரளும் ஆம். இவ்வாறு உயிர் மாறிப் பிறந்தாரோடு குருகாய்க் கூடிக் குலாவினாலும் குறைவிலா நிறைவாம் இன்பம் பெறலாமே!

> ஆனாத செல்வத் தரம்பையர்கள் தற்சூழ
> வானாளுஞ் செல்வமும் மண்ணரசும் யான்வேண்டேன்
> தேனார்பூஞ் சோலைத் திருவேங் கடச்சுனையில்
> மீனாய்ப் பிறக்கும் விதியுடையே னாவேனே.

(ஆனாத— குறையாத; அரம்பையர்— வானுலக மங்கையர்)

**மீன்**

குருகோ பறந்துவாழும் பண்பின தாகலின் மலையை நீங்கி வெளியே பறந்தும் போகலாம். இயற்கையிலேயே இவ்விடத்தை விட்டுப் பிரியலாகாதபடி இருத்தல் வேண்டும். மீன் நீரை விட்டுப் பிரிய முடியுமோ? முடியாதாதலின் வேங்கடத்தே மீனாக விளங்க வேண்டுகின்றேன். குருகாய்ப் பிறப்பேன். அஃதியலாதேல் அதனால் குத்திக் கொத்தப்படும் மீனாகப் பிறந்து அவ்வகையில் பயன்படுவேன். உண்மையறி வின்பமான நிலையில், உண்பானும் அவனே, உண்ணப்படு பொருளு மவனே. ஆதலின், மீனென்றும் குருகென்றும் வேற்றுமை யில்லை யன்றோ? மீனாய்ப் பிறந்தாலும் பிறப்பேன், வானவனாக ஒருநாளும் ஒருப்படேன்.

**வான்**

உயர்நிலையை மறந்து ஆரவாரச் சுழியி லாழ்ந்து அங்கெழுந்த நீர்க்குமிழிபோலப் பெயரளவில் அழியாதவராய்ப் பெருஞ்சிறப்பொடு வாழ்வதும் வாழ்வேயோ? அழியாத நிலையுடைய நாம், அழியும் உடலை அழியாத இன்ப ஊற்றென எண்ணி இன்பமடைவது என்ன பேதமை! வானவராகப் பிறந்தால்தான் என்னை? தன்னுள்ளே சுரக்கும் தலையாய இன்பத்தை நுகராது பெண்களையும் பிற பொருள்களையும் நச்சித் திரிந்து நாய்போல அலைவதோ வாழ்க்கை? வானவர் பெறும் பெரு வாழ்வுதான் என்னை? வானர மகளிரோடு கூடி இமையா நாட்டத்தவராய் அவர்களது அசைவிலா அழகினைக் கண்டு ஐம்புல இன்பம் நுகர்வதுதானே? மேலான நிலத்தே, சிற்றின்பச் சுனையாம் பெண்களிடத்தே மீனெனத் தேக்கித்திரியும் வானவர் உலகில் பெருஞ் செல்வமாவது என்னை? ஐம்புல நுகரும் அருஞ் செயலேயன்றோ?

ஆனாத செல்வம்

அவ்வின்பத்தின் நுட்பத்தையேனும் அவர் அறிவாரோ? காதலனும் காதலியுமாகக் கலந்து ஒருவராய் நின்றால் அன்றி இன்பக் களிப்பென்பது ஏது? அவ்வன்பு நிலையில், மக்கள் அழகு உயிர் ஒளியாம் அறிவுவிளக்கின் அருஞ்சுடராக அமைகின்றது. மற்றைய இடத்திலோ அவ்வழகு, மேனிமினுக்காய்ப் பரத்தையர் பண்பாகிப் பாழாகின்றது. பொன்னும் மணியுமான செல்வம் அனைத்தும் வெளிப் பகட்டாய் உடலின்புறத்தே நின்று விடுவதுபோலப் பரத்தையர் அழகும் உயிரளவிற் சென்று ஒளிராது உடலளவில் நின்றுவிடுகின்றது, எனவே, அவ்வரம்பையர் மேனி மினுக்கும் செல்வத்தை வளர்க்கும் செல்வமே யன்றி அறிவினையும் அன்பினையும் வளர்க்கும் அழகன்று. மற்றைய பரத்தையர் மேனிமினுக்கோ குறைதலும் மிகுதலும் அடைவதில்லை. தோன்றும்போதே அழகொடு தோன்றுவர், அழியும் போது அழகொடு அழிவர். இடைநின்ற நிலையில் மாறுவதில்லை; ஆனால், முற்றும் ஒருங்கே ஒருநாளழிவ துண்டு அம் மேனிமினுக்கும செல்வமேயாதலின் சென்றழியும் தன்மையதே யாம். ஆனால், அழியாத செல்வம் ஈது அன்றாயினும் ஆனாத செல்வமேயாம்.

அரம்பையர் தற்சூழ

ஒருவனுக்கு ஒருத்தியும் ஒருத்திக்கொருவனுமாய் ஒத்துவாழ்வதே உயர்ந்தோர் ஒழுக்கமாகும். இவ்வுயரிய அன்புநிலையை அடைந்து உண்மை யறிவின்பத்தை உணர்ந்து துய்க்காது, பெண்களை விளையாட்டுப் பொருள்களாக்கிக் காதற் கழிவிடமாம் கைச்சரக்காகக் கொண்டு பொழுதுபோக்கல் புலையர் தொழிலே யாகும். தான் ஒருவனாக தன்னலப் பாரித்துத் தனிநின்று, தண்ணருள் ததும்பும் தாய்மாரை அடிமைகளாக்கியதோடு நில்லாது, அந்நிலையில் செருக்கித் திளைத்துத் தன்னை அவர்கள் சூழ்ந்துநிற்கச் செய்து வீற்றிருப்பது தூய வாழ்க்கையன்று.

வானாளும் செல்வமும் மண்ணரசும் யான் வேண்டேன்

இது வானரசின் நிலையானால், மண்ணரசும் அவ்வகையில் அத்தகையதாம். இவை செல்லுந்தன்மையினவாய செல்வமேயாம். ஒன்றும் கைக்கெட்டாத கருவானத்தைக் கட்டியாளுதலே வானாட்சி. கனவுலகே கண்ணிமையாதார் உலகம். மண்ணரசோ மண்ணாய் அழியும் தனிப்பெருஞ் செல்வமென்றன்றோ பொருள் தருகின்றது? யானும் ஓர் அரசனாதலின் இவ்வரசச் செல்வத்தின் உண்மையறி

வேன். ஆதலின், அவற்றின் மயக்க வலையிற் சிக்கி வருந்துவேன் அல்லேன். இரண்டும் ஒருங்கே பெறினும் யான் வேண்டேன். பொய் யொடு பொய் பொருந்தினால் மெய்யாமோ? செல்வத்தோடு செல்வஞ் சேர்ந்தால் செல்வமாகாது; செல்லாமல் நிலைக்கும் சிறப்பாகுமோ? ஆதலின், அவைகளை வேண்டித் தவங்கிடப்பவன் யானல்லேன்.

## திருவேங்கடம்

ஆனாத செல்வமாம் அம்மேனிமினுக்கில் ஆரழகாயது, அன்பு வலையாம் கண்ணே யன்றோ? கண்ணின் கட்டழகையும் கடந்துநின்று களித்துத் திரிவது நீரிலே மின்னிப்பொலியு மீனேயாகும். ஆண்டவனருகே அம்மீனாய்ப் பிறப்பினும் அவனடி அடைதல்கூடும். காதற் கடலில் கலங்கும் மீனாகி, இயற்கைக் கெதிர் நின்று இவ்வானவர் போல வாழ்வதிலும் இயற்கையோ டியைந்து நீரோடு நீராய் நின்று மின்னிப்பொலியும் மீனாய் விளங்குவது மேன்மையன்றோ? வானுலகில் கள்ளுண்ட களிப்பே உண்டு. மீன்வாழும் வேங்கடத்தே தித்திக்கும் தேனுண்ணும் தெளிவுநிலை யுண்டு. மேனிமினுக்கும் வெளிப்பகட்டும் ஆரவாரமுமே அங்கு உள்ளன. இங்கோ இயற்கையழகு எங்கும் பொலிகின்றது. அங்கோ நாகரிகப் பெருக்கம்; இங்கோ நடுநிலையி லூறும் இன்பப் பெருக்கம், அங்கே ஆள்வானும் அடிமையுமாய் வாழ்வர்; இங்கோ, புல்லும் கல்லும் மக்களும் மாக்களும், நீரும் மீனும், மலையும் மாலும் ஒன்றுபட்டு உயர்நிலையில் உவந்திருக்கும் உரிமையோடு அனைவரும் ஒன்றாய் வாழ்வர். வானைக் கட்டியாள இமைகொட்டாது கனாக் காண வேண்டாம். வானத்தில் மணமாய்ப் பரந்து எங்கும் நிறைந்தும் நிற்கலாம். மண்ணாய் ஒழிதல் வேண்டாம். மண்ணும் மணக்கும் மலையன்றோ ஈது? இறைவனோடு இயை புடைய இம்மலையிலிருக்கும் மீனினும் இன்பமுடைய பொருளும் வேறொன் றுள்ளதோ? மீனென இகழவும் படுமோ? இறைவன், உலகும் உயிருமாய் முறையே மலர்ந்து விரிந்தநிலையில் முதலில் மீனென விளங்கினான் அன்றோ? நீர்மையுள்ள இடத்தில் நிலைநின்ற நீர்மையும், தானழியும் அடைக்கலமான அடி நிலையை அகலாத அருமையும் பெற்றுப் பொலிவது மீனே யன்றோ?

## தேனார் பூஞ்சோலை-சுனை

கண்கவர் வனப்போடு கருநிறங்கொண்ட கண்ணன் மலையே தான் கட்டழகுநிறைந்த கருவூல மாகும். பச்சைப்பசேர் எனப் பார்ப்பவர் கண்ணைப் பறித்து விளங்கித் தண்ணென்ற நிழல்தரும்

சோலையோ, இலையும் பூவும் கொண்டியற்றியருளிய இயற்கை யரண்மனையாம். இங்கிருந்து இன்பந் துய்ப்பன எவ்வகை யுயிரு மேயாம். வெயிற்கு ஒதுங்க நிழல் தருவதொன்றே இதன் பெருமை என எண்ணற்க. கண்ணைக் கவரும் களிமலர் பல காணலாம். (பூ)—:அஃதொரு காட்சியேயாம். நறுமணங்கமழும் நாண்மலர் பலவும் நாம் முகர்தற்கோர் இன்பம் உதவுகின்றன. நாண் மலரோ தேன் பெருக்கமாம் தித்திக்கும் சிற்றுண்டி தந்து நாவையும் நம்மையும் மகிழ்விக்கின்றது. (தேன்) பருகப் பனிநீரும் சுனைநீராக ஒருபால் ஊற்றெடுக்கும். தேன்வண்டுகளின் ''தென்ன'' என்னும் பாடல் செவிவழியே புகுந்து மனத்தை உருக்குகின்றது. (தேன் வண்டு)-: இத்தகைய இடத்தே மெல்லெனக் காற்றுவீச ஊற்றின்பம் பெற்று உண்மையை உணர்வோம் அன்றோ? அருளின் குளிர்ச்சியோ டமைந்த சுனை நீர் அடுத்தே இருத்தலின் அங்கு உலவும் காற்றும் அன்புருவாய் மெல்லெனவீசி உள்ளமும் உடலமும் குளிர, இன்பமூட்டும் சோலைநடுவே தூங்கிநிற்கும் சுனையின் அழகைச் சொல்லவும் வேண்டுமோ? இயற்கையின் அமைதியின்பம் கண்வளரும் தொட்டிலே அச்சுனை யாகும். உலக ஆரவாரத் திடையே உயர்ந்தோர் நிலையடைந்து மனக்கொந்தளிப்பின்றி நிற்பதற்கு இந்தச் சுனையே சிறந்த உவமையாகும். (சுனை)—: இவ்வமைதி இன்பத்தில் மின்னிப்பொலியு மீனாய்ப் பிறப்பதன்றோ பெரும் பேறு. வானுலகிலும் ஐம்புல இன்பமே பெறுதல் கூடும். ஆனால் அவ்வின்பம் அரம்பையர் இன்பமாய் இழிநிலையடைந்தது. வேங்கடத்தும் கண்டு கேட்டுண்டுயிர்த்துற்றறியும் ஐம்புல இன்பமு மொருங்கே நுகர்கின்றோம். ஆனால் இதுவோ இயற்கையோ டியைந்த இறைவன் வடிவான உண்மையறிவின்பமாக உயர்ந்து விளங்குகின்றது. ஆதலின், வானவரினும் மீனே சிறந்ததாம்.

விதியுடையே னாவேனே

மீனாய்ப் பிறக்கும் பெரும்பேற்றினை அடியேன் இதுபொழுது பெருமற்போனாலும், அவ்வாறு பிறப்பதற்கேற்ற ஆகூழ் பெறினும் அமையும் அன்றோ? நிழலும் குளிர்ச்சியும், மணமும் அழகும், பாட்டும் பண்பும், மென்மையும் ஒளியும், இனிமையும் இன்பமும் பெற்று வாழ்வதன்றோ வாழ்க்கை? அவ்வாழ்க்கை வாழ்வது வேங்கடத்து மீனன்றோ?

> பின்னிட்ட சடையானும் பிரமனு மிந்திரனும்
> துன்னிட்டுப் புகலரிய வைகுந்த நீள்வாசல்

மின்வட்டச் சுடராழி வேங்கடக்கோன் தானுமிழும்
பொன்வட்டில் பிடித்துடனே புகப்பெறுவே னாவேனே

(பின்னிட்ட - திரிந்துவிட்ட, அல்லது பின்னே தொங்கவிட்ட, அல்லது பின்னிட்டு வரும்; துன்னிட்டு - நெருங்கி; ஆழி - சக்ராயுதம்; வட்டில் - எச்சிற் படிக்கம்).

வேண்டுதல் வேண்டாமையிலான் அடிசேர்ந்தாரும் வேண்டு-தல் வேண்டாமை யிலாதவரே யாவர். ஆதலினால், ''மீனாய்ப் பிறத்தல் வேண்டும், மக்களாய்ப் பிறத்தல் வேண்டாம்'' என வேண்டியும் வேண்டாதும் நிற்றல் இறைபணி நிற்றல் அன்றாம். இறைவனோ டியைபு ஏற்பட்டபோது, ''இப் பிறவி தப்பினால் எப் பிறவி வாய்க்குமோ ஏதாமோ'' என அஞ்சவேண்டுவ தில்லை. மக்கட் பிறவியை மறுக்க வேண்டுவதில்லை. 'அன்பர் பணிசெய்ய என்னை ஆளாக்கிவிட்டுவிட்டால் இன்பநிலை தானே வந்தெய்தும்.' அத்தொண்டர்நிலை பெறுவதனால் மக்கட் பிறவியும் வேண்டற்பால-தாம். மீனோ சுனைநீர்வற்றினால், இறைவன் தொடர்பை இழக்க வேண்டிவரும். அவ்விழவு இல்லாத மக்கட்பிறவி அவ்வகையில் பெருமை யுடையதே யாகும்.

### வைகுந்தம்

மக்கட் பிறவி எடுத்தும் திருமாலுல கடையலாம். பொந்தி யொடு பொன்னுலகம் போகும் வழி யீதேயாகும். மாலுலகம் என் பது கருவானத்தின் மேலே இவ்வுலகம் போன்றுள்ளதோர் உலகம் என எண்ணற்க. மலர்மிசை ஏகினான் மாணடி சேர்ந்தார் நீடுவாழும் மிசை நிலமோ, உண்மையறி வின்பமாய் உள்ளும் புறமும் ஒளிரும் இராப் பகலற்ற நடுநிலை யுலகமாகும். இயற்கையின் அழகும் அடி யவர் அன்பும் எங்கே மிகுதியாகக் காணப்படுகின்றனவோ அவ்விடமே அகமும் புறமும் அனைத்துமாய மாலுலக மாகும். இயற்கையின் ஏரெ ழிலுக்கும் அன்பர் குழாத்தின் இன்ப அன்புக்கும் இருப்பிட மாதலி னால் அன்றோ, திருவேங்கடம் திருமலை என்று சிறப்பிக்கப்படுகின்றது.

### நீள் வாசல்

அனைத்துமாய அம் மாலுலகத்தின் வாயில் நீண்டதொன்றே யாகும். அவனே அனைத்துமாயபோது தொட்ட தொட்ட இடந்தோ றும் தோன்றுகின்றா னாதலின் நின்ற விடத்தே நெடுமாலைக் காண லாம். எனவே, எப்பொருளும் அம்மாலுலகின் வாயிலாயபோது அவ

லைப்போல அதுவும் பரந்ததொன் ருகின்றது; நீண்ட தொன்ருகின்றது. பெயரும் வடிவுமான உலகமெனும் திரைக்குள்ளே, ஒளிர்கின்ற உண்மையாம் தகழியில் ஊற்றிய இன்பமாம் நெய்யோடு எரியும் அறிவெனும் சுடர்விளக்கைக் காணுது இருட்டில் தடுமாறுகின்ருேம். உலகமாய்ப் பரந்த நீள்வாயில் அப்பொழுது, நெருப்பாறும் மயிர்ப்பாலமுமாய் நெருக்கடியாகின்றது. வானம்போல் வளர்ந்தகன்ற அவ்வாயில் எல்லோர்க்கும் புலஞவதில்லை.

துன்னிட்டுப் புகலரிய

அன்புவடிவான அணுக்கத் தொண்டருக்கே அது புலனுகும். மற்றையோர்க்கோ எல்லோரும் வந்து நெருக்குஞ் சிறுவழியாகத் தோன்றுகின்றது. இடமகன்று நின்றபோதும் அதனையறியாது ஒருவர்மேல் ஒருவர் வீழ்ந்து தாக்கியும் தாக்குண்டும் இடர்ப்படுகின்றனர். நெருக்கமென நினைத்தவர் அங்குப் புகலாவதில்லை. தாம் எண்ணியதே வழி என மன்ருடும் குறுகிய நோக்கமுடையாருக்கு அதுதான் குறுகிய வழியாகின்றது. பிறரைப் பின்தள்ளி முற்புக விரும்புவார்க்கு மாலுலகில் புக வழியுண்டோ? உலகமனைத்தும் உலகளந்தானின் உடலமாதலின் உலகப் பொருளனைத்தும் அவனெதிரே காணப்படும். அனைவரும் சூழப் பெருஞ் சிறப்போடு வீற்றிருப்பான் ஆண்டவன். இவ்வன்பின் பெருக்கத்தை யறியாது துன்ப நெருக்கடி என மருண்டு மயங்கி வருந்துவாரை என் என்பது!

பின்னிட்ட சடையானும்

அங்கே அன்பு ஒன்றற்கே சிறப்புண்டு. கல்வியறிவிற்கும் செல்வச் சீருக்கும் நோன்பின் வன்மைக்கும் அங்குச் சிறப்பில்லை. பின்னே நீண்டு தூங்கும் சிக்குத்தலையுடையார் உள்ளே புகவறியாது தயங்கிப் பின்னே அவ்வாயிலில் நிற்கின்ருர். சிக்குத்தலை (சடை) யும் பிறவும் அந்நோன்பு நோற்பாரின் நிலையை யன்ருே குறிக்கின்றன? அன்பு நிலையில் அவனை யடைய ஒருப்படாது உடலை வாட்டும் நோன்பு நிலையில் அவனை நம் நோன்பிற் கடிமையாக்க முயன்ருல் பின்னே தயங்கவேண்டித்தான் வரும்.

பிரமனும்

பெரியோனுகிய மறக் கிழவனும் புகமாட்டாது பின்தங்குகின்ருன். முதற்கிழவனது முதுமைக்கேற்ற மூதறிவும் மறைக்கிழவனுய் மறையோதியதற் கேற்ற நூலறிவும், உலகவறிவே யன்றி உண்மையறிவாம் மெய்யுணர்வன்று. நோன்பு நோற்பதெல்லாம் மெய்யுணர்வு

பெறவே யாதலின் உண்மையறி விலாதபோது ஒருபயனும் இல்லை யாம். உலகையும் கடந்து உள்ளீடாய் நின்ற இன்ப ஒளியை உலகறிவு கொண்டே காண முயலுதல், முடவன் கொம்புத்தேனுக்கு அவாவிய கதையாக முடியும். 'கற்றதனுலாய பயன் என் வாலறி வன் நற்ருள் தொழாஅர் எனின், ஆனல், கல்வீயறிவையும் கடந்தது கடவுளின் கழலிணை ஆதலின் வெறுங் கல்வியறிவுடையாரும் வெளி யே நிற்கின்றனர்.

**இந்திரனும்**

இந்திரன் என்பது செல்வனையன்ரே குறிக்கின்றது? சாவா மருந்துண்டு இமையாது நின்று ஏரெழில் கண்டு செல்வத்தில் திளைப் பாராய் ஐம்புல இன்பமும் ஆரத் துய்ப்பவர் அந்நிலையளவில் நின்று விட்டால் இறைவன் நிலையை அறிதல் இயலாது. இமையவர், இன்பம் நுகர்ந்தும் அதன் உண்மையை உணர்ந்திலர். என்பினைக் கடிக்கும் நாய், தன்வாய்க்குள் என்பு தைத்த லால் செங்குருதி கசியக் கசிய அதனை என்பிலூறும் இனிய சாறெனச் சுவைத்துக் களித்தல்போலச் செல்வத்தில் திளைப்பாரும் தம்முளூறும் தனியின்பத் தையே யறியாது தம்மையே யுண்டு சாகின்றனர். 'ஐயுணர் வெய் தியக் கண்ணும் பயமின்றே மெய்யுணர்வில்லா தவர்க்கு.' ஆதலின் மெய்யுணர்வு பெற்று அன்பு வடிவாய் அனைவர்க்கும் அடிமையாம் உரிமை பூண்டா லன்றி அவனை அடைய இயலாது. அவனுலகில் வெளியேதான் நிற்றல்வேண்டும்.

**வேங்கடக்கோன்**

நோன்பாலும் கல்வியாலும் செல்வத்தாலும் ஆண்டவனை அடைதல் இயலாதென இயம்பவும் வேண்டுமோ? மின்னெனத் தோன்றி மறையும் இவ்வுலகத்தினை அதன் அடிப்படையாய்த் தாங்கி நிற்பது அழியாத அறமே யாகும். அஃது அறிவு ஒளியாயினும் அழியாததொன்ருகும். மின்னலையே ஒரு வட்டமாகச் செய்தமைத்தது போன்று சுடர்விட் டெரிகின்றது. இவ்வறத்தையே தனது பெரும் படையாக வலக்கை ஏந்திய அறாவழியந்தணன், நோன்புநோற்ருரும் கல்விகற்ருரும் செல்வம் பெற்ருரும் காணலாகாத கடைநிலையாக நிற்றலின், அவர்கட் கெல்லாம் தனிப்பெருங் கோனுகவிளங்குகின்ருன். உலகும் உயிருமாய இயற்கையின் ஏரெழிலே ஒரு மலைவடிவம் கொண் டதுபோன்றது வேங்கட மலை. அதற்கொரு கோனுன இவ்வாண்டவன், எதற்கும் எவர்க்கும் இறைவனே யாவன்.

உமிழும் பொன்வட்டில்

அவனை எவ்வாறு அடைதல் கூடும்? அவனைப் பிரிய மாட்டாத அழுத்தமான அன்போடு, யான் எனது என்னும் செருக்கறுத்து அடியார்க்கு எளியனாய் அடக்கமும் அமைதியும் பெற்றுத் தன்னிழலில் தனிநின்று இறைபணி நிற்கும் தொண்டர் நிலைதான் தூய நிலையாகும். தொண்டர் உள்ளே புகவந்தால் உலகம் முழுவதும் ஒதுங்கி நிற்குமாதலின் அவர்கள் எளிதே உட்புகுவர். தொண்டராயினர், உயர்ந்த பணிவிடையே செய்ய முற்படுவதில்லை. முடிசூட்டும் தொண்டையே வேண்டி நில்லாது, எச்சிலேற்கும் வட்டிலைப் பிடித்திருக்கும் இறை பணியே வேண்டுவர். மறையோனாய்ப் பணி செய்தலும் ஒன்றே, பறையனாய் நின்று பணிசெய்தலும் ஒன்றே, மறையவர் என்றும் பறையர் என்றும் இறைவனெதிரே வேறு பிரிப்பார் அறிவிலிகளே ஆவர். எல்லாம் இறைவனாயபோது எச்சிலும் இறைவனாதல்வேண்டும். இகழப்படும் எருவும் மருக்கொழுந்திற்கு மணமூட்டி நிற்பதொன்றே, எருவிலும் இறைவன் உண்மையின்ப அறிவாய் இருந்து ஒளிர்வதனைக் காட்டவில்லையா? அன்புநிலை நின்றாரே எச்சிலும் இன்பவடிவின தென்பதை உணர்வர்.

> பாலொடு தேன்கலந் தற்றே பனிமொழி
> வாலெயி றூறிய நீர்

என்று காதலன் பாடியது அன்புநிலையில் நின்றதால் அன்றோ? உண்மையறிவு இன்ப வடிவினனாய இறைவன் உமிழ்வதற்கு அறிவன்றி யாதுளது? அவன் உமிழ்வது பொன்னே யாகும். அப்பொன்னே இன்பவடிவாய்ப் பொலியும் அறிவே யாகும். இறைவன் உமிழும் பொன்னை அருகுநின்று ஏந்த மின்வட்டம் போன்றதொரு மணிவட்டிலாகிய மனமொன்றினை உறுதியாகப் பிடித்து உடன் செல்லவேண்டாமா?

பிடித்துடனே புகப்பெறுவே னாவேனே

வட்டில் பிடிப்பாரை யன்றோ இறைவனுடனேயே உள்விடுவர்?

> ஒண்பவள வேலை உலவுதண் பாற்கடலுள்
> கண்டுயிலு மாயோன்றன் கழலிணைகள் காண்பதற்குப்
> பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடத்தே
> செண்பகமாய் நிற்கும் திருவுடையே னாவேனே

(ஒண்—ஒளி; வேலை—அலை; தண்—குளிர்ச்சி; துயிலும்—தூங்கும்; கழலிணை—வெற்றிக் கறிகுறியாம் வீர கண்டாமணி அணிந்த இரு திருடிவகள்; பண்—இசை; பகரும்—பேசும்; திரு—பாக்கியம்.)

செண்பகம்

மக்கட் பிறவி வேண்டினேன் என எண்ணற்க. (தொண்ட ரடிப் பொடியாழ்வார்போல, அணுக்கத் தொண்டராய் இருப்போர் பழைய வழக்கத்தால் பொன் வட்டிலைத் திருடவும் செய்வர்). ஆத லின் பொன் முதலியனகொண்டு வழிபா டியற்றுவதில் ஓர் இடர்ப் பாடும் உண்டு. இவை யின்றியே, நேர்நின்று நெகிழ்ந்துருகுவதே நேர்மையாகும். பூ மரமாய் வளர்ந்து அதன் பூவாய்ச் சென்று அவ னால் சூடப்பட்டு அவனுக்கு இன்ப மூட்டுவதே என்றும் இனியதாகும். பூவோ, கடவுளின் உண்மைக் கண்ணாய், மணந் தந்தினிக்கும் இன்ப அழகாய் அறிவின் பொலிவாய்த் திகழ்கின்றது. பூ மன்றம் (புஷ்ப மண்டபம்) எனப் பெயர்பெற்ற வேங்கடமலையில் பூ மரமாய் இருத் தலும் பொருத்தமேயாம்.

கடலுள் கண்துயிலும் மாயோன் கழலிணைகள்

உலகமோ துன்பநிரை கடலாய் அமைதி யின்றி அல்லற்படுவது போலத் தோன்றுகின்றது. உயர்ந்தோர் அவ்விடத்தும் அமைதி பெற்று வாழ்கின்றனர். கீழைப் பெருங்கடலில் (Pacific ocean) ஒரு வகையான சுழற்காற்று அடிப்பது வழக்கமாம். அதனை அறிந்த கப் பலோட்டிகள் சுழற்காற்றின் ஊடே சென்று நடுவிடம் புகுவார்களாம். அங்கு அசைவிலாத குளம்போல அக்கடலடங்கிக் கிடக்குமாம். அங் ஙனமே, அன்பராயினாரும் புறத்தே தோன்றும் பெயரின் போராட் டத்திலும் வடிவின் மாருட்டத்திலும் சிக்காது அவற்றைக் கடந்து சென்று உள்ளே ஒளிரும் ஒப்பற்ற முதல்வனோடு ஒன்றாகி உவந்து வாழ்வர். கொந்தளிப்படைந்த கடலில் அலையும் கொடியும் சிக்கிப் புரள நடுவிடத்தே அமைதி நிலவுகின்றது. அங்கொருவன் அசையாது தூங்குதலும் கூடும். உலகமும் கொந்தளிப்படைந்து கடல்போலக் கலங்கி அமைதியின்றிக் கிடக்கின்றது. பெருங்கடலில் ஒளிபொருந் திய பவளக் கொடியினை அலைகள் அங்குமிங்கும் புரட்டிக்கொண்டிருக் கின்றன. உலகத்தில் அலைபடும்போது, நாம் துய்க்கும் சிற்றின்பமோ மின்னல்போலப் பொலிவதால், சிறிது வெளித்தோன்றும் பவளக்கொடி போன்றது எனலாம். இன்ப வடிவின தாகிய உலகம் இன்பத்தை நாடி நிற்போர்க்குப் பாற்கட லாகின்றது. மெய்யுணர்வில்லாதபோது இன்பமும் விலங்கே; உலகமும் கடலே. ஆனால் துன்பம் போன்று, இருப்பு விலங்கும் கருங்கட லும் ஆகாது பொன் விளங்கும் பாற்கடலும் ஆகின்றது. ஆனால் என்னை? அங்கும் அலைபுரளும் கொடிகளும், இங்கும் பொன்னில் திளைப்பாரும் அல்லல்பட்டே நிற்

கின்றனர். மனமடங்கிய இடமே மாலவன் உலகமாகும். நீரில் மூழ்கி பிறத்தற்கு அஞ்சுவார் பாற் கடலில் குளித்தால் அழுத்திவிடாது மேலே தூக்கிவிடுமோ? நடுஇடம் சென்றால் அன்றி நாம் உய்வது ஒருபோதும் இல்லை. அந்நடுவிடத்தே ஆண்டவன் அறிதுயில் அமர்கின்றான். அன்பர் செல்லும் இடமும் அஃதே யாகும். அலையும் அவாவும் அற்ற இடம் அஃதே யாகும். நடுவிடத்தே அவன் அமர்ந்திருந்தும் உலகம் முழுவதும் உழன்று வருகின்ற தென்றால் அவனது வியத்தகு பெருமையை என் என்பது (மாயன்)! அல்லலையும் அறியாமையையும் கடந்துநின்று வெற்றிபெற்ற அத்தகைய ஆண்டவனது கழலிணைகளைக் காணவேண்டும். கழலிணைகளாம் இன்ப நிழலிடமே அக்கடவுளுக்கு அடிப்படையாவது. அவ்வின்ப அழகினையன்றோ காணுதல் வேண்டும்? அலைமேலுள்ளானை மலைமே லிருந்து பார்க்கும் வழி அன்பு வழியேயாம்.

## ஒண்பவளவேலை உலவுதண் பாற்கடல்

இவ்வாறு துன்பக் கடலாகிய உலகம் இறைவனது உடலமாதலின், அவனது நிழலை இங்கும் காணலாம். கதிரவனது ஒளியானது கடலில் வீழ்ந்து ஒளிர்வதுபோல ஒப்பற்றவனது ஒளியும் உலகமெனும் கடலில் வீழ்ந்து ஒளிர்கின்றது. அருள்நிறைந்த கரியோனாய், அறிவு ஒளி எரிக்கும் செங்கண்ணும் செங்கையும் சிவந்த காலும் சிவந்த கொப்பூழும் கொண்டு இறைவன் எங்கும் திகழ்கின்றான். இவனுடைய இன்பத்தின் நிழல் விழுந்த போது கடலும் இனிய பாற்கடலாக விளங்குகின்றது. நீரின் மிகுதிப்பாட்டால் அக்கடல், கருநிறங்கொண்டு எண்ணெய் வழித்தாற்போல உள்ளொளியோடே மினுமினுத்து இறைவனது அருள்வடிவின் அழகிய நிழலாகத் தோன்றும். செம்பவளக் கொடியே அவனுடைய அறிவு வடிவான கண்ணையும் கையையும் காட்டிநிற்கும். உள்ளே அமைதியாய் அமர்ந்தவனது வடிவ நிழலே புறத்தே கடலாகவும் ஒளிர்கின்றது.

## செண்பகம்

அவனைக் காணப் பூ மன்றத்தில் பூ மர மாவேனாக. 'தேனிலினிய பிரானே செண்பகப்பூச் சூடவாராய்' என அன்பர் பாடிச் சூட்டும் செண்பகப் பூவாவேன். காலையில் உலகமெழுந்ததோடு இன்பமாய் எழுந்தொளிரும் தூய்மையோடு பேரழகும் பூண்ட பூவாயும் அதனைப் பூக்கும் செண்பகமாயும் திகழ்வேன்.

பண்பகரும் வண்டினங்கள் பண்பாடும் வேங்கடம்

அன்பர்கள் இறைவனது மலர்த்தாளில் ஊறும் இன்பத்தேனை உண்டு தம்மை மறந்து வண்டுபோல் இறைவன்பேர் பாடிநிற்பர். அத்தகையது அப் பூ மன்றம். அவ்வண்டுகளின் பாட்டைக் கேட்கும் பூ மர மாதலினும் பெரியதொரு பேறுண்டோ? வண்டுகள் ஒன்றேடு ஒன்று ஒலிப்பது பேசுவதுபோல் நமக்குத் தோன்றுகின்றது. அவ்வாறு பேசும்போதும் இசையோடேயே ஒலித்துத் திரிகின்றன. ஆனல், திருவேங்கடத்திலோ பேச்சளவில் நில்லாது, இன்பப் பொருளாலும் அறிவு விளங்கும் இடப்பெருமையாலும் பொருள் நிறைந்த பாடல்களைப் பண்ணெடும் பாடத் தொடங்குகின்றன. பேச்சோ பயனேக்கி எழுந்த ஒலி; பாட்டோ பயன் கருதாது இன்பப்பெருக்கால் வெள்ளப் பெருக்கெடுக்கும் இசை. பூ மன்றமன்றே அவ்விடம்? அங்கே வண்டுகள் இசைகூட்டுவதும் இயல்பே. தவளையின் ஒலியெல்லாம் "அரஹர" என்று ஒலிப்பதாக மனக்காதில் கேட்டு மனமுருகிப் பொன்னை இறைத்த வரகுணன் போன்று இறைவனிடத்தே பற்றேறி நின்ற அடியார்க்கு வண்டுகளின் ஒலியும் இறைவனது பாட்டாகின்றது. எவ்வொலியும் இறைவனெலியானல், வண்டினெலியும் அவன் பாட்டே யன்றே?

நிற்கும் திரு

மற்றைய பேறெல்லாம் அழிவனவாகும். இஃதோ நிலையான செல்வமாகும். இத்திரு உடைமையே கண்டோரால் விரும்பப்படும் தன்மை நோக்கமுடையதாகும்.

> கம்பமத யானைக் கழுத்தகத்தின் மேலிருந்து
> இன்பமருஞ் செல்வமு மிவ்வரசும் யான்வேண்டேன்
> எம்பெருமா னீசனெழில் வேங்கட மாமலைமேல்
> தம்பகமாய் நிற்குந் தவமுடையெ னவேனே.

கம்பம் - கட்டுத்தறி, அல்லது அசைவு, அல்லது நடுக்கம்; எழில் - அழகு; தம்பகம் - புதர்.)

தம்பகம்

செண்பகமரத்தின் சிறப்பினைக் கருதி இவ்வாறு எண்ணுகின்றேன் இல்லை. யான் வேண்டுவது இறைவனுடைய தொடர்பே யாதலின் செண்பகமாகாது திருவேங்கடத்தே சிறுபுதராயினும் அமையும். கண்ணன் தன் காதலிக்காக வானுலகில் நின்றும் பூமரமொன்றைக்

கொண்டு வந்தானல்லனோ! அஃதேபோலச் செண்பகத்தின் சிறப்பு நோக்கி அதனைப் பலர் வேரோடே பறித்தெடுத்துச் செல்லுதல் கூடும். ஆதலினால் அவ்வாறு பிரிக்கமுடியாத ஒரு புதராக இருப்பது மேலாம்.

தவம் பல செய்து தயங்குவார் பலர். இறைவனேடியையு பெற்றுத் திருவேங்கடத்தே எழுந்து நிற்கும் புதரே அவர்களைவிடப் பெருந்தவம் செய்துமுடிக்கின்றது.

### கம்பமதயானைக் கழுத்தகம்

தவப்பயனாக இறைவனோடே தொடர்பு பூண்ட சிறு புதரா வேனே அன்றிப் பேரரசாக எண்ணேன். அவ்வரசோடு செல்வம் தரினும் வேண்டேன். செல்வமிருந்தும் துன்புறுவாரைப் போலாது இன்ப மருஞ் செல்வ வாழ்வு எனக்கு வருவதேனும் அதனையும் விரும்பேன். ஆனைக்கழுத்தில் வாகைசூடிய அரசனாய் அஞ்சாது அமர்ந்திருந்து அதற்குத் தீனியிடும் அத்துணைப்பெருஞ் செல்வத்தோடு, அனைவரும் சூழ உலாப்போந்து இன்புறும் செல்வமே யாயினும், திருவேங்கடத் துச் சிறுபுதரை நோக்கப் புல்லியதே யாகும். இச் செல்வமும் சென் றொழியும் தன்மையதே; இவ்வரசு மிவ்வாறு சென்றொழியும் தன்மை யதே; தறியிற் கட்டிக் காத்தாலன்றி அடக்கியாள முடியாதபடி களிப் பேறிக் கண்டோர் நடுநடுங்கி ஓடுமாறு செருக்கித் திரியும் யானையின் கழுத்திலேறிச் செல்வதே செல்வமென்றால் அதனை யார் விரும்புவர்! அல்லும் பகலும் அறுபது நாழிகையும் இமைகொட்டாது கண்ணும் கருத்துமாய் விழித்திருத்தல் வேண்டும். சிறிது சோர்ந்தாலுங் களித்த யானை கீழே ஈர்த்து எறிந்து காலில் மிதித்துத் துவைத்துக் கொல் லும். இவ்வாறு அதன் கழுத்தில் நம்முயிரை வைத்துவிட்டு வாழ முடியுமா?

### இன்பமருஞ் செல்வம்

இன்பத்தை விரும்பி அந்நிலையில் நிற்கும் செல்வமே ஈதாகும். பிறர்க்கெல்லாம் அது இன்பமெனத் தோன்றலாம்; நமக்கு இன்பமே வேண்டுமெனும் வேட்கையும் தோன்றலாம். இன்பநிலையிலும் அம ரலாம். இன்பம் துய்த்தலோ எள்ளளவும் இல்லை. ஆதலின் இது இன்பமருஞ் செல்வமேயன்றி இன்பந்துய்க்குஞ் செல்வமன்று.

### எம்பெருமான் ஈசன் எழில் வேங்கடம்

இவ்வரச செல்வத்தினும் சாலப் பெரிய நிலையை அடைந்த மையாலே இறைவன், பெருமான் எனப் பெயர் பெற்றான். எமக்கு

எளிவந்தமையாலே எம்பெருமான் என யாம் அழைக்க எதிர் நின்ருன். எமக்கும் பெருமை தருகின்ருன். ஒருவன் துய்க்கும் இன்பமருஞ் செல்வமாகாமல் அனைவரும் இன்பமேயாம் செல்வம் இயற்கை ஒன்றேயாம். இயற்கையழகு எங்கும் பொலியும் எழிலார் வேங்கடத்தே எல்லார்க்கும் பொதுவாய் அவ்வின்ப அழகு விளங்குகின்றது, சென்றழியும் தன்மையதாகிய செல்வம் அங்கில்லை. அழியாத திருவுடையான் (ஈசன்) ஆதலினல் அவனை யடைந்தால் சென்றழியாத செல்வநிலை பெறலாம். அரசனுய்ப் பெருமையும் இன்பமும் செல்வமும் பெற்று வருந்துவதினும் திருவேங்கடத்தே திருமாலோடு சிறுபுதராய் நின்று தொடர்பு பெற்ருல் அன்பர்களாகிய பெருமையும், அழகிலூறும் இன்பமும், திருவளர் செல்வமும் பெற்றுவாழ்வோம்.

தவமுடைய னுவேனே

புதராய் யாலடி தோய்ந்த மண்ணை வேரால் முகரினும், ஆண்டவனுரது உடல்மீது படிந்த நீரைப் பருகினும், அவர்மேல் வீசிய காற்றை உட்கொள்ளினும் இன்பமாம் அன்ருே? தவம் செய்யும் போது தனியின்பம் பெறும் வழி ஈதன்றி வேறென்னை? இதுபோது இந்நிலை கிடைக்காமற் போனுலும் பின்னொருகால் புதராதற்கேற்ற நோன்பு நோற்றவனுக ஆனுலும் அதுவே சாலும்.

> மின்னனைய நுண்ணிடையார்
> மேனகையோ டுருப்பசியும்
> அன்னவர்தம் பாடலொடு
> ஆடலவை யாதரியேன்
> தென்னவென வண்டினங்கள்
> பண்பாடும் வேங்கடத்தே
> அன்னனைய பொற்குவடாம்
> அருந்தவத்தெனு வனே.

(மின் - மின்னல்; அனைய - ஒத்த; நுண் - சூட்சுமமான, மிகச் சிறிய; இடையார் - இடையை உடைய பெண்கள்; அன்னவர் - ஒப்பானவர்; ஆதரியேன் - விரும்பேன்; தென்ன என - ஒலிக்குறிப்பு; அன்னனை - அதற்கு அஃதே ஒப்பான)

பொற்குவடாம் அருந்தவம்

காடடர்ந்த மலைமீது காட்டுத் தீயானது கடுகக்கனன்று எரியுமாதலின் இப்புதர் பலவும் பொசுங்கிப் போகுமன்ருே? ஆதலின், உயிருள்ள நிலைத்திணைப் பொருளாகாது உயிரிலாத நிலைத்திணைப்

பொருளாம் கல்லாக மலைமேல் கிடப்பின் அதுவே பெரும் பேறும். மலையோடு மலையாய் அதிலொரு குவடாதலும் இறைவனோடு ஒன்று படுதலாம். உயரநிற்கும் அதனினும் உயர்நிலையாவது யாது? நுண்ணியதாய் முடிந்த அறிவுநிலை யன்றோ அது? அப்பொற்குவடோ தன்னைத் தானே ஒத்தது (அன்ன அனையது.) அதற்கு அஃதே ஒப்பாவதல்லது வேறொன்றும் இணையாவ தில்லை. உலக முதல்வ-னின் இருப்பிடமாய மலை இன்ப இருப்பே யாகும். அதற்கு ஒப்-பிருப்பின், உண்மை யறிவின்பமான பொருள் ஒன்றன்றிப் பல-வாகும். பலவாயபோது ஒருபொருளும் உண்மையறிவின்ப வடிவின தாகாது. ஒரு பொருள் உள்ள இடத்தில் ஒரே பொழுதில் மற்றொரு பொருள் இருத்தல் இயலாது. ஆதலின் ஒரு பொருள் மற்றைய பொருள் அளவில் உண்மைகுறைந்து விளங்கும்; எங்கும் உள்ள பொருள் என இயம்புதற்கில்லை. அன்றியும், இரண்டு என்ற இடத்தே மனவுரிமைக் கேற்ற மனமாறுபாடு உண்டு; அச்சமும் துன்பமும் அங்கே பிறக்கும். ஆதலின் இன்பம் இல்லையாம். ஒருவரது உள்ளத்தறிவினை மற்றொருவர் அறிதல் இயலாமையின், அறிவும் அந்நிலையில் குறைபடும். ஆதலின் உண்மையறிவின்ப வடிவான நிலை ஒப்பற்றதேயாம். வேங்கடமென்பது முன்கூறியபடி மாலுலக மெனும் ஓர் உயரிய நிலையைக் குறித்தலின் அதற்கு ஒப்புயர்வு இல்லையன்றோ? அம்மாலுலகே நம்பொருட்டு மலையுருக் கொண்டாற்போல்வது இயற்கையழகு மிக்க வேங்கடமலை. ஆதலின் அம்மலையின் குவடு ஆதலினும் அருந்தவப்பேறு வேறுண்டோ?

### தென்ன என வண்டினங்கள் பண்பாடும் வேங்கடம்

தென்ன தென்ன என இயற்கையொலியோடு இசை கூட்டித் திரியும் வண்டினங்கள் அறிவுமலையில் வாழ்தலின் பயனைப் பொருள் நிறைந்த பாடலைப் பண்ணோடு மியையப் பாடுகின்றன. தென்ன என்பதற்குத் தென்னாடுடையவன் என்பதன்றோ பொருள்? தமிழ் நாட்டின் எல்லையாகிய வட வேங்கடத்திலே வாழும் வண்டுகள் அச் செருக்கால், தமிழ்நாட்டுத் தமிழ்க் கடவுளாய்த் தமிழர்க் கருள்செய்யும் தகுதி நோக்கி (திருவாதவூரர் ''தென்னாடுடைய சிவனே போற்றி'' என்று பாடியது போல)த் தென்னாடுடைய திருமாலே எனப் பாடுகின் றன. அன்பர் திருச்செவிக்கு அவ்வொலியும் அத்தகைய உயரிய பாடலாகக் கேட்கின்றது. அவ்விசையின்பத்தாலே மண்மலையும் பொன்மலையாகப் பொலிவுறுகின்றது.

இவ்வாறு மண்ணும் பொன்னுகப் (பொலிவு) பாடியாடும் வண்டுகளின் பாடலேக் கேட்டு மண்ணுடலைப் பொன்னுடலாக்காது புலையுடலிற் புகுந்தலேந்து பொன்னுட்டிற்போய் வானரமகளிரின் பொருத்தமிலா ஆடலும் பாடலும் கேட்டுமகிழ விரும்புதலும் அறிவுடையோர் செய்கையோ?

### ஆடலும் பாடலும்

பெண்களின் பேரழகும் பெருமாளின் இன்பநிலேயைக் கண்ணெதிரே காட்டுகின்றது. எவ்வுலகினரும் எம்மொழியினரும் இயற்கையில் அறிந்து துய்க்கும் வகையில் இறைவனது இன்பவடிவமாய்த் தோன்றுவன ஆடலும் பாடலுமேயாம். இறைவன் வடிவமே அந் தமிழின் இன்பப்பாடல் என்பர். ஆனுல், இவை இறைவன் இன்பத்தை நினேப்பூட்டாதபோது இடும்பையே தருகின்றன. செந்தீ நமக்கு அடிசிலேயும் அமைத்துதவுகின்றதும், சிறிது சோர்ந்தால் உடலேயும் எரித்துவிடுவது மாகின்றது. அது தீயின் தீமையன்று; அஃது அத்தீ நின்ற நிலேயைப் பொறுத்தது. அதுவேபோலப் பாடலும் ஆடலும் அழகும் இன்பமும் நின்றநிலேயை நோக்குதல் வேண்டும்.

### மின்னனேய

இவ்வுலகில் நமக்குத் தோன்றும் அழகும் அறிவும் விரைந்து மின்னல் போன்று விளங்கி எழுந்து மறைகின்றன. பெண்கள் அழகும், நம் கண்கள் மின்னிப் போமாறு விளங்கி மனத்துள் மறைகின்றது. ஆடல் பாடலின் அருங்கருத்தும் அவ்வாறே மின்னல்போன்று விளங்கி மறைகின்றது. இவை மின்னி மறையாது எப்போதும் பேரொளியாக விளங்கி நின்ருல் கடவுள் நிலேயை அடைந்தவராவோம். விரைந்து குதித்தாடும்போது அவ்வழகிய ஆட்டக் குறிப்பும் விரைவினுல் மின்னல்போல விளங்கித் தோன்றுகின்றது. பாடலிலும் இசை உருள்கின்ற இன்னிலேயும் இன்பமும் மின்னலெனப் பொலிவது கேட்டின்புறுகின்ருேம். (மின்னனேய என்பதனே, அண்மையில் நின்ற இடையார் என்பதோடேனும், சேய்மையில் நின்ற ஆடல்பாடல் என்பதோடேனும் கூட்டலாம் அன்ருே? இரட்டுற மொழிந்து பொருள் கொள்வதும் பொருத்தமேயாம்).

### நுண்ணிடையார்

பெண்கள் மென்மையும் சாயலும் ஏரெழிலும் உடையராய் இருந்தும் மின்னெனப் பொலியும் நுண்ணிய இடையினே உடைய

பெண்கள் என்றே உலகினரால் புகழப்படுகின்றனர். இடையார் என்பது இடக்கரடலக்கலாய்க் காதற்கழிவிடம் என்ற குறிப்புப் பொருள் தந்து நிற்கின்றது.

மேனகை

அருந்ததி முதலானோர் பாடல் இறைவன் வடிவினதாகும். மேனகை முதலானவரைப் போன்றவரது பாடல் காதற்குறிப்புடைய தாகவே விளங்கும். அப்பொது மகளிரிடம் கடவுளுருவாம் அழகு, அவா வடிவினதாகக் காணப்படுகின்றது. விலைபெருத அழகினையும் பாடலையும் ஆடலையும் விற்று அவற்றைக் கொல்லும் மறவர் அல் லரோ அப்பரத்தையர்? அன்னோர், தம்முடலையும் ஆடலையும் சிறிது தோன்றச் சிறிது மறைத்து, மின்னிப் பொலியச் செய்து பிறரைத் தம் வலையிற் சிக்கச் செய்யும் இயல்பினர் ஆதலின் அவர்களிடத்தே அவற் றின் உண்மையியல்பினை அறிதல் இயலாது. அவை ஒப்புயர்வற்று விளங்கினாலும் பொதுமடந்தையரது புன்மை நிலையில் நின்றமையால் இகழ்தற்குரியன வாம். மின்னலானது பேரொளியாய்ச் சிறிது போது தோன்றி உடனே மறைந்திட இருள் சூழ்தல்போல இப்பெண்களதழ கும் பாடலும் ஆடலும் துய்க்கும்போது பேரொளியாய் மின்னி உடனே அழிதலினால் இருளே நம்மைச் சூழ்கின்றது. அந்நிலையில் கழிவிரக் கமே கொள்கின்றோம். கடவுள் நிலையாகிய அன்புநிலையிலோ, உள் ளினும் உவகை பெருகுதலின் அங்குக் கள்ளினும் காமம் இனிதா கின்றது.

புன்மைநிலை இத்தகையது. அடியாரது ஆடலும் பாடலும், அவ் அடியார்போன்ற வண்டுகளின் ஆடலும் பாடலும் இறைவன் உருவினவேயாம். ஆகவே வண்டின் ஆடல் பாடல் கண்டு கேட்டு வேங் கடத்தே பொலிவுபெறும் அழகினைக் காண்பேனே யன்றிப் பொன் னுலக மாதர் போன்றோரின் பொய்ப் பாடலையும் பொய்யாடலையும் கண்டு கேட்டின்புறுவ தில்லை. அவற்றை வெறுப்பதன்றி விரும்புவது எந்நாளுமாகாது,

> வானாளும் மாமதிபோல் வெண்குடைக்கீழ்
> மன்னவர்தம்
> கோனாகி வீற்றிருந்து கொண்டாடும்
> செல்வறியேன்
> தேனார்பூஞ் சோலைத் திருவேங்
> கடமலைமேல்
> கானாருய்ப் பாயும் கருத்துடையென்
> ஆவேனே.

(மா - பெரிய; மதி-சந்திரன்; மன்னவர்கோன்-அரசர்க்கரசன்; வீற்றிருந்து - பெருமையோடு இருந்து; செல்வு - செல்வம்; கருத்து - எண்ணம்.)

**கானுறு**

தரையின் நடுக்கத்தினுல் மலையின் குடுமிகள் பிய்த்துக்கொண்டு போதல்கூடும். பொன்மலையின் நின்றும் முக்குடுமிக் குன்றம் சிதறுண்டு காற்றில் தெற்கே பறந்தோடிய கதை யாவரு மறிந்த தொன்று. அன்றியும், கல்வேண்டுவார் வெட்டி எடுத்தும் போவர். இவ்வாறு அழிதல் ஒருபுற மிருக்க, உயரக்கிடந்தால் ஒருவர்க்கேனும் பயன்படுதல் கூடுமோ? பயன்படவேண்டு மானுல் கானுருக மக்களையும் மாக்களையும் தேடி விரைந்தோடி மேலிருந்து கீழிழிந்து வருதல் வேண்டும்.

**மதிபோல் மன்னவர்கோன்**

இவ்வாறு எல்லோர்க்கும் உதவுவதை ஒழித்து நாட்டில் பலரும் காண உலகத்திற் கொருவன் எனச் செருக்குநின்று, திங்கள்போன்றதொரு வெண்கொற்றக் குடைக்கீழ் உலகினை ஆண்டுவருதலால் ஒரு பயனுமில்லை. முற்றும் வளர்ந்த பெருந்திங்கள் வானுக்கு ஒருவனுய் நின்று பல வான் மீன்களின் ஒளியையும் ஒடுக்கி விளங்குகின்ருன். இஃதே போல, மன்னவனும் பல சிற்றரசர்கள் சூழ அவர்களின் தலைவனுக வீற்றிருத்தலும் கூடும். அதனுல் ஆய பயன் என்னை? திங்கள் வானை யாள்வதும் ஒரு தோற்றமேயாம்; அஃது என்றுமில்லையாம். அதுவேயுமன்றிப் பல வான்மீன்கள் திங்களிலும் பெரியனவாய் உண்மையில் இருப்பினும் அவை நமது அருகாமையில் இல்லாமையால் சிறியவையாய்த் தோன்றுகின்றன. அதுவேபோல உலகிலும், அடியவர் முதலானேர் வெளிப்பகட்டின்றி உள்ளடங்கி நிற்கின்றனர். அவர்க் கெல்லாம் அரசனுக ஒருவன் வீற்றிருப்பது அவனுடைய பெருமையைக் குறிக்காது அவனது பொய்ம்மையினையும் வெற்றாரவாரத்தினையும் குறிக்கின்றது. நிறைந்த திங்கள் குறைந்தும் மறைந்தும் போவதுபோல இவ்வரசர்களது வீறும் குறைந்து மறைந்து போவதாம். யானே ஒரு கோனுக வீற்றிருந்தும் இதனை ஒரு கொண்டாடத்தக்க செல்வமாக என்றும் அறிந்ததில்லை. போற்றிகள் பலர் இதனைப் புகழ்ந்து கொண்டாடுவது, செல்வமாய அஃது, அவர்கள் வாயில் நீருறத் தித்திப்பதாலே என்பதன்றி உண்மையறிந்தனர் என்பதில்லை.

**பாயும்**

தன்னலம் பாராட்டிப் பிறரை அடிமையாக்கிப் பொய்வாழ்வு வாழ்வதைவிட நாட்டைவிட்டுக் காட்டில் புகுந்து, வலக்கையிடுவது இடக்கையறியாதபடி மறைந்து நின்று மக்களுக்கு உதவுவது உண்மை வாழ்க்கை என உணர்ந்து காக்கும் காறுருய்ப் பாய்வேன். அரசனைப் போல வீற்றிருத்தலை விட்டுக் காட்டில் வாழும் எளியார்க்கும் எளிவந்து விரைந்து மறைந்து ஓடிப் பயன்பட விரும்புவேன்.

**கருத்து**

அழகிய வேங்கட மலைமேலே திருமலையோடு தொடர்பு பெற்றுத் தேனூர்பூஞ்சோலை இடையே ஓடுவதைவிட உயரிய இன்பம் வேறு ஒன்று உண்டோ? சொல்லும் செயலும் உள்ளத்தின் வழிதயாதலின் இவ்வெண்ணம் எனக்குண்டாயின் அதுவே பெரும்பேருதம். திண்ணிய எண்ணமானல் எண்ணிய எண்ணியாங் கெய்துமன்றோ?

பிறையேறு சடையானும் பிரமனு
மிந்திரனும்
முறையாய பெருவேள்விக் குறைமுடிப்பான்
மறையானன்
வெறியார்தண் சோலைத் திருவேங்
கடமலைமேல்
நெறியாய்க் கிடக்கும் நிலையுடையெ
னவேனே.

(வேள்வி—யாகம்; குறை முடிப்பான்—இடர் தீர்த்தலும் வேண்டியது தருதலும்; மறை—வேதம்; வெறி—வாசனை; நெறி—வழி).

கான் ஆறு வற்றிக் கானலாய் மாறலாம். அப்போது அது யாருக்குப் பயன்படும்? ஆதலின் கானுருதலைவிட எல்லோரும் நடந்து செல்லும் வழியாதல் மாண்புடைய தாகும்.

**பிறையேறு சடையான்**

உலகில் உயர்நிலைமையில் நின்றவர் யாவர்? நோன்பு நோற்றுப் பெரும்பேறு பெற்றுத் தானழியாதிருத்தலோடு, தன்னை அடைந்தாரும் அழியாவகையில் தவநெறி நின்றவன் ஒரு தொல்லைப் பெரியோன். அவனுடைய சிக்குத் தலை அவனது தவப்பொலிவைக் காட்டி நிற்கின்றது. அழியா இளம்பிறையோ அவனையடைந்தார் என்றும் இளையராய் இருத்தலைக் குறிக்கின்றது.

பிரமன்

கல்வியிற் பெரிய மூதறிஞனும் உலகில் உயர்ந்தவனே அல்லனே?

இந்திரன்

செல்வத்திற் சிறந்த திருவாளனே பலர் நேரிற் காணும் கடவுள். செல்வமுடைமையா லன்றோ அவன் இந்திரன் எனப் பெயர் பெற்றான்?

முறையாய வேள்விக்குறை முடிப்பான்

உயர் நிலை நின்றவர் உலகினிற்கு உதவுகின்ற நிலையில் அன்றோ பெரியோர் எனப் புகழப்படுகின்றனர்? எனவே, இம்மூவரும் உயர்நிலையில் நிற்பதற் கேற்ப முறையே நோன்பு, கல்வி, செல்வம் என்ற வகையால் உலகிற்கு உதவுவர் அல்லரோ? பிறர்க்குதவும் நிலையே பெருநிலையாகும். உதவி என்னும் வேளாண்மையில் ஐம்பெரு வேள்வியும் அடங்கும். அதுபற்றியன்றோ அவ்விடத்தே "வேள்விப் பயன்" என்ற சொற்றொடரை வள்ளுவர் பயன்படுத்திக் கொள்ளுகின்றார்? வேள்வியிற் பெரிய வேளாண்மை செய்தொழுகும்போது முற்றிய நோன்பும், முற்றிய கல்வியும், முற்றிய செல்வமும் இறைவனிடத்தன்றி எம்மிடத்தில்லை என இரங்குகின்றோம். ஆதலின், அங்கு நேரும் குறைகளை யெல்லாம் குறைவிலா நிறைவாம் இறைவனே முன்னின்று முடித்தல் வேண்டும்.

மறையானன்

ஆனால், தோன்றாத் துணையாக மறைவாய் நின்றன்றோ நம் குறையை முடிக்கின்றான் அவன்? உயிர்கள் தாமே தொழில்புரிந்து முன்னுக்கு வரவேண்டுதலின், தானே எதனையும் நேரில் செய்யாது, பின்னின்று அவர்களே ஆகியும் அவர்களை ஏவிவிட்டும், மறைந்து நிற்கின்றான்.

குறை முடிப்பான்

அன்றியும் எப்பொருளும் இறைவனே யன்றோ? அந்நிலையில் எச்சொல்லும் அவனையே குறித்தல் வேண்டும். திருமறையின் ஒலி வடிவம் திருமாலின் வடிவமேயாகும். இந்திரன் முதலியோரது பெயர் அத்திரு மறையில் பயின்றுவரினும் அம்மொழிகளனைத்தும் முதல்வனையே குறிக்கின்றன. ஆகவே, அத்திருப்பாட்டுக்களின் பயனைத் தருபவனும் ஆண்டவனே யாவன். இவனே எதனையும் இயற்றியருளுபவன்.

இந்திரன் முதலியோரை முன்னிட்டு இயற்றப்படும் பெரிய வேள்விகள், வேள்விவேட்போர் விரும்புவனவற்றைத் தந்துதவி, வெறுப்பனவற்றை நீக்கி யருளுகின்றன ; இறைவன் மறை ஒலியாய் நின்று எல்லாமாய் விளங்கும்போது, பிறருடைய பெயர் கொண்டு செய்த வேள்வியும் இவனையே சார்தலின் இவனே பயன் தருகின்றான்.

அன்றியும், எல்லோரினும் சிறந்து விளங்கும், இந்திரன் முதலியோர் இயற்றும் வேள்விகளுக்கும் இவனே பயன் தருவோன். தம்மை நோக்கிப் பலர் வேள்வி வேட்கச் சிறந்து நின்ற பெரியோர் எனப் பெயர் பெற்றவர்கள் எல்லாம் தம் குறைமுடிய இவனை நோக்கி வேள்வி வேட்கின்றனர்.

இந்திரன் முதலிய அனைவரும் உலகினர் செய்யும் வழிபாடனைத்தும் இறைவனைப்போயடைதற்கு ஒருவழியாக விளங்குகின்றனர். அவனை யன்றி அவர்களுக்கென ஒரு தனிச் சிறப்பும் இல்லை.

நெறி

அத்தகையோரும் ஒருவழியேயோகி நின்றபோது, யானும் ஒருவழியாக ஏன் ஆதல் கூடாது ? அவர்களோ, தாம் ஒருவழி என்பதை மறந்து உயர்ந்தோர் எனச் செருக்கித் திரிகின்றனர். யானோ அச்செருக்கென்பது சிறிதுமின்றி மலைவழியாகக் கிடப்பேன். இஃதே பெரு வாழ்வாகும். இஃதே நிலைபேறனதொரு பெருஞ்செல்வமாகும்.

பூம்பொழிற் சோலையின் புதுமணத்தைப் புனைந்துரைக்கப் போமோ? உள்ளேபுகுந்தால் உள்ளமும் உடலும் குளிரு-மாறு உள்ளூறக் குளிர்ந்திருக்கும் ஒப்பற்ற நிலையினை உரைத்த-லாகுமோ? பிறவி வெப்பத்தினின்றும் நீங்கிப் புகுவதற்குப் பேரின்பப் பொழிலாவது ஈதேயன்றோ?

செடியாய வல்வினைகள்
    தீர்க்குந் திருமாலே
நெடியோனே வேங்கடவா
    நின்கோயி லின்வாசல்
அடியாரும் வானவரும்
    அரம்பையரும் கடந்தியங்கும்
படியாய்க் கிடந்துஉன்
    பவளவாய் காண்பேனே.

வல்வினை

நாம் செய்வனவும் சொல்வனவும் எண்ணுவனவும் நமது உள்ளத்தே நம்மையும் அறியாது நிழலிடுகின்றன. அந்நிழலோ, அழியா நிலைபெற்று விளங்குகின்றது. அந்நிலையில் அது வலியதாகும். நாம் யாதேனும் ஒன்றைச் செய்யப்புகுந்தால் முன் நம் மனத்தில் நிழலாய் விழுந்தவையனைத்தும் நம் செயலை மாற்றி யமைக்கின்றன. முன்னரே ஒருமுறை அச்செயலைச் செய்திருப்பானாயின் பின்னர் அதனைச் செய்வது ஒருவனுக்கு எளியதாகின்றது. முன்னர் எண்ணிய எண்ணங்களும் பேசிய பேச்சுக்களும் அங்ஙனமே உதவுகின்றன. உள்ளம் எங்ஙனம் இயங்குகின்றதோ அங்ஙனமே நம் உடல் இயங்குகின்றது. உள்ளமோ, பழைய எண்ணம் செயல் பேச்சு என்பவற்றின் மணம் போகாதவொரு பெருங்காயக் குடுக்கையாகும். நமது செய்வினை யனைத்தும் அவ்வுள்ளத்தை மாற்றியமைப்பதால் அவ்வுள்ளத்தின் இயக்குமுறையும் அதற்குத் தக மாறிவிடுகின்றது. நம்மறிவும் நுகர்வும் செயலும் முன்னைய நிலைமைக்குத் தக்கனவாகவே இருக்கின்றன. வினையின் பயனை வினை என்று பேசத் தொடங்கினர். நல்வினையினும் தீவினையே வலியதாகும்.

செடி

முட்செடி முதலியவைகளைப் போன்று புதராகச் சுற்றுமுற்றும் விரைந்து பரவுவன வல்வினைகள். ஒரு தீய தொழிலினைச் செய்வதென்றால் முதலில் உள்ளம் உடன்படுவதில்லை. ஆனால், ஒருமுறை செய்தபின் அவ்வழக்கத்தால் மறுமுறை செய்துமுடிப்பது எளிதாகின்றது. தீமையானது, இவ்வாறு உள்ளத்தே ஊறி ஊறி வலிவடைகின்றது; பெருநோ யாகின்றது.

தீர்க்குந் திருமால்

கண்டவரை மால்கொள்ளச் செய்யும் கடவுளது அருள்வடிவாம் அழகினை எண்ணி உள்ளம் மாறி உண்மையன்பு உருவினரானால் மருந்துபாய்ந்த உடலினின்றும் நோய் பறந்தோடுதல்போல் வல்வினைகளும் பறந்தோடுகின்றன. மருளாடிப் பேயும் நோயும் ஓட்டுவாரைப் போல, அருள் ஆடி உள்ளத்துப் பேயினையும் உள்ளத்து நோயினையும் ஓட்டுகின்றான் ஆண்டவன். உள்ளம் மாறுதலே வேண்டப்படுவது. வல்வினையின் வழக்கம் இருள்போலப் பரவியிருந்த உள்ளத்தே அருளாளனின் மால்வடிவம் ஒளியாகப் பரத்தல் வேண்டும்.

நெடியோன்

வல்வினை கிடந்த உள்ளத்தே அடியார்க்கடங்கி ஒரு குறியனாய் உட்புகுவான். ஆனால், அவனே உள்ளத்தையும் உலகத்தையும் கடந்துநின்ற நெடிய னுவான்; வல்வினையையும் கடந்து நீண்டவ னுவான்.

வேங்கடவா

நீண்டவனது நெறிநின்றால், அவர் நெஞ்சத்தே வந்து நிலைத்தலை நமக்கு அறிவுறுத்த, நம்மெதிரே கைக்கெட்டிக் கண்ணுக் கெட்டித் திருமலையாய் நீண்டான். அவனுடைய அழியாப் பெருங் கோயிலி னுள்ளே யாரேவாராதவர்? எல்லாமாய இறைவனிடத்தே பொருளும் இயங்குகின்றன. நல்லார்க்கும் பொல்லார்க்கும் நடுநிலை நின்றவன் அவனேயல்லனோ? அன்பு வடிவானவரும், அவா வடிவா னவரும் அவனை எண்ணி அவ்விடம் புகுகின்றனர். தீதில் நன்னெறி நிற்கவே வேண்டுவேன். அவாவாய்ப்பட்டு அவனை அடைவாரோடு அளவளாவுவ தில்லை. எத்திறத்திலும் யாரோடும் கூடுவதில்லை. ஆனால் ஆண்டவன் திறத்தில் யாரொடும் கூடுவேன். இவ்வேழை மாக்களும் இறைவா என்றால் இவர்களை என் முடிமேல் ஏந்திக்கொள் வேன். இறைவன் இன்னோர்க்கு மேலும் உயர்ந்துநீண்டு இன்னார் இனியார் என்னாது இன்பமழை பொழிவது போல, யானும் இன் னோர்க்குக் கீழே இழிந்து இன்னார் இனியார் என்னாது, இவர்களது அடித்துகளில் மூழ்கிக் குளிப்பேன்.

அடியவரே அன்பு நிலையினர். உலக இன்பத்தின் எல்லையா வது வானுலக இன்பமேயாம். பெரியதோர் இன்பமெனப் புலவன் களுக் கண்டதனை வானுலகம் என வழங்கலாயினர். அவா நெறி நின்றவர்கள் வேண்டுவது அத்தகைய இன்பமேயாம். அவ்வாறு வானுலக இன்பத்தை வேண்டிநிற்பார் இறைவனருள் பெற்றபோது வேண்டிய வேண்டியாங் கெய்துதலால் மண்ணவரும் வானவ ராகின் றனர். உலகினர்கள் அவாவழியாக ஆண்டவனை யடைந்தபோது அவா நிறைவேறப்பெற்று ஆண்டவனையும் அடைகின்றனர். ஆத லின் அவர்களை வானவர் என்றும் அரம்பையர் என்றும் வழங்கலாம் அன்றோ? அன்புநிலைநின்ற அடியார் வழிபட அவரடி தொழுவேன். இன்பநிலை நின்ற வானவர் வழிபட அவரடி தொழுவேன். அழகு நிலைநின்ற அரம்பையர் வழிபட அவரடி தொழுவேன். இதற்கு மாறாக வானவரது செல்வப் பொலிவாம் அழகினையும், அரம்பையர்

இன்பத்தையும் வேண்டி நிற்பவ னல்லேன். ஆனால், அன்னோர் தத்தமக்குப் பொருந்திய நிலையில் நின்றபோது, அவர்களது இன்ப நிலையும் அழகு நிலையும் இறைவன் வழிபாட்டால் பொலிவுபெற்ற போது, அவர்களுடைய அடிந்துகளாய் ஆராவின்பம் துய்ப்பேன்.

முன்பாட்டில், நெறியாய் நிற்கவேண்டினேன். நெறியாய் நின்றால் அடியா ரனைவர்க்கும் பயன்படுதல் ஒருதலையாக இல்லை. மலையோ பெரிதாகலின் அதனுயரச் செல்லும் நெறியும் பலவாகலாம அன்றோ? உலகினர் அனைவரும் ஒருவழியே போவார் என்பது என் றும் இல்லையே! ஆனால், கோயிலின் உள்வாயிற்படியாய் அமைந் தால் அதைத் தாண்டாது இறைவனை எவரும் காண இயலாது. ஆத லின் அப்படியாய் நின்று அனைவர்க்கும் பயன்படுவேன். தொண்ட ரடிப்பொடியாட நான் பெறுவேன்; செவ்விய திருவாயின் சீரழகைக் கண்டுகொண்டே நிற்பேன். அலையாத உள்ளத்தோடு அசைவின்றி அல்லும்பகலும் அவனருகே, அறிதுயில் நிலையில் அமர்வேன். (திரு மாலின் கோயில்களில் உள்வாயிற் படி "குலசேகரப்படி" என வழங் கப்படுகிறது. ஆழ்வாரின் வேண்டுகோள் நிறைவேறிவிட்டது போலும்.)

உம்பருல காண்டு ஒருகுடைக்கீழ் உருப்பசிதன்
அம்பொற் கலையல்குல் பெற்றாலு மாதரியேன்
செம்பவள வாயான் திருவேங் கடமென்னும்
எம்பெருமான் பொன்மலைமேல் ஏதேனும் ஆவேனே

மேலுலகம் அனைத்திற்கும் ஒரு தனியரசனாய் ஒப்பற்றதொரு வெண்கொற்றக் குடைக்கீழ் வீற்றிருந்து அரசாளும் செல்வம் பெறி னும் யான் வேண்டேன். வானுலகில் அர மகளிரின் தலைவியாகிய உருப்பசி அழகிற் சிறந்தவள். அவ்வழகுக் கழகு செய்ததுபோன்ற அழகிய பொன்னுடை யணிந்த நல்லிடையாளின் இன்பமனைத்தும் பெறினும் யான் வேண்டேன், செல்வமும் வேண்டேன் அதற்கேற்ற இன்பமும் வேண்டேன்.

வானவரது பெருமை இறைவனது வழிபாட்டால் நிறம்பெற்ற போது அவர்களது திருப்பணியில் மால்கொண்ட உள்ளத்தனாய் அன் னாரை வழிபடுவேன். ஆனால், அவர்களது மற்றைய பொய்ச் செல் வத்தினை ஒருபொருளாக எண்ணேன். ஏரெழிலோடு விளங்கும் இள மங்கையர் ஆண்டவன் வடிவெனும் அழகு நிலை நின்று அவன் வழி யாகிய அறவழியில் இன்ப அன்போடு இல்லறம் நடத்தினால் இறை வனும் அருள் செய்வான்; அந்நிலையில் அவரடி வீழ்ந்து வணங்கு வேன், ஆனால், அவர்களைக் காதற் கழிவிகிமாகக் கருதேன்.

அரச செல்வமாவது குடையும் கோலுமாம் வெளிப் பகட்டே யன்றோ? உருப்பசி இன்பமாம் உடையும் இடையும் வெளிப்பகட்டே யல்லவோ? உள்ளூறப் பாயும் இன்பம் இறைவனது இயற்கை யின்பமேயாம். அடியவரோ கருவானத்தின் பெருநிழலில் வாழ்வார். அரசனோ ஒரு குடையின் சிறுநிழலில் வாழ்வான். அடியவரோ, பெண்ணழகைப் பெருமாள் வடிவாகக் காணும் கண்படைத்தவர்கள். அரசரோ, பெண்களில் உள்ளத்தும் உடலிலும் ஒளிர்கின்ற ஒப்பற்றவனைக் காணாது அவர்களது உடலின் உறுப்புக்களைக் காதற் கழிவிடமாகக் கருதிக் காலம் கழிப்பர்.

செக்கச் சிவந்த திருவாயினையுடைய மாதரின் அழகை யெல்லாம் எம்பெருமானது செம்பவள வாயிலே காணலாம் அன்றோ? அவ்வாயில் அன்றோ அருள் ததும்புகின்றது?

அப்பிறவி வேண்டும், இப்பிறவி வேண்டும் என அடியேன் மன்றாடுவது ஏன்? படியாய்க் கிடப்பதும் பண்பன்று. அழகினை யறியாத செல்வச் செருக்கினர், கல்லினை யிகழ்ந்து கற்படியைப் பொற்படியாக்கப் புகினும் புகுவர் (காசிக்கோயிலில் செல்வர்கள் கல்லிற் பொன்னைப் புதைத்துவைத்துப் பாழாக்கியிருப்பதைப் பற்றிக் காந்தியடிகள் முறையிடுகின்றனர் அல்லரோ?) பொன்னால் மூடப்பெற்றால் உள்ளே கல்லாய்க்கிடந்து சிறையிருந்து கடவுளைக் காணாது கதறவேண்டி வருமன்றோ? அம் மலை முழுவதும் அவன் பொலிவு பெருக்கெடுத்தோடுவதால் அம் மலை பொன்மலையே என்பதையுணராது 'மைடாஸ்' போன்றவர் எங்கும் பொன்வேய்ந்தாலும் வேய்வர் ஆதலின் படியாதலும் அடியவரின் பாங்கன்று.

ஒவ்வொரு பொருளையும் எண்ணி எண்ணிக் கழித்துக்கொண்டே போதலால் பயன் என்ன? எல்லாம் அறிந்த இறைவன் யான் ஏதாக வேண்டும் என்பதை அறியானோ? ஏதேனும் அம்மலைமேல் ஆவேன். யானும் அறிய வேண்டா; திருமலை யுடையானும் அறிய வேண்டா; திருமலையிலே யுள்ளதொரு பொருள் எதுவாயினும் அமையும். சிறு துகளேயாயினும் ஒன்றே; பெருமாளே யாயினும் ஒன்றே.

மீனாகவும் குருகாகவும் பிறக்கவேண்டுவ தெல்லாம் வீடு பெறற்குரிய பாங்காய பழவடியாராக விளங்கவேண்டியே என்பதனைக் கடைசிப்பாட்டு நன்கு எடுத்துக் காட்டுகின்றது.

மாடாக நிழற்றுசெழு மரனுகத் தவச்சிறிய
பூடாகக் குழைத்தநறும் புதலாக வழிப்படுமோ
ரோடாகப் பெறுவமெனி லுயிர்காள் நற்கதிபெறலாம்
வீடாகத் திருநெறிமால் வீற்றிருக்கும் வேங்கடத்தே

என்று பின் வந்த வீரராகவ முதலியார் தமது திருவேங்கடக் கலம்பகத்தில் கூறிய கருத்துடைய இத்திருமொழியைப் படித்தவர்களும் அடியவரே யாவர். இங்ஙனம் ஆழ்வாரே உறுதி கூறுகின்றனர். இத்திருமொழியின்உண்மைப் பொருள் உணர்ந்தவரே இவ்வுறுதியுடையவர் ஆவர். மற்றவர்கள் இத்திருமொழியைப் பிதற்றுரை என இகழ்வர். ஆழ்வார்க்கு இருந்த உறுதியை என் என்பது !

மன்னிய தண்சாரல் வடவேங் கடத்தான்தன்
பொன்னியலும் சேவடிகள் காண்பான் பரிந்திறைஞ்சிக்
கொன்னவிலும் கூர்வேல் குலசே கரன்சொன்ன
பன்னியநூல் தமிழ்வல்லார் பாங்காய பத்தர்களே.



மீரா பிரிண்டர்ஸ் ● 276-வடக்கு மாசி வீதி ● மதுரை-625001